# ஆலயம் தொழுவது



# சாலவும் நன்று

## குருசுப்ரமணியம்

விற்பனை உரிமை :

**சரசுபதிப்பகம்**

44, இராமலிங்கேஸ்வரர் கோயில் தெரு,
வன்னிய தேனாம்பேட்டை,
சென்னை-600 018.

முதற் பதிப்பு : டிசம்பர், 1996


ஆசிரியர் முகவரி :

குருசுப்ரமணியம்

27-D, அண்ணா நகர்,

கிணத்துக்கடவு-642109 கோயம்புத்தூர்.



"This Book is Published with the Financial Assistance of Tirumala Tirupati Devasthanams Under their Scheme Aid to Publish religious book"

**விலை : ரூ. 40-00**

அச்சிட்டோர் :

மெர்க்குரி அச்சகம்

24, பஜார் ரோடு, மயிலாப்பூர், சென்னை-600 004.

# முன்னுரை

மெய்யன்பர்களே!

உலகம் தோன்றியது முதல் இன்றுவரை வளர்ந்து வந்த எல்லாக கால கட்டங்களிலும மனித வாழ்வுக்கு மட்டுமல்லாது சகல ஜீவராசிகளுக்கும் இன்பமான சூழ்நிலைகள், சம்பவங்களுக்கு ஆணையான துன்பமான சமபவங்கள் பலவிதங்களில சம்பவிககின்றன.

ஆறறிவு படைத்த மககள் மட்டுமா அவ்வாறான துன்பம் விலகல் வழிகளைத் தேடிச் செய்து கொள் கின்றோம் மற்ற ஜீவராசிகளும் தான் அதனதன் இயல்பு களுககு ஏற்ப விடுதலை பெற குரல் கொடுத்தோ, போராடியோ தன் சகதிககு ஏற்ப விடுவித்தோ செக்கின்றன என்று பல கதைகள நிகழ்ந்ததுண்டு.

ஒரு யானையின் காலை தடாகத்து முதலை கவ்விக் கொண்டபோது ''ஆதிமூலா'', ''நாராயணா'' என்ற சொல்லின் ஒலிபோலக குரல் கொடுத்ததாம். காட்டில் ஒரு வேடன் பன்றியின் மீது அம்பு எய்த போது 'வீர்' என்று கத்தி இறைவனை அழைத்ததாகக் கதை உண்டு. எறும்பு பூசித்து வரம் பெற்றதாக நிகழ்ச்சி உண்டு. சிலந்திப் பூச்சியும் வழிபட்டு, வழிபட்டு வரம் பெற்றதாக வரலாறு உண்டு. இன்னும் பறவையும், பாம்பும், ஆவினங்களும், விண்ணும, மண்ணும், மலையும், நதியும்,

கடலும், புல்லும், பூவினங்களும் அவற்றிற்கு ஏற்றாற் போல நித்திய கடமையென துன்பப் பரிகாரங்கள் தேடிக் கொள்ள கடவுளை வழிபட்டு முகதி பெற்றதாகப் புராணங்கள் கூறுகின்றன.

எவ்வகையானாலும் எல்லா உயிரினங்களும் வாழும் முறைகளுக்கான இன்ப, துன்ப நுகர்ச்சிகளுககு தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுககும் ஓர் பாதுகாப்பு இடம் தேடிக் கொள்ள முற்படுகின்றன. அதுபோன்றே ஆறறிவு படைத்த மனிதரும, இடர்ப்பாடுகளிலிருந்து விடுவித்துக் கொள்ள தனக்கும் மேலான ஒரு சக்தியைத் தேடி அல்லது பரம் பொருளைத் தேடி துணையென ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் உள்ளார், அந்த சக்தி ஓர் இடததில் இருப்பதாக உணர்ந்து தன்னை ஆட்படுத்திக கொள்ளவும் முயலகின்றனர். அப்போது தனக்கும் ஓர் நிலையான இடம் கிடைக்கிறது.

எப்படியாயினும் எல்லோரும் இறைவன் உறையும் ஆலயம் சென்று தேடி வழிபட்டுச் சாந்தம் செய்து கொள்ள வேண்டும். அதனாலதான் ஔவைப் பிராட்டி பாடினார் அன்றொரு நாள ''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்றும் .கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்றும் முதுமொழியாக வந்தது. இறைவன் குடியிருந்து காக்கின்ற இடம், ஆலயம என்று பொதுவாகச் சொல்லி, இந்நூலின உள்ளே விளக்கம் தர உள்ளோம்.

அறிவின் முயற்சியால் வாழ்ககை வழிகளைத் தெரிந்து கொண்ட நாம் அதன் முறைகளைக் கையாண்டு, பின் பற்றி, நடந்து வரும் ஏற்றத் தாழ்வுகளுக்கு சரி செய்து கொள்கிறோம் அது போன்றே இறைவனையும் ஆலயம் சென்று வணங்குவதற்குப் பல முறைகளைத் தெரிந்து வணங்கினால் பரிபூரண பயன் கிடைக்கும்.

அன்பு நெறி பல வகைப்படினும் இறைவனிடம் வைக்கும் அன்பிற்குப் பக்தி என்று பெயர். அதனை முறைப்படி கடைப் பிடித்து ஒழுகுவதற்கு எல்லாம் வல்ல இறைவனை முன் வைத்துத்தான் செய்ய வேண்டும். அதற்கு ஆலயம் ஓர் மூல ஆதாரமானது. எனவே நாம் என்றென்றும் கலியுக கால கட்டத்தில் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று."

"திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்
அவையெல்லாம் ஊர் அல்ல அடவி காடே"

என்று திருநாவுக்கரசு பெருமான் கூறினார். ஊரில் ஒரு கோயில் சிறப்பு இல்லையெனில் அவ்வூரின் கண் வாழும் மக்கள் எச்சிறப்பும் இல்லாத விலங்குகள் வாழும் காடு போல கோயிலின் மேன்மையை எடுத்துச் சொல்லு கின்றார்

ஒரு தனி மனிதனுக்கு மட்டுமல்லாது, ஊரின் பெருமைக்கும் மேன்மைச் சிறப்பிற்கும குடிமக்களின் வாழ்க்கை நலனுக்கும், பண்பாட்டு வளர்ச்சிக்கும் கோயில் ஒரு மூலதனம் என்று சொல்லலாம.

இந்நூல் ஆன்மீக அன்பர்களுக்கும் பொது மக்களுக் கும் பயன்படும் ஓர் ஆலய வழிகாட்டி நூல் என்பது பொருந்தும்.

ஆலயம் என்பது பற்றி மேலும் சமுத்திரத்தின் அளவாகக் கருத்துகள் நிறைந்து இருந்தாலும் இங்கு கண்டது ஒரு ஆற்று நீரின் அங்கமாக எடுத்துச் சொல்லப் பட்டுள்ளது.

அன்புடன்

திரு. குரு சுப்ரமணியம்

# Synopsis of the Book

"ALAYAM THOZHUVATHU
SALAVUM NANRU"

Worship is essential to redeem ourselves from the problems of life.

people worship in various ways, various forms of the Almighty to suit their need and temperaments.

The devotees vary in their nature few worship to overcome the fluctuations in life; few to dran strength to withstand the problems of life; few others worship spontaneously without expecting any favour. Though each one has the allowance to follow his method of worship. The Hindu Dharma advocates visiting temple to offer worship and prayer to be an ideal form. The Tamil poetess "Avvayar" has also stressed the same idea by stating that visiting Temples to worship is a very good form of prayer. Our divine immence benifits out of such a habit.

This book explains and illustrates various forms of worships the rules and regulations to be observed by the Devotees. The significance of

the various forms of God. His greatness and power, rhe importance of Deities like vinayagar, Murugan, Shivan, Shakthi, Natarajar, Maheswaran, Vishnu and the nature of their blessing and methods to obtain the same various symbolic represenation of Hindu. Religion and their religions and scientic significance, festivals which Celebrate the glory of God. The ways of performing the wcrship, the chanting of manthras and singing of hymens etc.

The book also advecates the daily duties to be adhered to by every normal being-Hygiene both mental and physical etc are deeply dealt with.

Temple worship promotes not only the above mentioned but also a salvation to the souls of all. It also enables one to know about the religions hymns like the Thevarams, the Thiru-vasakam.

Thus the book helps in giving an indept insight. Into temple worship and its religion and scientific ments.

# பொருளடக்கம்

# ஆலயம் தொழுவது சாலவும் நன்று!

## 1. ஆலயம்

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்ற நல் வாக்கிற்கு ஒப்பான சிறந்த மெய்ப் பொருளை நாம் காணவேண்டுமானால் பல படிகளைக் கடந்தாக வேண்டியுள்ளோம். ஓர் உயிர் ஈரேழு பதினான்கு விதப் பிறவிகளையும் எடுத்து முடிவில் இறைவன் திருப்பாதத்தில் ஒடுங்கி விடுகிறது. இது உலக இயக்கமாகும். அதில் மனிதப் பிறவியை நாம் அடைந்தது எத்தனையோ குறைகளை நீக்கி, நல்ல உடல், நல்ல மனம், நல்லறிவு இவற்றால் அடைந்த நல்வாழ்வு, அனைத்தையும் கண் எதிரில் காணும் பெரும் பயன் அல்லவா. இப்பிறவி எடுத்த பயனை நன்றாக முடித்துக் கடைத்தேற்ற நம் இந்து மதம்தான் எத்தனை வகையான புனித வழிகளை காட்டியுள்ளது என்பது அனுபவத்தில் ஒரு கண்கூடு.

எல்லாவிதமான எதிர்கால இயக்கங்களுக்கும், மாதா, பிதா, குரு, தெய்வம் என நான்கு பேர்கள் நிலையானவர்கள். இதை நாம் சற்று ஒருபடி உயர்த்தி உணர்வோமேயானால், உலகில் எல்லாவற்றிற்குமே

மாதாவாகவும், பிதாவாகவும், குருவாகவும் தெய்வமே இருந்து பரிபாலனம் செய்வது உண்மையானது. ஓர் உயிர் மனிதனாகப் பிறந்தபின், தான் மனிதனாகப் பிறந்திருக்கிற உண்மையை அறிவதற்கு அன்னைதான், தந்தையைக் காண்பிக்கிறாள்; தந்தை நல்ல குருவைக் காண்பிக்கிறார்; நாம் உயர்ந்தோங்குவதற்கு பல வழிகளையும் காண்பிக்கிறார். குருவானவர் நாம் முழு மனித நிலையை அடைவதற்கு கல்வி கேள்விகள் மூலமாக உயர்ந்து காட்டுவதற்கு பெரிதும் துணையாக நின்று வழி நடத்தி மனித வடிவத்திற்கு அர்த்தம் கொடுக்கின்றார். தெய்வமோ பிறவிப் பயன் முழுவதற்கும் மூலகாரணமாக இருந்து அருள் செய்கின்றார்.

தெய்வ நிலையைத் தெள்ளெனத் தெறிந்து கொள்ள நான்கு படிகளை நாம் கடைப்பிடித்தாக வேண்டும். அவை, சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பதே. இவற்றைச் சரியாகச் செய்ய நான்கு மார்க்கங்களைக் கடைப்பிடித்தல் அவசியம். அவை, தாசமார்க்கம், சத்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன. இவற்றைக் கடைப்பிடித்தலே நமது ஆன்ம ஞானத்திற்கு செய்யும் முதல் வேலையாகும்.

முதலில் சொன்ன நான்கு படிகளில் சரியையில்தான் ஆலயம் விளங்கப் பெறுகின்றது என்பதைப் பல நூல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

வாழ்க்கை நன்மைகளை நன்கு நுகர்வதற்கு ஓர் நிலையான இடத்திலிருந்துதான் எதையும் செய்ய வேண்டி உள்ளது. அந்த ஓர் இடம் நாம் குடியிருக்கும் வீடு. குடித்தனம் செய்யும் இடம். ஒருவன் அனாதியாக, அந்தரத்தில் இருந்து கொண்டு எந்த சுக துக்கங்களையும் தேட முடியாது. குடித்தனம் முதலில் ஏற்படுத்தி அதன் பிறகுதான், கல்வி கற்க ஓர் பள்ளி, பணி புரிய அலுவலகம், பல தொழில்கள் செய்யுமிடம் தொழிற்

சாலை, பொழுதுபோக்க ஒரு பூங்கா, ஓர் விளையாட்டுத் திடல், பொது அறிவை வளர்க்க ஓர் அருங்காட்சியகம், ஓர் நூல் நிலையம், கேளிக்கைகளுக்கு நாடக அரங்கம், திரை அரங்கம், இன்னும் பல புதுமையானதும் கூட, நமக்குச் சிற்றின்பப் பொருளாக அமைந்த பலவகையும் புறத்தே இருந்து நாள்தோறும் இடைவிடாது நம்மை ஆட்டிப் படைக்கும் எண்ணற்ற விதமான இடையூறு களும் இன்னல்களும்தான் தோன்றி மலிந்துவிடுகின்றன.

அறிவு பெறுவதற்குக் கல்வி நிலையங்களும், நூல் நிலையங்களும், சிறிய அளவில் இருந்தாலும் பெருவாரி யான வேறு அமைப்புக்கள் துன்பங்களையே இயக்கித் தருகின்றன.

அப்படி நாள்தோறும் நம்மைத் தாக்கும் துன்பங்கள் காலந்தோறும் நம்மைத் தொடராதவண்ணம் காத்துக் கொள்ள ஓர் புனிதமான இடம் தேடிச் செல்கிறோம். அது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக் கூடிய ஓர் இடம். அதுவே ஆலயம். இறைவன் குடிகொண்டு வாழும் இடம் ஆலயம்.

அங்கு இங்கு எனாதபடி கடவுள் எங்கும் நிறைந்து விளங்குகிறான் எனச் சொல்வதுண்டு. என்றாலும் அவன் தங்குமிடம் அல்லது தங்க வைக்குமிடம், அவன் அருவமாகவும், உருவமாகவும், அருஉருவமாகவும் எண்ணுகின்ற விதங்களிலெல்லாம் நாம் காணுமிடம் ஆலயம் அல்லது கோயிலாகும். முன் சொல்லிய நான்கு கிரியைகளையும் செய்ய ஏற்ற இடம் ஆலயமே. இனி, ஆலயம், கோயில் இவ்விரண்டு சொற்களுக்கும் விரிவான பொருள் காண்போம்.

கோயில் என்பதில் இரண்டு பொருள் உண்டு. கோ + இல். இதில் முன் எழுத்தான கோ—என்பது நம்மை ஆளும் அரசன் எனவும், பின் எழுத்தான இல் என்பது

அவன் வாழும் இடம் குடி கொண்டபதி, திருப்பதி.— மேலான இடம் எனப் பொருள்படும். மற்றொன்று—கோ என்பது எல்லா உலகங்களையும் ஆண்டு கொள்ளும் ஆண்டவன் எனவும், இல் என்பது அவன் எங்கும் நிறைந் தவனானாலும் அவன் இருக்குமிடம் ஒன்று எனவும் வரும். நீக்கமற நிறைந்தவன் என்றாலும் அவன் வாழு மிடம் தனியே வேண்டும்—அதுவே கடவுள் இடம்.

மக்கள் சமூகத்தில் நாம் எல்லோரும் ஒன்றுதான். ஆயினும் நாம் ஒவ்வொருவரும் தனித்தனியே வாழ்வதற்கு இல்லங்கள் அமைத்து வாழ்கின்றோம். கடவுள் இடம் சென்று வணங்குவதற்கு ஏற்ற பெயர் கோயில்தான். எந் நாட்டவர்க்கும் இறைவன் என்றாலும், தென்னாடுடைய சிவன் என்று இடத்தைக் குறிப்பாகச் சொல்லும் அழகாக தென்னாட்டில் கோயில் கொண்டு நிறைந்து வாழ் கின்றான்.

எப்பதியில் இருந்து அருள் தருபவனாக இருந்தாலும் திருப்பதியில் வாழும் திருமால் எனக் கூறுவதற்கு அங்கே நீக்கமற நின்று அருள் கொடுக்கின்றான் அல்லவா.

அடுத்து வரும் ஆலயம் என்ற சொல்லில், ஆ-என்பது ஆன்மா எனவும், பின் எழுத்தான லயம் என்பது லயிப்பது, அல்லது சேர்வதற்கு உரியது எனவும் பொருள் படும். ஆக, ஆ+லயம்=ஆலயம் என்பது கடவுள் திருவடி யில் மனம் எனும் ஆன்மா லயித்து இருத்தல் என்பதாகும். லயித்தல் என்றால் மனம் அவரிடத்தில் கவர்ந்து, ஈர்த்து சற்று நேரத்திற்காவது இவ்வுலக வாழ்க்கை இன்ப துன்பங்கள் யாவற்றையும் மறந்து நிம்மதியடைய ஓர் பேரின்ப நிலையைத் தரக்கூடிய மேலான இடம் ஆலயம். மற்றொரு பொருளையும் காண்போம். 'ஆ' என்பது மும் மலங்களில் ஒன்றான ஆணவமலம், முன்னின்று நம்மை ஆட்டிப் படைக்கிறது. அந்த ஆணவ மலம் அவர் சன்னதி யின் முன் அடங்கியிருத்தல் என்பதும் பொருளாகக்

கொள்ளப்படும். இவ்விதமாக, கோயிலும் ஆலயமும்— இரு பொருள் தரவல்லது. அதை ஆற்றுப்படுத்தவும் வல்லது.

ஆணவத்தால் தன்னை வியந்து தருக்கலும், தாழ்வின்றி கொன்னே வெகுளி பெருக்கலும், முன்னிய பல்பொருள் வெஃகும் சிறுமையும், இம்மூன்றும் தேடிய செல்வமுடைக்கும் படையென்றார். இவை போன்று அறுபகைவர்களான காமம், குரோதம் லோபம், மோகம், மதம், மாச்சரியம் என்பனவற்றையும் அவன் திருமுன் வைத்து அடக்கி, ஒடுக்கி நிம்மதி கண்டு பேரின்ப நிலையில் மகிழ்வோடு மனநிறைவோடு இல்லம் திரும்பச் செய்யும் ஓரிடம் ஆலயம்.

பொது நோக்கில் ஜாதி, இன, வர்க்க பேதமற்ற வகையில் ஓர் கூட்டுப் பிரார்த்தனை செய்யும் இடம ஆலயம். இவ்வித சமரச நிலையை ஆண்டவன் சன்னதியில் அல்லாது வேறு எங்கும் யாராலும் கொடுக்க முடியாத தனிச் சிறப்பாக விளங்குவது ஆலயம். இதனை முதற் காரணமாக வைத்துக் கொண்டு ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்பதற்கு மேலும் பல முக்கிய காரணங் களையும் இங்கு காண்போம்.

ஆலயத்தின் நிர்மாண அமைப்பில், அழகுத் தோற்றம், அளவுகளில் வடிவ அமைப்பு, கட்டமைப்பு இவை பொதுவாகச் சிறிய, பெரிய வடிவ அளவிலான எல்லா ஆலயங்களுக்கும் பொருந்தும்படியாக வேத, ஆகம விதிமுறைகளின் படியேதான் அமைக்கப்படுகின்றன. ஆலயம் ஒரு மனித உருவ அமைப்பின்படியே அமைந்திருக் கிறது. கர்ப்பக் கிரகம், அலலது மூலஸ்தானம் என்பது— சிரசு, (தலை) அர்த்த மண்டபம் — கழுத்து, மகா மண்டபம்—மார்பு, யாகசாலை— நாபி, கோபுரம்— பாதம் என அமைந்தது. இதனை மாற்று விதமாகவும் சொல்ல லாம். கோபுரம்—வாயாக, நந்தி—நாக்கு, கொடி மரம்—

உள் நாக்கு, தீபங்கள் — பஞ்ச இந்திரியங்கள், கர்ப்ப கிரகம்—இதயம், கர்ப்ப கிரகத்தில் ஸ்தாபிக்கப்பட்ட மூர்த்தி உயிர் எனவும் அமைந்தது.

கோயில் அமைப்பில் மண்டபங்கள் முக்கிய இடம் பெறுகின்றன. அர்த்த மண்டபம்—நிவிருத்தியையும், மஹா மண்டபம்—பிரதிஷ்டையையும், ஸ்தபந மண்டபம் —வித்தியையும், அலங்கார மண்டபம்—சாந்தியையும், சபா மண்டபம்—சாந்தியாதீதம் என்னும் கலைகளை உணர்த்துகின்றன. மேற்கூறியவற்றால் ஆலயம் மிகவும் அவசியமானது. ஆலய பாகங்கள் பெரும் தத்துவங்களை உணர்த்துவனவாகும்.

முதற்கண் நாம் எவ்வளவு தூரத்தில் இருந்து பார்த்தாலும் வானளாவி, உயர்ந்து காணப்படும் கோபுரம் கோயிலின் இருப்பிடத்தைத் தெளிவாகக் காண்பிப்பதோடு, முக்கியமாக கோபுர தரிசனம் கோடி புண்ணியம் என்று சொல்வதற்கான விதத்தில் அமைகிறது. கோயிலுக்கு வர இயலாதவர்களின் ஆன்மாவாகிய மனம் கோபுரத்தில் அமைந்துள்ள சிற்ப வடிவிலான மூர்த்திகளைக் கண்டு தெரிசனம் செய்தாலே சாந்தியடைந்து இறைவனைக் கண்ட எண்ணத்தில் புண்ணியம் பெறும் என்பதற்காக அமைந்த தத்துவம்.

ஒரு திருக்கோயில் எந்த தெய்வத்திற்காக அமைத்திருக்கிறார்களோ அந்த தெய்வத்திற்குச் சார்ந்த உருவ அர்த்தங்களோடு சொதை வடிவிலான மூர்த்தங்களை கீழ் நிலையில் உள்ள முதல் நிலையிலும் மற்ற மேல் நோக்கி செல்லும் நிலைகளில் அவதார உருவங்களைச் சொதை வடிவங்களில் அமைக்கப்பட்டிருக்கும். ஒரு கோயிலில் கோபுர நிலைகள் ஒன்று முதல் பதின்மூன்று நிலைகள் வரையிலும் நான்கு புறங்களிலும் சொதைச் சிற்பங்கள் அமைந்திருக்கும். அவற்றைப் பார்த்தவர்கள் இந்த தெய்வத்திற்குரிய திருக்கோயில்தான் என்று புரிந்து அந்த

மூர்த்தங்களையே தெரிசனம் செய்தாலே புண்ணியம் என்ற நல்ல எண்ணத்தில் இருப்பார்கள என்றும், கர்ப்ப கிரகத்தில் எழுந்தருளியுள்ள மூர்த்தங்களின் மாதிரி வடிவ அமைப்பு கோபுரத்தின் முன் முகப்பிலும் மேல் பகுதி யான விமானத்திலும், அமைத்து கண்ணைக் கவரும்படி யும் மனதை ஈர்க்கும்படியும், வண்ணப் பூச்சுகள் பூசி அழகுபடுத்தியும் அமைந்துள்ளதைக் காணும்போது ஓர் கலை அழகும், அருள் அழகும் மிக்கதான காட்சி மறக்க இயலாமல் அமைகிறது.

ஆலயக் கட்டமைப்பில் வெளிப்புறம் இப்படித் தோன்றினாலும் முக்கியமாக,, ஆலயப் பாதுகாப்பு, உட்புற, வெளிப்புற சுத்தம், நீண்ட காலங்களுக்கு இருக்க வேண்டிய உறுதிப்பாடு, எளிதில் சிதைந்து போகாத அமைப்பு இவற்றைக் கருத்தில் கொண்டே மதிர்ச்சுவர்கள் ஆலயங்களின் அமைப்பிற்கு ஏற்றபடி கட்டப்பட்டுள்ளன. மேலும் கிரிப் பிரஹாரங்களுக்கு ஏற்றபடியும் உள் மதிற்சுவர்கள் அமைந்துள்ளன.

பெரிய கோயில்களில் ஒன்றுமுதல் ஏழு பிரகாரங்கள் அமைந்துள்ளன. சைவக் கோயில்களில் ஐந்து வரை ஏழு பிரகாரங்கள் உண்டு. அந்தப் பிரகாரங்கள், அன்ன மயம், பிராண மயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்துவித கோசங்களைக் குறிக் கின்றன மூன்று பிரகாரங்கள், ஐந்து கோசங்களினால் ஆன ஸ்தூல, சூக்கும, காரண என்னும் மூன்றுவித சரீரங்களை விளக்குகின்றன. வழிபட வருவோர், மூன்று முறை, அல்லது ஐந்து முறை பிரகாரங்களைச் சுற்ற வேண்டுமென்பது இறைவன் பஞ்ச கோசங்களையும், மூவகைச் சரீரங்களையும் கடந்து விளங்குகின்றார் என்பதை உணர்த்தவேயாகும்.

ஆலயம் என்பதைத் தனித்துக் காட்டத்தக்க வகையில் கட்டிட அமைப்பால் கம்பீரத் தோற்றம், சிற்பக் கலை,

அதன்மேல் வண்ணப்பூச்சு இவற்றால் அழகுத் தோற்றம் அமைந்துள்ள தெய்வசக்தியால் அருள் தோற்றம், இவை ஒருங்கே அமைந்து விஞ்ஞான ரீதியாகவும், மெஞ்ஞானம் புகட்டும் அமைப்புகள் நிறைந்த கலைக் கோயில்கள் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் பெருமைக்கு எடுத்துக் காட்டும் ஆலயங்கள் தென்னாட்டில் மிகுந்து காணப்படுகின்றன என்பது இந்து சமயத்தின் பெருமைக் குறியது.

அடுத்து ஆலயத்தின் உள்ளே சென்று பார்த்தால் கர்ப்பக்கிரகத்தில் எழுந்தருளியுள்ள மூர்த்திக்கு அபிஷேக அலங்கார, ஆ ரா த னை க ள் செய்விக்கிறார்கள். அவற்றைக் காணும் போதும், தெய்வீகப் பாடல்களை இசைக்கும் போதும், மந்திரோபதேச ஒலிகளைக் கேட்கும் போதும், மற்றும், மணியோசை, சங்க நாதம் இவற்றைக் கேட்கும் போதும், ஓர் பேரின்பச் சூழல் நம் மனத்தை ஆட்கொண்டு லயித்து தெய்வத்தோடு ஒன்றிவிடாமல் இருக்குமா. அதற்காகவே ஆலயம் செல்லுதல் சிறப்பு.

மேலும் ஒரு காரணமாக சொல்லலாம் ஆலயம் தொழுவதின் அவசியத்திற்கு. விஞ்ஞான முறைப்படியும், வேத ஆகம விதிகளின் படியும் அமைந்த, அபிஷேக, அலங்கார, தூப, தீப, ஆராதனைகள் செய்வதற்கு சில உள்ளான கருத்தின் அவசிய அடிப்படையில்தான் ஆலயங் களை அமைத்து வழிபட்டுக் கொண்டு வருகிறோம் என்பது புலனாகிறது. அவை மெஞ்ஞானத்தின் விளக்க மாக அமைந்திருக்கின்றன.

ஆலயத்தில் தெய்வத்தை வழிபடச் செல்லும் ஒவ்வொரு சேவார்த்திக்கும் தெய்வத்தின் அருள் சக்தி யோடு சில முக்கிய ஜீவாதாரமான சக்திக்கும் வழி வகுக்கும் வகையில் ஆராதனைகள அமைத்திருக்கிறார் கள். உலகில் தோன்றிய இயற்கையான பொருள்கள் எல்லாம் இறைவன் படைப்பில் அவனுக்கே உகந்தது.

அவற்றில் மலர்கள், இலைகள், வாசனைப் பொருட்கள், வாசனைத் திரவியங்கள, பழவகைகள் இவற்றை ஒன்று சேர்த்து இறைவனுக்குப் படைக்கும் போது மக்களுக்குப் பல நன்மைகள் விளைகின்றன என்று கண்டு ஆய்ந்து ஆராதனைகள் - மேற்கொள்ளப்படுகின்றன. அவற்றில் ஆகம விதிகளின்படி உகந்ததைச் சேர்த்தும், ஒவ்வாததை விலக்கியும் செய்தல் வேண்டும்.

அபிஷேகப் பொருட்களாக, தீர்த்தம் என்ற தண்ணீர், இளநீர், பன்னீர், நெய், எண்ணெய், பால், தயிர், தேன், ஏலம், வெல்லம், நாட்டுச் சர்க்கரை, கரும்புப் பால், பஞ்ச கவ்யம், சாதம், விபூதி, சந்தனம், மஞ்சள், வாழைப் பழம், மா, பலா, பேரீச்சம் பழங்கள், எலுமிச்சம் பழம், திராட்சை, கற்கண்டு, குங்குமப்பூ, சிலவற்றை ஒன்று சேர்த்துக் கரைத்த பஞ்சாமிர்தம் என்பன எல்லாம் அபிஷேக ஆராதனைக்கும், அதன் பின் அலங்காரத்திற்கு உரியனவாக வில்வ இலை, வேப்பிலை, ஆலிலை, அருகம்புல், துளசி, தாமரைப்பூ, செண்பகப்பூ, மரிக்கொழுந்து, ஜாதிமுல்லை, சாமந்தி, ஒற்றை அரளி, மஞ்சரளி, செம்பருத்திப்பூ, மல்லி, வெள்ளெருக்கம் பூ இவற்றால் தனித்தனியாகவோ மாலைகளாகத் தொடுத்தோ, அர்ச்சனை, அலங்கார விதங்களை செய்கிறார்கள்.

குற்றம் குறையில்லாத பொருட்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, அனைத்து ஆராதனைகளையும் செய்கிறார்கள். அபிஷேகம் செய்யும் விதங்களில் ஒவ்வொன்றுக்கும் தகுந்த பலன் நிச்சயமாகக் கிடைக்கும். இது பற்றிய விபரங்களை இப்புத்தகத்தின் முடிவுப் பகுதியில் காணலாம்.

அடுத்ததாக கர்ப்பக்கிரகத்தில் நடத்தப்படும் முக்கிய நிகழ்ச்சிகள் ஜீவசக்திக்கு ஏற்ற காரணங்களாக அமைந்து பயனளிக்கிறது. மேற்கூறிய அபிஷேகப் பொருட்கள்

அனைத்தும் இயற்கையானதும், மூலிகை சம்பந்தமான தும், பெரிதும் மருத்துவ குணங்கொண்டதும், உயிர்ப் பொருளாக உள்ளதும் (வைட்டமின்கள்) நிறைந்து கலந்ததும், வாசனைப் பொருட்களை கலப்பதால் தோன்றும் நறுமணங்களால் இதயத்திற்குப் பலமும், மூச்சுக் குழல்கள், நுரையீரல்களுக்கு வலுவையும், சுத்தத்தையும், குடல், வயிறு பகுதிகளுக்கு நல்ல நீர் சுரப்பி ஏறபடுத்தித் தகுந்த சக்தியையும், இரத்த ஓட்டத் தில் சீரான சக்தியையும் கொடுககக்கூடிய அளவில் அமைகிறது என்று விஞ்ஞான ரீதியில் கண்டறிந்ததால் மூன் சொல்லப்பட்ட பொருட்களைக் கலந்து உடனுக் குடன் தயாரித்த பஞ்சாமிர்தம் என்னும் அபிஷேகத்தை கர்ப்பக் கிரகத்தில் உள்ள மூர்த்தங்களுக்கு சிரசிலிருந்து பாதம் வரை துவளும்படி நன்றாக ஊற்றி ஆராதனை செய்யும்போது மூலிகைப் பொருட்களும், வாசனைப் பொருட்களும் ஒன்று கலந்ததால் உண்டாகும், ஒரு வித மான ஜீவ சக்தியான பிராணவாயு வீசுகிறது

கர்ப்பக் கிரகத்தில் எந்த விதமான வெளி வெளிச்சமும் வெளிக்காற்றும் உட்புகுந்து தோன்றிய பிராணவாயு வைக் கலைககாமல் ஏதோ ஒரு சுழற்சியால் நேரே அர்த்த மண்டபத்திற்குள் வீசுகிறது. அர்த்த மண்டபத்திலிருந்து மகா மண்டபத்திற்குள் வீசுகிறது. அப்படி வீசுகிற சக்தி மிகுந்த பிராண வாயு அர்த்த மணடபத்திலும், மகா மண்டபத்திலும் நின்று தெரிசனம் செய்யும் பகதர் களுக்கு அடித்து அதை சுவாசிக்கிறார்கள். அப்போது மேலே சொல்லப்பட்டவாறு உடலுக்கும் உள்ளத்திற்கும் மிக நல்லது. இந்த வித பிராணவாயுவை அடிககடி கோயில் சென்று சுவாசிப்பது வேறெங்கும் கிடைக்காத ஒன்று.

இதன் காரணமாகவும் ஆலய தெரிசனம் முக்கியம் பெறுகின்றது. மனதிற்கு தெய்வீக நிகழ்ச்சிகளைக்

கண்டு களிக்கும் போது பரவசமடைகிறது. ஆலயத்தில் உள்ள மண்டபங்கள் எல்லாம் சாத்திரவிதிப்படி அமைந்த ஒரு கட்டுக்கோப்பான அமைப்பு. அனைத்து அபிஷேக, அலங்கார தூப, தீப ஆராதனைகள் செய்யத் தகுந்த காரணமான இடம். அந்த இடமல்லாது வேறு எங்கும் செய்ய இயலாது.

சாதாரண நாட்களில் நாள்தோறும் செய்யப்படும் விசேடங்களைவிட, திருவிழாக்களிலும், குடமுழுக்கு விழாக்களின் போதும், பிரம்மோத்ஸவ காலங்களின் போதும் செய்யும் ஆராதனைகள் ஒருபடி அதிகமான சிறப்பினைக் கொடுக்கும். அந்தக் கால கட்டங்களில் நாம் தவறாது ஆலயம் சென்று அனுபவிப்பது பன்மடங்கு முக்கியமாகும்.

ஒரு ஊருக்குச் செல்லுவதற்குமுன், அல்லது ஒரு தொழிலைத் தொடங்குவதற்குமுன் பாரம்பரிய முறைப் படி வந்த நல்லொழுக்க, நடத்தைகளின் அடிப்படையில், நாம் பெற்றோர், மூத்தோர், ஆசிரியர் இவர்களிடம் சென்று ஆசீர்வாதம் அல்லது நல்வாக்குப் பெற அவர்கள் இருக்குமிடம் சென்றே அவற்றைப் பெறுகின்றோமே, அதற்கும ஒரு பங்கு மேலாக உயர்வு என எண்ணிக் கொண்டு எந்தக் காரியங்களைத் துவங்க இருந்தாலும் முதல் வேலையாக கோயிலுக்குச் சென்று வழிபட்டுத் தான் நாம் ஆரம்பிக்கின்றோம். இது நமது பண்பாட்டின் முக்கியமான கட்டமாக நடந்து வருகின்றது. உலகில் எம்மதத்தாரும் இப்படிச் செய்து வருவதைக் கண் கூடாகப் பார்க்கிறோம்.

ஆரம்ப காரியங்களுக்கும், ஒரு முடிவு பெறும் காரியங் களுக்கும் ஆண்டவன் வழிபாட்டிற்கு ஆலயம் இருப்பது அவசியம் என்பதற்காக ஏற்படுத்தப்பட்டது.

எனவே மேற்சொன்னதோடு நில்லாமல் அவ்வப்போது தோன்றும் தேவைகளுக்கும் ஆலயம் ஒரு பொது இடமாக வும் அமையும் என்பதால் "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்று ஏற்றுக் கொண்டு எல்லா நலனுக்கும்-

சக்தி தருவது ஆலயம் — சாந்தம் காப்பது ஆலயம்.
பக்தி தருவது ஆலயம் — பண்பாடு தருவது ஆலயம்.
முக்தி தருவது ஆலயம் — உண்மை விளங்குவது ஆலயம்.
நேர்மை நிலைப்பது ஆலயம் — அன்பு வளர்ப்பது ஆலயம்.
மனத்தூய்மை தருவது ஆலயம் — மங்கலம் அளிப்பது ஆலயம்.
நல்ல மனம் கூடுவது ஆலயம் — பேதமை நீக்குவது ஆலயம்.
ஆன்மா லயிப்பது ஆலயம் — ஆணவம் ஒடுங்குவது ஆலயம்.
சாக்காடு போக்குவது ஆலயம் — ஆக்கமளிப்பது ஆலயம்.

என்று சொல்லி நமக்குத் தோன்றும் அனைத்துவகை இன்ப துன்பங்களுக்கும் சரணாலயம் அதுவே. மேலுலகத் தேவர்களும் துன்பம் துடைக்க ஆலயம் பணிந்தார்கள். சமயம் வளர்த்த ஆன்றோர்களும், ஆழ்வார்களும், அடியார்களும், சைவம் காத்த குரவர்களும், தாயன்மார் களும் ஆலயம் தேடியே அருள் பெற்றார்கள் நாமும் அவ்வழியில் நிற்க இனி வழிபாட்டு முறைகளைப் பற்றிப் பார்ப்போம்.

# 2. ஆலய வழிபாடு

'ஆலயம் தொழுதல்' என்பதை மற்றொரு பொருளாகவும் கொண்டு பார்த்தால் எண்ணற்ற கருத்துக்களுக்கு இடமாகும். வழிபடுதல் என்பதைப் பின்பற்றி நடத்தல் என்றும், வழிபாடு செய்தல் என்பதை மதிப்பு, மரியாதைகளோடு போற்றி, எவ்வகையிலும் நெறி பிறளாதபடி நின்று காத்தல் என்றும் கொள்ளலாம்.

ஒரு நல்ல குடும்பத்துப் பண்பாடுடைய மனிதன் கடைப்பிடிக்கின்ற செயல், தனது முன்னோர்கள் தனக்கு கற்பித்தபடி, எடுத்துக்காட்டியபடி, நடைமுறைபடுத்திக் காட்டியபடி, பழக்கத்திலும், வழக்கத்திலும் ஈடுபடுத்திய படி, தனது பாரம்பரிய பெருமைகள் குன்றாதபடி, சந்ததியினருக்கும், சுற்றத்தாருக்கும் அடிச்சுவடாக நின்று காண்பித்தபடி, பண்பாட்டு நல்லொழுக்கங்கள் தனக்கே உரித்தான சாயலாக சிறப்பித்துக் காட்டியபடி - ஒருவன் தனது இல்லத்திற்கு வந்தாரை வாருங்கள் என்று கைகூப்பி முகம் மலர்ந்து, மோப்பக் குழையாத அனிச்சமாக வரவேற்று, உணவு தந்து உபசரித்தல், வேண்டியதை மனம் கோணாமல் கொடுத்தல், தேவைக்கு ஏற்ற உதவி செய்தல், அதிலும் அவர் குறிப்பறிந்து செய்தல், கேட்காமலே கொடுத்தல், கேட்டவற்றை ஞாபகத்தில் வைத்து, கைமாறு கருதாமல் செய்தல், நலம் பல விசாரித்து அகம் மகிழ்ந்து அவருடன் அளவளாவுதல், புறங்கூறாமல் நலம் பேணுதல், மற்றவர் தன்னை நெஞ்சில் நிறுத்தி மறவாமல் இருக்கும் அளவிற்கு அன்பு பாராட்டி உபசரித்தலை இங்கு வாழ்க்கை நலத்தில் மேற்கொள்ளப்படும் "வழிபாடு செய்தல்" என்றே சொல்லலாம்.

இனி வழிபடுதல் ஆகிய பின்பற்றி நடத்தல் என்பதை எடுத்துக் கொள்ளலாம். இவ்வுலகின் நடைமுறைக் கணக்கில் இருந்து வரும் ஒவ்வொரு செயலையும், நன்கு கவனித்தால் அவை எல்லாம் ஏதோ ஒரு நியதிப்படி, கட்டுப்பாட்டின்படிதான் இயங்கி வருகின்றன என்றும் நன்றாகப் புலப்படுகிறது.

சூரியன் உதிப்பதைக் காலைப் பொழுது என்றும், அது வளர்ந்து நடுவானத்தில் இருக்கும் பொழுதை உச்சிப் பொழுது, நண்பகல் என்றும், அது சாய்ந்த பொழுதை மங்கலமான ஒளிக்கதிர்களை வீசிக் கொண்டே மறையும் பொழுதை மாலை என்றும், ஒளியற்ற இருள் நேரத்தை இரவு என்றும், மாறாமல் சொல்லி வருகின்றோம். இப்படிப் பொழுதினை வகுத்தார் போல பருவங்களும், மாறி மாறி வருகின்றன. அந்தந்தக் கால கட்டத்தில் மக்களுக்கு மாறாத பல கடமைகளைத் தானே வகுத்துக் கொண்டு அதன் நியப்படி நடக்கின்றார்கள்.

கடமைகள் வகுத்த நியப்படி நடக்கவில்லையென்றால் பல முறண்பாடுகளும், விளைவுகளும் தீமையினையே கொடுக்கும். நாம் ஒரு பாதையை ஏற்படுத்தி அந்தப் பாதையில் நடக்கும் பல விதிகளையும் வகுத்து அதன்படி நடக்கவில்லை யென்றால் விபத்துக்கள் நடக்கும், உயிர்ச் சேதம் ஏற்படும், வாழ்வையே அதனால் இழக்க நேரிடும். எது நடக்கக் கூடாது என்று திட்டமிட்டுச் செய் கின்றோமோ, அந்தக் கட்டுப்பாட்டுக்குள் நாம் அடங் கியே வாழ வேண்டும். எந்தக் கட்டுப்பாடும் நமக்காகவே ஏற்பட்டதென்று தீர்மானித்து நிற்கத்தான் வேண்டும்.

பள்ளி, அலுவலகம், காவல்துறை, ராணுவத்துறை இன்னும் பல தனியார் துறை, மருத்துவத்துறை, வேறு பல இயக்கத் துறைகளிலும், கடமையாற்றும் நேரங்கள், அதற்கான சீருடைகள், நியப்படி உள்ளது. அவை

இல்லாது போனால் பொது மக்களுக்கும், அவர்களுக்கும் ஒரு வித்தியாசமும் தோன்றாது.

உண்பதும், உறங்குவதும் கூட, ஒரு கட்டுப்பாட்டில் வரவில்லை என்றால் துன்பங்களும், அதைத் தொடர்ந்து வியாதிகளும் தோன்ற ஆரம்பிக்கும் என்பதால் அதை சீரான முறையில் அமைத்தால் ஆரோக்யமும், ஆன்மா வின் ஒழுக்கத்திற்கும் நிறைவு கொடுக்கும்.

நாம் உண்ணும் உணவில் ஒருமுறை அமைந்துள்ளது. முதலில் அன்னம் படைக்க வேண்டும். பிறகு சாம்பார் அல்லது குளம்பு ஊற்ற வேண்டும். குளம்பு என்பது காய் கறிகளால் ஆனது. ஒரு காய் இருந்தாலும் அது குளம்பு தான். ஆக குளம்பு ஊற்றிப் பிசைந்து உண்ணுதல், ஆணவ மலத்தை அழித்து ஒழிப்பதற்குப் பொருளாகும். தான் என்பது ஆணவம். அந்தத் தானை முதலில் உண்டு விடுகிறோம். அதன் பிறகு ரசம். ரசம் என்பது தான் இல்லாதது. ரசத்தோடு உண்ணும் போதுதான், உடன் மும்மலங்களும் ஒழிந்து தெளிந்து இருக்கும் நிலையில் இறைவனை அணுகுகின்றோம் என்பதை காட்டுகிறது ரச உணவு. அடுத்தது இனிமையான இறைவனுடைய ருசியை அனுபவிக்கின்றோம் என்பதைக் காட்டுவதே பாயசம் பருகுதல். ''எந்த ருசிரா ராமா'' என்று தியாகப் பிரம்மம், தன் ராமனின் நாமத்தை பேரின்ப ருசியாக அனுபவித்துக் காட்டுகிறார். இறைவனது இனிமையை அனுபவித்துக் கொண்டே உலக துன்பங்களை மறந்து அந்த இறைவனுடைய குளிர்ச்சி பொருந்திய நிழலில் நாம் அமர்ந்திருக்க தயிர் அல்லது மோர் கலந்த உணவு உண்கிறோம். இந்த முறையிலிருந்து மாறுபட்டால் பயனில்லை. இவற்றின் தத்துவம், கடுமையானதையெல் லாம் விட்டொழித்து படிப்படியாக எளிமையையும், மென்மையையும் கடைப்பிடிக்க வேண்டுமென்பதைக் காட்டியிருக்கிறார்கள்.

நியதிகள் மேலும் கடைப்பிடிக்க வேண்டி உள்ளது. இசையில் கூட பாடுபவர்கள், பல்லவி, அநுபல்லவி, சரணம் என்று மூன்று நிலைகளில் பாடவேண்டும். சாதாரணப் பாடலில் கூட, நல்ல தொனியில், எடுப்பு, அதனைப் பின்பற்றி தொடுப்பு, அதன் உச்சத்திற்குப் பின் முடிப்பு என்ற விதிகளைக் காட்டினால்தான் பாடியவர்களுக்குப் பெருமை. வாழ்க்கை முறைக்குத் திருமணச் சடங்குகளில், முதல் நாள், கல்யாணம். அடுத்த நாளில் பூரண சந்தோஷ ஆரவாரத்தில் பல சீர்கள் நடத்தியபின் தான் முகூர்த்தம். அதன் பிறகுதான் மற்ற சடங்குகள். இவற்றை நியப்படி செய்யவில்லையென்றால் பல முரண்பாடுகள் தோன்றும்.

ஆடை உடுத்துதலிலும் முன், பின் என்னும் முறை அவசியமானது. குளித்தபின் முதலில் உள்ளாடை, பிறகு மேலாடை என்பது பொருந்தும். முதலில் மேலாடை, பிறகு உள்ளாடை, எப்படி அணிய முடியும்? பொருந்தாது. உள்ளாடை இல்லையென்றாலும் கூட ''மேலாடை இன்றி நூலாயிரம் கற்றாலும் மக்கள் மேதினியில் ஒரு பொருட்டாக மதிப்பர்'' என்பது பழமொழி.

மனித குலப் பெருமைக்கே இத்தனை நியதிகளும், கட்டுப்பாடுகளும், வழிமுறைகளும், இன்னும் பலவும் தேவையென்றால், ஆலயம் மேவிய ஆண்டவர் வழிபாட்டுக்கு, காத்து ரட்சிக்கும் பரம்பொருள் சேவைக்கு எத்தனை முறையாக, நித்திய கடமையாக, நியதிப்படி செய்ய வேண்டுமென்பது, வேதகால, புராண கால, இதிகாச காலங்களிலிருந்து தொடர்ந்து வந்திருக்கின்றன.

பல நியதிகளைக் கடைப்பிடிக்க இயலாது போனாலும். ஏதோ ஒன்றைக் கடைப்பிடித்து, அதை ஒரு லட்சிய நோக்கமாகக் கடைப் பிடித்தாலும் போதும்.

## நந்திதேவர் தோற்றம் :

சிலாதரும், சித்திராவதியும் இறைவனை வேண்டியதின் பலனாக ஆண் குழந்தை பிறந்தது. குமரன் தோன்றியதில், சிலாதரும், சித்திராவதியும் மகிழ்ந்தார்கள். தேவர்கள் மலர்மாரி பொழிய, இந்திரனும், நான்முகனும் வாழ்த்தி நந்தீசன் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள். அவ்வாறு தோன்றிய நந்தீசன் சகல கலைகளோடும், நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பெற்றோரின் நற்பெயர் காத்தான்.

குலப்பெருமை காக்க மணம் செய்து கொள்ள விரும்பாமல் தவம் இயற்றுவதையே தவப்பயன் என்று கொண்டான். மகேஸ்வரனின் கருணையைப் பெறுவத இப்பிறவியின் பயன் என்று எண்ணி பஞ்சாக்னிக்கு இடையில் நின்று நூறாண்டுகள் தவம் இயற்ற இறைவன் தோன்றி, தவத்தை மெச்சி, நந்தீசா உனக்கு யாது வரம் வேண்டுமெனக் கேட்க— நந்தீசன், "இறைவா எனக்கு வேண்டிய பொருள் யாதொன்றுமில்லை. உமது பாதத்தில் மாறாத பக்தி ஒன்றே வேண்டும்" என்று கேட்டு அவ்வாறே அருள் பெற்றார். அத்தோடு நில்லாமல் மீண்டும் நூறாண்டுகள் தவம் கடுமையாக இயற்றினார். இறைவன் தோன்றி "நந்தீசா நீ கணாதிபனாய் விளங்கு என் ஆணை எங்கும் நடப்பது போல உன் ஆணையும் நடக்குமாறு அதிகாரநந்தியாக விளங்குவாயாக" என்று அருள்புரிந்து மறைந்தார்.

நந்தீசனோ அத்தோடு நில்லாது மீண்டும் நூறாண்டுகள் தவம் இயற்ற, இறைவன் தோன்றி, "நந்தீசனின் பயன் கருதாமல் பக்தி ஒன்றையே கருத்த தவம் இயற்றியவர்கள் எவருமில்லை. நீ இனி எம்மைப் போல் நித்தியனாக இருந்து யாவராலும் வணங்கப்

பெறுவாய். உனக்கு திவ்வியவடிவும், சடைமுடியும், சந்திர கலையும், நீலகண்டமும், மூன்று கண்களும், நான்கு தோள்களும், மான்மழுவும், யானையுரியும், நமது பூரண அருளும் அளித்தோம்'' என திருவருள் புரிந்தார்; அத்தோடு மாலயன் ஆகிய தேவர்களுக்கும் கட்டளை யிட்டார். எல்லாத் தேவர்களாலும் பூஜிக்கத்தக்கவன்; முருகன், விநாயகனைப் போன்று இவனும் எமக்கு மகன், எனவும் அருளினார் நந்தீசன் திருக்கைலாயத்தில் இறைவனிடம் நீங்காமல் நிலைத்திருக்கும் உயர்பதவி அடைந்தது, ஒரு லட்சியத் தவவழிபாடே ஆகும்.

ஔவைப்பிராட்டி வினாயகர் வழிபாட்டை அவருக்கு உகந்த முறைகளோடு தொடர்ந்து நீண்ட காலம் செய்து வந்ததால், விநாயகப் பெருமான் மிகவும் பாராட்டினார். ஔவையார் அவராலேயே அழைத்துச் செல்லப்பட்டு திருக் கைலாயம் சேர்க்கப்பட்டார். மார்க்கண்டேயன் தனக்கு ஆயுள் குறைவு. பதினாறு ஆண்டுகள் தான் என்று அறிந்து அந்த நாள் வரையும்; சிவ வழிபாட்டினைத் தொடர்ந்து கடுமையாகச் செய்து, இறைவன் அருள் பெற்று முடிவில் என்றும் பதினாறு என்று மார்க்கண்டேய முனிவர் ஆனார். சிறப்பான மார்க்கண்டேய புராணமும் தோன்றியது. பிரகலாதன் தனக்கு தந்தையாலும், பிறராலும் எல்லையற்ற இன்னல்கள் ஏற்பட்டபோதும், ''நாராயணா'' என்று சொல்லும் வழிபாட்டினை விடாப் பிடியாகக் கடைப்பிடித்தான். முடிவில் அராஜகமும், அரக்க குணமும் உயிரோடு அழிக்கப்பட்டு வெற்றி கண்டான்.

வழிபாட்டில் சற்று காலதாமதம் ஆனாலும் அது நிச்சயம் விளையும் என்பதற்கு எடுத்துக்காட்டாக ஒன்று.

ஆலால சுந்தரர் திருக்கைலாயத்தில் சிவனுக்கு வழிபாடு நடத்திக் கொண்டிருக்க வேண்டியது நித்திய கடமை. ஒருநாள் மலர்வனம் சென்று மலர் பறிக்க

இருந்தபோது அங்கே இரண்டு கன்னியர்களைச் க்ஷண நேரம் கண்ணுற்றார். அதனால் சற்று காலதாமதம் ஆகி வழிபாடு நடந்ததால், இறைவன், "பூவுலகத்தில் பிறந்து, கன்னியர்களை மணந்து சில காலத்தில் எம்மிடம் சேர்வாயாக" என்று அருளினார். அவ்வாறே ஆலால சுந்தரரும், தேவியின் தோழிகளான, கமலினி, அனிந்திதை, ஆக மூவரும் பூவுலகில் பிறந்தார்கள். இவை போன்ற பல நிகழ்ச்சிகள் உண்டு.

ஆலய வழிபாடு ஒரு கடமை உணர்வோடும், தூய நெஞ்சத்தோடும் செய்தால் முற்பலனைக் காட்டிலும் பிற்பலன்தான் அதிக அளவில் கிடைக்கும்.

**வழிபாட்டு முறைகளைக் காண்போம் :**

நாம் ஆலயம் சென்று தெய்வத்தை வழிபாடு செய்வதற்கு முதற் கடமை, உடம்பு குளித்தல் வேண்டும். அதிலும் தலையிலிருந்து பாதம் வரை முழுமையாகக் குளித்தல் அவசியமாகும். இல்லத்தில் உள்ள கிணற்று நீரிலோ, குழாய் நீரிலோ அல்லது வசதி வாய்ப்புகள் உடையவர்கள், ஆற்றிலோ, குளத்திலோ, அருவியிலோ, நீராடி உடல் சுத்தம் செய்து, உலர்ந்த தூய்மையான ஆடைகளையே மாற்றிச் செல்ல வேண்டும். (நீராடல் வகைகளை, நித்திய கடமைகள் என்னும் பகுதியில் விரிவாகத் தெரிந்து கொள்ளலாம்.)

ஆலயம் ஓர் பொது இடம். எல்லோரும் கூடுகின்ற இடத்திற்குச் செல்லுகின்ற எல்லோரும் மனச் சுத்தம் புறச் சுத்தம், இவற்றோடு செல்ல வேண்டும். மனச் சுத்தம் நிறைந்து உள்ளதை (மன பேதங்கள் இருப்பினும்) எடுத்துக் காட்ட புறச்சுத்தம்தான் துணை செய்கிறது.

ஒரு சிவாலயம் சென்று வணங்குதல் என்று எடுத்துக் கொண்டால், ஆலயத்தின் அருகில் சென்றவுடன் முதலில்

கை, கால்களை நீரால் கழுவிக் கொண்டு உள்ளே செல்ல முற்பட வேண்டும். அதற்கு முன், கோபுரத்தின் முன்னால் அரிகூடத்தில் நின்று கோபுர தெரிசனம் செய்ய வேண்டும். இரண்டு கைகளையும் தலைக்கு மேல் தூக்கி, கூப்பி வணங்க வேண்டும். பெண்கள் இவ்வாறு வணங்கக் கூடாது.

கோபுரத்தை ஒரு ஸ்தூல வடிவமாக நினைத்தும், கடவுளின் பாதங்களாக நினைத்தும் வணங்க வேண்டும்! கோயிலுக்குள் செல்லும் போது முதலில் தெரியும் கொடி மரத்தின் கீழ் நின்று, ஆண்கள், அஷ்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்ய வேண்டும். அஷ்டாங்கம் என்பது உடம்பு கீழே குப்புறப் படுத்து, தலை, காதுகள் இரண்டும், தோள்கள் இரண்டும், முகவாய்க் கட்டை ஆக எட்டு அவையவங்களும் தரையில் படுமாறு செய்து வணங்குதல் ஆகும் பஞ்சாங்கம், என்பது பெண்கள் தனது முழங்கால்களை மடக்கி அமர்ந்து, உடம்பை முன் வளைத்து, தலை, கைகள் இரண்டு, முழங்கால்கள் இரண்டு ஆக ஐந்து அவையவங்களும் தரையில் படுமாறு வணங்க வேண்டும். இந்த வித வணக்கங்கள் சைவ, வைணவ சமயங்களைச் சார்ந்த எல்லாக் கோயில்களிலும் செய்யலாம். இதுவல்லாமலும், அடியார்களை, பெரியோர்களை வணங்கும் போதும் செய்யலாம்.

## கொடி மரத் தெரிசனத்தின் அவசியம்

கொடிமரம் திருக் கோயில்களில் வெளிக் கோபுரத்தின் உட்பகுதியில் நிறுத்தப்பட்டிருக்கும். கோயிலின் அளவுக்கு ஏற்றதாக இருக்கும். 33 கணுக்கள் உள்ளதாக இருப்பது சிறப்பானதாகும். கொடி மரம் ஒரு யோகியின் உடலமைப்பினுள் விளங்கும் முதுகு எலும்புத் தண்டுக்கு, அல்லது மேரு தண்டத்திற்கு ஒப்பிடலாம். இதனுள் ஆறு

ஆதாரங்களும், சுஷீமுனை நாடியும் அமைந்திருக்கின்றன. குண்டலினி சக்தி மூலாதாரத்திலிருந்து வெளியேறி ஆறாதாரங்களையும் கடந்து ஸகஸ்ராரத்தை அடைகிறது. அங்கே அடையும் போது அமிர்தம் பொழிகிறது என்னும் தத்துவத்தை இது விளக்குகிறது. இதன் முக்கிய நோக்கம் அசுரர்களை அகற்றுவதன் பொருட்டும், சிவகணங்களையும், தேவர்களையும் அழைத்தற் பொருட்டும், பக்தர்களைப் பாதுகாப்பதன் பொருட்டும், கொடி மரம் நிறுவப்பட்டு உள்ளது சிவன் கோயிலின் கொடி மரத்தின் மேல் பகுதியில் நந்தியையும், விஷ்ணு கோயிலில் கருடனையும், சக்தி ஆலயங்களில் சிங்கத்தையும், விநாயகர் கோயிலில் மூஷிக வாகனத்தையும், முருகன் கோயிலில் மயிலையும், அந்தந்த மூர்த்தங்களுக்குத் தக்கவாறு அமைத்திருக்கிறார்கள்.

அபிஷேகம், அலங்காரம், நிவேதனம், அர்ச்சனை ஆகியவை, மூலவருக்குச் செய்யும் முறைப்படி அனைத்தும் கொடி மரத்திற்கும் செய்ய வேண்டும். கொடி மரம் செய்ய தேர்ந்தெடுக்கப்படும் மரம் நல்ல உறுதியும் ஒரே சீரான வடிவம் கொண்டதாக இருக்க வேண்டும். மரம் உத்தமமான ஜாதியில், சந்தன மரம், தேவதாரு, செண்பகம், வில்வம், மகிழமரம், போன்றவற்றில் தகுந்தது. மற்றவை தகாதது.

கொடி மரத்தின் அருகில் நின்றால் உள்ளே இருக்கும் மூலவரும் நன்றாகத் தெரிவார். ஆகவே இவ்வளவு முக்கியத்துவம் கோயில் கொடி மரத்திற்கு உள்ளதால், முதலில் கொடி மரத் தெரிசனம் செய்ய வேண்டும். கொடி மரத் தெரிசனம் முடிந்தபின் அதனருகில் உள்ள பலி பீடத்தை வணங்க வேண்டும். வணங்கும் போது நம் மனத்திலுள்ள ஆறு பகைவர்களை பலிபீடத்தில் பலி கொடுத்ததாக உறுதி செய்ய வேண்டும். அவை அத்தனையும் வெளியிலேயே விட்டு விட்டால் மனம் தூய்மை அடைந்து இறைவனிடம் செல்லுகின்றோம்.

கொடிமரத்தின் அருகிலிருந்து ஆரம்பித்து மூலவர் தெரிசனம், மற்றும் ஆராதனைகள் செய்து முடித்து, பிரகாரங்கள் சுற்றி வெளியில் வரும்வரை, இறைவனின் மூல மந்திரத்தை, மூன்றெழுத்தாவது, ஐந்தெழுத்தாவது, எட்டெழுத்தாவது குறைந்த ஒலியில் உச்சரித்துக் கொண்டேதான் வழிபடவேண்டும் குறைந்தது 108 முறை சொல்லி முடிக்க வேண்டும். இறைவன் திருநாமத்தை வாயால் சொல்லாமல் வெறும் ஊமையர்ன வழிபாட்டு முறை பயன் தராது. இறைவனைப் போற்றும்படியான தேவார திருவாசகப் பாடல்கள், திவ்யப் பிரபந்தப் பாடல்கள் அல்லது தனிப்பாடல்களையாவது அந்தந்த மூர்த்திகளுக்கும் அம்பாளுக்கும் தகுந்தபடி சொல்லி வணங்க வேண்டும்.

மூலவரைத் தரிசிக்க உள்ளே நமக்கு இடது கைப் பக்கமாகவும், இறைவனுக்கு வலது பக்கமாகவும், அதாவது பிரதக்ஷணமாகச் செல்ல வேண்டும். இது முறையாகும்.

மக்களாகிய நாம் பிறருக்கு எதைக் கொடுத்தாலும், வாங்கினாலும், எந்தப் பொருளை எடுத்தாலும், வலதுகைப் பழக்கம்தான் செய்கிறோம். ஒருவருக்கு வாழ்த்துச் சொல்வதானாலும், எழுதுவதானாலும் வலது கையில்தான் செய்கிறோம் என்பது தொன்றுதொட்டு வந்த பழக்கம். இது இயற்கையில் தோன்றியது என்பது உண்மையாகும். இவை போன்றே தெய்வம் நமக்கு அருளும் சக்திகொண்ட அபயக்கரம் தூக்கியிருப்பது வலதுகை தான். ஆகவேதான் உள்ளே சென்றதும் சன்னிதானத்தின் வலது பக்கமாகச் சென்று சுற்றி வந்து வணங்க வேண்டும். (பிரதக்ஷணமாக).

சிவன் ஆலயங்கள் பெரும்பாலும் கிழக்கு முகமாகத் தான் கட்டப்பட்டிருக்கிறது. ஒரு சில இடங்களில் மற்ற மூன்று திசைகளிலும் பார்த்த வண்ணம் இருக்கிறது.

கொடிமர தெரிசனம் முடிந்து உள்ளே பிரதக்ஷணமாகச் செல்லும்போது மற்ற சன்னதிகளில் இருக்கும் மூர்த்தங் களைத் தகுந்தபடி வணங்கிப் பின் இடதுபக்கமாக சுற்றி வந்து மூலவரை தெரிசிக்க சன்னதிக்குள் செல்ல வேண்டும்.

வடமேற்குக் கன்னிமூலை கணபதியை வணங்கும் போது அவர் முன் நின்று, கை கூப்பி வணங்கிய பின், இரண்டு கைளாலும் தலையில் குட்டிக்கொண்டு மூன்று முறை தோப்புக்கரணம் போட வேண்டும். விநாயகரின் மூல மந்திரத்தைச் சொல்லி வணங்கிக் கற்பூரம் பார்த்து விட்டுத்தான் அடுத்துள்ள முருகன் சன்னதிக்குச் செல்ல வேண்டும். விநாயகரிடம் தோப்புக்கரணம் போடும் முறையை விநாயகர் வரலாற்றில் விரிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

முருகன் சன்னதியில் முருகப் பெருமானை வழிபடும் போதும் அவரின் பெருமைக்குறிய பாடல்களில் ஏதாவது ஒன்று சொல்லி வணங்குதல் நல்லது. பெருமானின் திருப் பெயர்களில் வரும், முருகா, சரவணபவா, கந்தா, கடம்பா, கார்த்திகேயா, வேலவனே, சுவாமிநாதா, ஆறுமுகா, வள்ளிமணாளா, ஞானபண்டிதா, குஞ்சரி மணாளா, சிவபாலா என்று சொல்லி வணங்க வேண்டும். தமது கைகளைத் தலைக்கு மேல் தூக்கி வணங்குதல்- முருகப் பெருமான் குன்று தோராடல் என்ற தத்துவத்தில் உள்ளவர். ஆதலால் அவர் மலைமேல் உள்ளார் என்றும் மானசீகமா நினைத்துக் கொண்டு வணங்கி தீப ஆராதனை பார்த்த பின்தான் அடுத்த பக்கம் போக வேண்டும். மேலும் முருகனது பெருமைகளை வரலாற்றுப் பகுதியில் காணலாம்.

உட்பிரகாரம் சென்று ஒவ்வொரு மூர்த்தங்களையும் வணங்க வேண்டும். தமக்கு மிகுந்த ஞானத்தை வழங்கும்

கோலத்தோடு, ஞானமூர்த்தியாகிய சிவன் விக்ரகம், தெற்கு முகம் நோக்கி கல்லால மரத்தின் கீழ் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய பிரம்ம புத்திரர் நால்வரும், நான்கு வேத, ஆறு அங்கங்கள், கற்றுணர்ந்த போதிலும் அவற்றின் உட்கிடையை உணர்ந்தறிய முடியாதவர்களா இருந்தனர். அவர்களுக்கு அவர்கள் விண்ணப்பித்தபடி தெற்கு முகம் நோக்கி யோகியராகி, குருமூர்த்தியாகி உபதேசம் செய்ய எழுந்தருளியிருக்கின்றார். ஞானத்தின் விளக்கம் காட்ட சின்முத்திரை அடையாளத்தோடு அமர்ந்துள்ளார்.

சின்முத்திரை என்பது வலது கையில், சுட்டுவிரலைப் பெருவிரலோடு சேர்த்து மற்ற மூன்று விரல்களையும் தூக்கியபடி காட்டும் விதத்தில் அமைந்த பாவனை சின்முத்திரையாகும். தத்துவம் யாதெனில் உயிர்கள், ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களையும் அகற்றிக் கடவுளை அடைய வேண்டும். ஜீவாத்மா, பரமாத்வோடு ஒடுங்க வேண்டும். ஒன்று கலந்து பேரின்ப மடைய வேண்டுமென்பதே அந்த சின்முத்திரையின் பொருள். மணிவாசகப் பெருமானுக்கும் இந்த சின்முத்திரை காட்டி தன்னைத் தெரிந்து கொள்ளச் செய்தார் இறைவன்.

ஆகவே இவர் சன்னதியில் சற்று நேரம் நின்று வணங்க வேண்டும். இதன்பின் சண்டேசுவரரை வணங்க வேண்டும். இவர் சன்னதி சிறியதாக கோயிலின் வடக்குப் புறத்தில் தெற்கு நோக்கியிருக்கிறது.

இந்த சண்டேசுவர சிவபெருமானுக்கு அடுத்த முக்கிய பெருமையுடையவர்—இவரது வரலாறு காண்போம்:

சோழ நாட்டில் மண்ணியாற்றங்கரையில் ஒரு மூதூர். அது சேய்ஞலூர் என்பதாகும். அங்கு அந்தணர் இனத்திலே காசிபர் குலத்திலே பிறந்து, விசார சருமன் என்னும்

திருப்பெயர் பெற்று, ஐந்து வயது நிறம்பு முன்னரே, தன் முற்பிறவியின் உணர்வினால், ஓதாமலே வேத ஆகமங் களை நன்குணர்ந்து, சிவபக்தியில் என்றும் மூழ்கிக் கிடந்தார். ஒரு நாள் இடையன் ஒருவன் தன் மாடுகளை மிகவும் துன்புறுத்தக் கண்டு பொறுக்காமல் அவனுக்கு நல்லுணர்வு புகட்டி தானே மாடுகளை மேய்க்கத் தொடங் கினார். அதுமுதல் மாடுகள் இவரது அன்பிற்குக் கட்டுப் பட்டு மேய்ந்து வந்தன. நாள் தோறும் அதிக அளவில் மடியில் பால் சுரக்க, அதிலும் தானாகவே பாலைப் பொழிய ஆரம்பித்ததைக் கண்ட விசார சருமன், தனது சிவபூஜைக்கு திருமஞ்சனம் செய்யப் பயன்படுத்த எண்ண மிட்டார்.

அவர் வாழும் ஊரமைந்த மண்ணியாற்றின் கரையில் விளையாட்டுப் போல, மணலில் திருக்கோயில் கட்டி சிவாகமப்படி பாலைத் திருமஞ்சனம் செய்வித்துக் கொண்டு இருந்ததை மற்றவர்கள பார்த்து, "பாலை வீணாக்கி மணலில் கொட்டி வீணாக்கி விளையாடு கிறான்" என்று தந்தையிடம் சென்று சொல்ல, அவர் வந்து பார்த்து, உண்மையென நம்பி காலால் கோயிலை அழித்து நிற்க, அதே சமயத்தில் அவர், தியானத்தில் தன்னையும் அறியாது ஒரு கோலை எடுத்து வீச அது மழுவாகிக் கால்களை வெட்டிவிட பெருமான் உமாதேவி யாருடன் காட்சி தந்து தனக்காகச் செய்த செயலை விருமபி ஏற்று விசார சருமனுக்குச் சண்டீசன் என்னும் திருப்பெயர் சூட்டி, அன்று முதல் சிவபெருமானுக்குச் செய்யும் நிவேதனப் பொருட்கள், உடுத்திய ஆடை, அணிவித்த மாலைகள், அணிகலன்கள் அனைத்தும் இவருக்கும் சாற்றும் உரிமையுடையது எனக் கூறி முடிவில் தன் சடை முடியில் இருந்த கொன்றை மாலையினையும் விசார சருமனாகிய சண்டேசுரனுக்கு சூட்டி அருளினார்.

சண்டேசுரர் எப்போதும் சிவத்தியானத்தில் இருந்த படியே இருக்கும் இவர் சன்னதியில் நாம் வணங்கும் முறை : மூன்று முறை கைகொட்டி அழைக்கச் செய்து, அவர் நம்மைப் பார்ப்பதாக மதித்து சிவத் தெரிசன பலனை நமக்களிக்குமாறு வேண்டிக் கொள்வது முறை யாகும். இதை நாம் மூலஸ்தானத்து சிவதரிசனம் முடிந்து வெளிவந்து செய்யலாம்.

பிரகார மூர்த்திகளைத் தெரிசனம் செய்து முடித்த பின், மகாமண்டபத்திற்குள் செல்லு முன் அங்கே இரண்டு பக்கங்களிலும் நின்ற நிலையில் உள்ள இரண்டு துவார பாலகர்கள் 'என்று அழைக்கப்படும் காவலர்களின் அனுமதி மானசீகமாகப் பெற்றுக் கொண்டுதான் உள்ளே செல்ல வேண்டும். 'அடியேன் சிவபெருமானை வணங்க அனுமதிக்க வேண்டும்' என்று மனதால் நினைத்துப் பின் செல்லல் தெரிசனம் திவ்யமாகக் கிடைக்கும்.

மகாமண்டபத்தில் நின்றோ, அல்லது அர்த்த மண்ட பத்தில் நின்றோ இறைவன் திருஉருவம் பார்த்து, மூல மந்திரத்தை உச்சரித்து, சகல தீப ஆராதனையும் பார்த்து மெய்யுணர்வோடு வணங்க வேண்டும். பஞ்சாட்சர மந்திரம் அல்லது, துதிப்பாடல் பாடி மகிழ்ந்து வணங்கு வதால் நன்மை பல பெறுவோம்.

இறைவனை வணங்குவதற்கு நிவேதனப் பொருள் களைக் கொடுத்து (தேங்காய், பழம், ஊதுவத்தி, கற்பூரம், மலர் மாலை, நெல், அல்லது, நல்லெண்ணெய், பசும்பால், வெற்றிலை பாக்கு) நிவேதித்து வழிபடுதல் ஒரு முக்கிய அம்ஸமாகும். யாரும் வெறும் கையோடு செல்லாமல் ஒரு கற்பூரம், அல்லது சிறிய மலர் மாலையாவது கொண்டு செல்ல வேண்டும்.

ஒரு தனி மனித நலனுக்கும் அல்லது தனக்குப் பின் இருக்கும் மற்றயோர்க்கும், நலன்கள் அனைத்தும் கிடைக்

கும்படியாகத்தான் பூஜை, நிவேதனம், ஹோமம், ஜெபம், முதலியவைகள் செய்ய வேண்டுமென நமது சிவாகம நூல் விளக்குகிறது. ஆகவேதான் நம்முடைய உடல், பொருள், ஆவி அனைத்தும் ஆண்டவனுக்கு அர்ப்பணித்து நலம் பெற காலங் காலமாக, மற்றெவருக்கும் பிரிய மானதைச் செய்வதற்கு முன் மாதிரியாக கடவுளுக்கும், அதனடியார்களுக்கும் செய்து பழகுவது என்ற வழிமுறை யைக் கடைப் பிடித்தல் சாலச் சிறந்தது.

**வழிபாடுகளில் விளக்கு வழிபாடும் மிகச் சிறந்தது :**

வழிபாடு செய்தல் விதங்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமாக இறைவனிடம் வேண்டிக்கொண்டு செய்தல் உண்டு. மேலான பலனும், நன்மையும் தர வல்லது திருவிளக்கு வழிபாடு விளக்கு ஏற்றுதல் நம் இல்லங்களில் நாள்தோறும் வழக்கமாகச் செய்கின்ற செயல் என்று சாதாரணமாக எண்ணக்கூடும். ஆனால் அதிலும் சிறப்பளிக்கக் கூடியது நெய் விளக்கேற்றுதல் அதையும் ஆலயங்களில் சென்று செலுத்தி வழிபடுதல் பன்மடங்கு நன்மை கொடுக்கும் என்பது அனுபவத்தில் கண்ட உண்மை.

> "இல்லக விளக்கது இருள் கெடுப்பது
> சொல்லக விளக்கது சோதி உள்ளது
> பல்லக விளக்கது பலரும் காண்பது
> நல்லக விளக்கது நமச்சிவாயவே"

என்று அப்பர் பெருமான் விளக்குகின்றார்— நெய் ஊற்றி விளக்கேற்றினால் ஞானம் உண்டாகும், நினைத்தது நடக்கும், செல்வம் பெருகும். நல்லெண்ணெய் விளக்கேற் றினால் உடல் ஆரோக்யம் உண்டாகும். தேங்காய் எண்ணெய் விளக்கேற்றினால் வசிகரமளிக்கும். விளக் கெண்ணெய் தீபம் ஏற்றினால் தேவதாவசியம், புகழ்,

ஜீவன சுகம், தாம்பத்தியம் சுகம், இவையனைத்தும் கிடைக்கும், விருத்தியாகும். இலுப்ப எண்ணெயால் விளக்கேற்ற எல்லாவித சுகங்களும் மறுபிறவியிலும் உண்டாகும். ஐந்து வித எண்ணெயும் ஒன்று கலந்து தீபமேற்றினால் குறைவில்லாத, மேலான சிறப்புகளும், ஒருங்கே கூடி வந்து பலன் தரும்.

**விளக்கு முகமும், ஏற்றும் திசையும், நேரமும் :**

விளக்குகளில் ஒரு முகம், மூன்று முகம், திரி போட்டு விளக்கேற்றினால் மத்தியபலன், சௌபாக்யம் ஏற்படும். பஞ்சமுக விளக்கேற்ற குடும்பத்தில் ஒற்றுமையும் திருமணம் போன்ற மங்களகரமான காரியங்களும் ஏற்படும். சரவிளக்கு ஏற்றினால் முன் ஜென்ம பாபங்கள் தீர்ந்து நடைமுறையிலும் புண்ணிய பலன்கள் நிறைய ஏற்படும்.

அடுத்து விளக்கேற்றும் திசையைச் சற்று கவனிக்க வேண்டும். கிழக்குத் திசை நோக்கி ஏற்றுதல் பொதுவாகத் துன்பங்கள், கிரக பீடைகள் நீங்கும். மேற்கு முகமாக ஏற்றினால் கடன் தொல்லை, சனிப் பீடை, கிரக தோஷம், சல்லிய தோஷம் அனைத்தும் விலகும். வடக்கு முகமாக ஏற்ற திரண்ட செல்வம், மங்கள காரியங்களும், கல்விப் பெருக்கமும் சிறந்து வரும். நிறைந்த சௌபாக்கியம் தோன்றும். எக்காரணங் கொண்டும் தெற்கு முகம் பார்த்து இருக்கும்படி தீபம் ஏற்றக்கூடாது, ஏற்றினால் தீமையும், பாவமும், அபசகுணங்களும் தேடாமல் உண்டாகும். ஆகவே கூடாது தெற்கு முகம். இவை அனைத்தும் செய்வதற்குத் தகுந்த நேரத்தைத் தேர்ந்தெடுத்தல் சிறப்பாகும்.

ஒரு நாளில் அதிகாலை 3 மணி முதல் 5 மணிக்குள் மேற்கண்ட முறைகளில் ஏற்றுதல் இல்லத்தில் சர்வ மங்கள யோகத்தை உண்டாக்கும். மாலை வேளைகளில் தீபம்

ஏற்றி மகாலட்சுமியை வழிபட்டால், நல்ல பதவி, குற்ற மற்ற வேலைகள் கிடைக்கும். கன்னியர்களுக்கு நல்ல கணவன்மார்கள் அழகிலும், குணத்திலும் மிக்கவர்கள் வந்து சேர்வர். குடும்ப சுகம் பேன் மேலும் பெருகி நல மடைவது திண்ணம். இவற்றைக் கருத்தில் கொண்டு தகுந்த நேரங்களில் தீபம் ஏற்றுவது சிறந்தது.

## வழிபாட்டு முறைகளில் மேலும் சிறப்புகள் :

ஆராதனைகள் அனைத்தும் முடித்து முடிவாகக் கற்பூரம் ஏற்றி ஆரத்தி செய்ய வேண்டும். கற்பூர தீபாராதனை செய்யும் போது நாம் மிக மிக கவனமாக தியானத்துடன் இறைவனின் திருமுகப் பார்வையிலேயே இருக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் முடிவானது கற்பூர தீபாராதனை. இது தொன்று தொட்டு வந்த வழிபாடு களில் முக்கியமானது.

இறைவனை அடைய எந்தத் தத்துவத்தின்படி பின்பற்றி வழிபட்டாலும் முடிவாக சரணாகதித் தத்துவம் எல்லாவற்றிலும் மேலானது போல—இதுவும் ஒரு தத்துவ முறையாகும். கற்பூரத்தைப் பற்ற வைத்த வுடனே அது ஒளிவிட்டு எறிய ஆரம்பித்து விடுகிறது. அது தன் ஒளியில் தன்னைக் கரைத்துக் கொள்ளும்போது முடிவில் எதுவுமே மிஞ்சுவது இல்லை. அதுபோல நம்முடைய ஆன்மாவை இறைவனிடம் பற்ற வைத்து விட்டால், ஆன்மாவிற்குள் ஒளிந்து கொண்டிருக்கிற அத்தனை கேடுகளும், பாவங்களும் கரைந்து முடிவில் ஒன்றும் இல்லாமல் ஆண்டவனின் ஒளியில் எதுவும் மிஞ்சாமல் போய் சேர்ந்துவிட வேண்டும் என்று நினைக்கும் தத்துவமாகும் இதனை எடுத்துக்காட்ட திருவள்ளுவனார் கூறுகின்றார்.

*பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு—என்று*

எப்பற்றும் இல்லாத இறையொளியோடு நாம் உலகப் பற்றுகளைக் கரைத்து ஒன்றுபட வேண்டும் என்பதாக கற்பூர ஒளியேற்றி வழிபட வேண்டும். மற்றுமொரு விஞ்ஞானத் தத்துவமாக கற்பூர தீபாராதனை செய்கிறார்கள். தற்போது காற்றில் மாசு, தண்ணீரில் மாசு, உணவுப் பொருட்களில் மாசு என்றெல்லாம் தோன்றித் தீங்கு பலவும் ஏற்படுகின்ற கால கட்டத்தில் காற்றில் தான் அதிகமான நுண்ணிய கிருமிகள் கலந்து ஓரிடம் விட்டு மற்றோரிடம் சென்றும் தீமையை விளைவிக்கும் என்பதை அறிவோம். கற்பூர தீபத்தைக் காட்டுவதால் அக்கிருமிகள் கொல்லப்படுகின்றன. கோயில்களில் நாள் தோறும் அல்லது விழாக் காலங்களில் வந்து கூடும் மக்கள் கூட்டம் காரணமாக நெரிசல் ஏற்பட்டு மூச்சுத் திணறலும் கூட உண்டாகலாம். அதனால் பரவும் நோய்க் கிருமிகள் தொத்து நோய்களை உண்டாக்கும். அவற்றை ஒழிக்கப் பயன்படும் முக்கிய பொருள் கற்பூரம் எனத் தெரிந்து அதிக அளவில் கற்பூர தீபாராதனை காட்டப்படுகிறது.

சித்த வைத்தியத் துறையில் கற்பூரம் ஓர் அற்புதமான சக்தி கொண்ட மருத்துவ குணம் பெற்றது எனத் தெரிந்து பயன்படுத்தப்படுகிறது.

சில பாசாணங்களைச் சுத்தம் செய்யக் கற்பூரம் பயன்படுகிறது. கற்பூரத்தை நீரில் கரைத்து வீட்டின் சுற்றுப்புறங்களில் தெளித்தால், தொற்று நோய்க் கிருமிகள் அழியும். விஷப் பூச்சிகளும் இதன் வாசனைக்கு நெருங்காது. வீட்டில் ஏற்படும் விஷசுரம், ஜன்னி, சீதள சம்பந்தமான நோய்களுக்கு இது முக்கிய மருந்து. கற்பூர வாசனை நோய்க் கிருமிகளை அழித்து உடல் உருப்புகள் சரிவர இயங்கத் துணை புரிகிறது. இறைவனோடும் ஒன்றி நிற்கச் செய்யும் கற்பூரம் ஒரு சர்வ நிவாரணி என்றே சொல்லலாம்.

கோயில்களில் கற்பூர தீபாராதனையோடு, தீர்த்த நீரில் கற்பூரம் கலந்து கொடுப்பது, மிக மிக நல்லது. ஆகையால் கற்பூர தீபாராதனையும், சற்பூரத் தீர்த்தம் இரண்டையும் தவிர்க்கக் கூடாது.

அடுத்தது நவக்கிரக வழிபாடு கடைசியானது. ஆண்டவன் தனது ஐந்தொழிலைச் செய்வதற்குத் துணை செய்ய சில அதிபதிகளை நியமித்துக் கொண்டார். அவர்களே ஒன்பது நவக்கிரக அதிபதிகள். ஒவ்வொரு வருக்கும் தனித்தனிச் சக்திகளைக் கொடுத்து அவரவர்கள் அங்கங்கே நின்று அவ்வப்போது ஆட்சி புரியவும் வைத்து விட்டார். அந்த வகையில் அதிகார பலத்தைத் தக்க பொழுது பயன்படுத்திப் பங்கு கொள்கிறார்கள்.

இந்த நவக்கிரக அமைப்பை வடகிழக்குத் திசையில் சன்னதியாக அமைத்திருக்கிறார்கள். சில கோயில்களில் சனீஸ்வரபகவான் சன்னதியைத் தனியாக வைத்திருக் கிறார்கள். இங்கு நின்று இவரைத் தொழும்போது மனதில் ''நான் உன்னைத் தொழுகின்றேன். நீ என்னைத் தொடாதே'' என்று பலமுறை வேண்டித் தீவினைகள் நம்மைத் தொடாது பிரார்த்தனை செய்து கொண்டு, அடுத்து நவக்கிரக சன்னதி சென்று, நவக்கிரக மூல மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே பிரதக்ஷணமாக ஒன்பது முறை சுற்றி வந்து வணங்கிவிட்டு கற்பூர தீபாராதனை செய்து முடித்து மீண்டும் கொடிமரத்தின் அருகில் நின்று வணங்கிவிட்டு வெளிவர வேண்டும்.

சிவாலயங்களில் நடைபெறும் வழிபாட்டு முறைகள் போலவே சக்தி வழிபாடுகளும் தனியாகக் கட்டப்பட்ட அம்மன் ஆலயங்களில் பின்பற்றப்படுகின்றன.

அந்தந்த ஆலயங்களில் பிரதிஷ்டை செய்துள்ள சக்தி மூர்த்தங்களுக்குத் தகுந்த பெயர் வைத்து வழிபாடு நடத்தப்படுகின்றன. மாரியம்மன், பத்ரகாளி, அங்காள

பரமேஸ்வரி இவையெல்லாம் தாமச குணங்கொண்ட அமைப்பில் இருப்பவை. இந்தச் சக்திகளுக்கு கடந்த காலங்களில் மக்களின் மூட நம்பிக்கையினால் சில தவறான வழிபாட்டு முறைகளைக் கையாண்டு வந்தனர். நரபலி, பிற உயிர்ப்பலிகள் செய்து வணங்கி வந்தார்கள். அம்மாதிரியான முறைகளை மாற்றி சத்துவ குணங் கொண்ட அமைப்பில் வழிபாடுகள் நடந்து வருகின்றன. முன்காலத்தில் சக்தி கோயில்கள் ஊரின் எல்லைப் புறங் களில்தான் தனியாக அமைக்கப்பட்டிருந்தன. மக்கள் தனியாக அங்கு சென்று கும்பிடுவதற்கு அஞ்சுவார்கள். அவையெல்லாம் மாறி விழிப்புணர்ச்சி கொண்டு சில உண்மைகளைத் தெரிந்து கொண்டபின் சக்தியின் அமைப்பு "மாதொருபாகத்தான்" என்று பராசக்தியின் அம்ஸங்களைப் படித்து அறிந்தபின் "துஷ்ட தேவதை" என்பது போய் அதிர்ஷ்ட தெய்வம் என்று சாந்த நிலை யில் வணங்குதல் வேண்டுமென்று தற்பொழுது அதிக மாகச் சக்தி வழிபாட்டினைக் கடைப்பிடிக்கிறார்கள்.

அசுரர்களை அழித்து, ஒழித்து அவர்களுக்கு முக்தி கொடுத்து, உலக க்ஷேமங்களை ஏற்படுத்தவே தெய்வங் களின் விரதங்களாகவும், அவதார மகிமைகளாகவும், திருவிளையாடல்களாகவும், நடந்து வருகின்றன.

தெய்வங்களின் இவ்விதச் செயல்கள் உலக மக்களாகிய நமக்கு மட்டும் சந்தோஷத்தைக் கொடுப்பதல்ல. மேலுலக தேவாதி தேவர்களுக்கும் மகிழ்ச்சியைக் கொடுக்கும் முக்கியமாக அமைகிறது. மக்கள் கொண்டாடுவதை எடுத்துக் கொண்டால், நாள்தோறும் செய்து வருவதை நித்திய பூஜை என்றும், வாரங்களில் கடைப்பிடித்தலை விரதங்கள் என்றும், மாதங்களில் நடைபெறுதலை விழாக்கள் என்றும், ஆண்டுகளில் நடைபெறுதலை உற்சவம் என்றும் நியதிகளை ஏற்படுத்தி வணங்கி பிறவிப் பயன்களை அடைகின்றோம்.

மொத்தத்தில், வணங்குதல், பிரகாரங்கள் சுற்றுதல், நிவேதனம் செய்தல், அபிஷேக ஆராதனைகள் செய்தல், விளக்கு ஏற்றுதல், மந்திரங்கள் ஓதுதல், கற்பூர வழிபாடு செய்தல் இவை அனைத்தும் ஆலய வழிபாட்டின் கடமை களாக செய்தல் நல்வினைக்கே.

# 3. ஆலய ஒழுக்கம்

ஆலய ஒழுக்கம் என்பது, ஆலயப் பராமரிப்பு என்கிற அடிப்படையில், தூய்மை, அழகு, பாதுகாப்பு, இவற்றிற் சேர்ந்த தெய்வத் தன்மை, ஆகியவை எந்நாளும் கட்டிக் காக்க வேண்டுமென்பது ஆலயத்தை நிர்மாணித்தவர் களுக்கும், அதை ஒரு பொதுச் சொத்தாக ஆக்கி அனுபவிக்கின்ற மக்களுக்கும் உரித்தான செயல் என்பதே ஆலய ஒழுக்கமாகும்.

மக்களாய்ப் பிறந்து மண்ணில் வாழும் தகுதியடைந்து கல்வி கேள்விகளில் தேர்ந்து புகழோடு தோன்றியதாகப் பெருமை பெறும் நேரத்தில் நமக்கே விதித்த பண்பாட்டு விதிகளையும், ஒழுக்க நெறிகளையும், கலாச்சாரக் கோட்பாடுகளையும், பக்தி சார்ந்த முறைகளையும் எங்கும் எந்த நேரத்திலும் கடைப்பிடித்தாக வேண்டும். அதில் சற்று தவறினாலும் நமக்கும், நம்மைச் சார்ந்த பொது மக்களுக்கும், பெரிதும் பாதிக்கும். எல்லோருக்கும் உரிமையுள்ள, பொது இடமான ஆலயம் என்னும் புனித மான இடத்தில் எல்லோரும் ஒப்புக் கொள்கின்ற வகையில் எவருக்கும் உள்ளத்தாலும், உடலாலும் தீங்கு நேரிடாத

வாறு, ஒழுக்க நெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆலயத்தில் தெய்வம் குடிகொண்ட இடத்தில், பல சான்றோர்களும், ஆன்றோர்களும், அடியார்களும், அன்பர்களும் ஆக எல்லோரும் கூடுகின்ற இடத்தில் மிகுந்த மதிப்புக் கொடுத்து ஒழுக்கத்தைக் கடைப்பிடித்தாக வேண்டும்.

ஆதலால்தான் முந்தைய காலங்களில் ஊரில் ஏற்படும் நல்ல காரியங்கள், நியாயங்கள், தீர்ப்புச் சொல்லும் வழக்குகள், ஊர்ப் பஞ்சாயத்து என எல்லாவற்றையும் தெய்வத்தின் முன்னிலையில் வைத்து நடத்தினார்கள். மனிதர்கள் மாறினாலும், தெய்வத்தின் முன், பயம், நீதி நெறியில் காக்கும் என்ற எண்ணம் நமக்கு நிலைத்து நிற்கத் தேர்ந்தெடுத்தார்கள் அவை பொது ஒழுக்கத்தின் அடிப்படையில் அமைந்தனவாக இருந்தன.

நல்ல மனிதருக்கு, புகழோடு தோன்றிய மனிதருக்குக் கடைப்பிடிக்க வேண்டிய, அல்லது அமைந்திருக்க வேண்டிய ஒழுக்கங்கள் 'பதினெட்டு' என வரையறுக்கப் பட்டுள்ளது. சாந்தம், நேர்மை, எளிமை, வாய்மை, தூய்மை, ஈகை, அடக்கம், நாணயம், நெகிழ்வு, பெரு நிலை, பெருந்தன்மை, பற்றின்மை, விடாப்பற்று, சினம் அறுத்தல், காலந் தவறாமை, நிலை பிறழாமை, தற்பெருமையின்மை, பரந்த மனப்பான்மை இவை நெஞ்சில் நிறைந்து கடைப்பிடித்தால், மனிதர், தேவரும் ஆவர் என்பதில் மாற்றம் ஏற்படுமா. மனிதருக்குத் தற்கால நாகரீகச் சூழ்நிலையில் மேற்சொன்ன எல்லா வற்றையும் நடைமுறைப் படுத்த முடியாது. இவற்றுள் சிலவற்றை மட்டும் உறுதிப்பாடுடன் பொது இடமான ஆலயத்தில் கடைப்பிடித்தால் அது இரு சாராருக்குமே மிகுந்த பெருமையைத் தேடித் தரும். நன்மைகளே வந்து சேரும்.

நாம் ஆலயம் செல்வதற்கு எண்ணும்போதே மனதில் ஒரு பக்தி நிறைந்த பயம் தோன்ற வேண்டும். உடல் குளித்து, தூய்மையான ஆடைகள் அணிந்து, சமயச் சின்னங்கள் நெற்றியில் வைத்துக் கொண்டு, செல்ல வேண்டும். அங்கு சென்று ஆண்டவனை வழிபடச் செய்யும்போது அந்த ஆலயத்தின் கட்டுதிட்டங்களைப் பின்பற்ற வேண்டும். கைகால்களைக் கழுவிக் கொண்டு உள்ளே செல்லல், முறையான பிரதக்ஷணம் பின்பற்றுதல், அமைதியான மௌனம் கடைப்பிடித்தல், இல்லத்தில் நடந்த சொந்தப் பிரச்சனைகளை வந்த இடத்தில் பேசாதிருத்தல், நண்பர்களையோ, பெரியோர்களையோ சன்னதிக்கு முன்னால் அர்த்த மண்டபத்திலும், மகா மண்டபத்திலும் பார்த்தபோது அவர்களை வணங்குதலைத் தவிர்த்தல். இதன் காரணம், ஆலயத்தில் அந்த இடத்தில் இறைவனை வணங்கும் பெருமையாகத்தான் இருக்க வேண்டும். அவர்களுடன் அளவாவுதலை வெளிப் பிரகாரத்தில்தான் வைத்துக் கொள்ள வேண்டும்.

ஆலய வளாகத்தில் எங்கும், எச்சில் துப்புதல், காரி உமிழ்தல், சிறுநீர் கழித்தல் இவை கண்டிப்பாகத் தவிர்க்கப்பட வேண்டும். அதிக சத்தத்தோடு சிரித்தல், பேசுதல், ஒரு சில காரணங்களுக்காக ஒருவர்க்கொருவர் சண்டை பிடித்து மற்றவர்கள் கவனத்தைச் சீர்குலைத்தல், இவை முற்றிலும் தவிர்க்கப்பட வேண்டும் ஏளனம் செய்யாதிருத்தல், எதிர் வரிசையில் நிற்பவர்களை ஏரெடுத்தும் பாராதிருத்தல் வேண்டும்.

பிரசாதப் பொருட்களான, திருநீறு, குங்குமம், அபிஷேகம், தீர்த்தம் இவைகளை வாங்கும்போதும், பிறர் வாங்கும்போதும், கீழே கொட்டாமலும், பிறர் காலில் மிதிபடாவண்ணம், கவனமாக இருத்தல் வேண்டும். உட்பிரகாரத்திலும், சுற்றுப் பிரகாரத்திலும், கிழிந்த காகிதங்கள், உடைந்த தேங்காய்த் துண்டுகள்,

உரித்த பழத் தோல்கள் இவற்றைப் போடாதிருத்தல் இவையும் கண்டிப்பாகத் தவிர்க்கப்பட வேண்டும். இவை யெல்லாம் நாம் செய்யாது இருத்தல் மட்டுமல்லாது, குழந்தைகளுக்கும் மற்றயோருக்கும் எடுத்துச் சொல்லிப் பழக்க வேண்டும். இவை தனி மனிதருக்கும், பொது மக்களுக்கும் நன்மை பயக்கும்.

சன்னதியின் முன் நின்று வணங்க இருக்கும்போது தெய்வச் சிந்தனையைச் சிதறவிட்டு அங்கும் இங்கும் திரும்பிப் பாராதிருத்தல், உற்சவ மூர்த்தி விக்ரகங்களைப் பார்க்கும் போது இவை எதனால் செய்யப்பட்டதாக இருக்கும், எங்கு செய்யப்பட்டது என்ற கேள்விகளைக் கேட்காதிருத்தல், (கேட்பது தெய்வத் தன்மையையும், அருள் நிலையையும், அலங்கார அழகையும் பின்பற்றா மல் சாதாரண நிலையில் பார்த்தால் நமக்கு அருள் சக்தி கிடைக்காமல் போய் விடும்.) ஆலயத்திலுள்ள மற்ற பொருள்களையுப் பார்த்து, இது எப்படி, அது இப்படி என்னும் வீண் ஆராய்ச்சி மேற்கொள்ளல் கூடாது. கோயிலின் உட்சென்று வெளிவரும் காலம் வரை தெய்வத் திருநாமங்கள், அலங்காரத் தோற்றங்கள், அவதார மகிமைகள், திருப்பாடல்கள், மந்திரங்கள், இவற்றைத் தான் மனதினாலும், வாயினாலும், சிந்தித்து, சொல்லி லயிக்க வேண்டும். வழிபாட்டு ஒழுக்கங்களில் மற்றுமொரு செயல் முக்கியமாகக் கருதப்பட வேண்டும்.

எந்தத் திருக்கோயில் தலங்களுக்குச் சென்று வழிபட்டு வீடு திரும்புவதானாலும் அங்கிருந்து பெற்று வந்த நிவேதனப் பொருட்கள், தீர்த்தம், பஞ்சாமிர்தம் முதலானவற்றையும், புனிதமாக எண்ணி அது பழுதுபடா வண்ணமும், அலட்சியப்படுத்தாத வண்ணமும் பாதுகாத்து வீட்டில் கொண்டுபோய் சேர்க்க வேண்டியது முக்கியம். கோயில் சென்று திரும்புபவர்கள், வேறு இடங் களுக்குச் செல்லாமல் நேரே வீடு செல்ல வேண்டும்.

அப்படி வீடு சென்றவர்கள், கோயில் சென்று வந்த களைப்பாகவோ அல்லது அங்கு மற்றவர்களை தொட்டும் பேசியும், வந்தது குற்றம் என்று கருதி உடனே குளித்தலோ, அல்லது உடை மாற்றுதலோ கூடாது. அந்த நாள் முழுவதும் இருந்து அடுத்த நாளில்தான் எதையும் செய்தல் வேண்டும். அப்படி இல்லையென்றால் அதை இழிவுபடுத்திய குற்றம் ஏற்படும் அலட்சிய முடிவாகத் தான் இருக்கும். அவ்வாறு முடிவு செய்த ஒரு சிவனடியாரின் நிகழ்ச்சியைக் காண்போம்.

அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரான நமிநந்தியடிகள் என்னும் சிவனடியார் சோழநாட்டைச் சேர்ந்த பொன்னிவள நாட்டில், ஏமப்பேறூர் என்னும் வளம்மிக்க ஊரில் அந்தணர் குலத்தில் பிறந்து, சிவபெருமான் திருவடிகளையே வணங்கும் பேறு பெற்ற தவசீலர்; திருநீற்று நெறியில் சிறிதும் பிறளாத வாய்மை நலத்துடைய மறைநூல் சீலத்தால் சிவந்த வேள்வித் தீயைப் போன்றவர் வாழ்ந்து வந்தார்

அவர் திருநீற்று நெறியால் தெய்வ வலிமை பெற்று அடுத்த சமயத்தாரின் ஏசலுக்கும் பூசலுக்கும் ஆளாகி, அருகில் உள்ள அறநெறித் திருக்கோயிலில் திருவிளக்கு ஏற்ற, தண்ணீர் ஊற்றி திருவிளக்கேற்றிய பெருமை பெற்றவர்— தெய்வ அருள் பெற்றவர். ஏமப்பேறூருக்கு அருகில் உள்ள திருவாரூரில் எழுந்தருளியுள்ள புற்றிடங் கொண்ட பெருமானுக்கு சிவத்தொண்டு புரிய அந் நாட்டை ஆண்ட சோழமன்னன் நியமித்தான். நாதி சிவத் தொண்டில் ஒருநாள் பங்குனி உத்திர விழாவை நடத்தினார். அவ்விழாவின் போது பெருமானின் உற்சவமூர்த்தி அருகில் உள்ள திருமிழலைக்கு எழுந்தருளினார்.

அங்கு எல்லாக் குலத்தவரும் வந்து பங்கு கொண்டு சிறப்பாகச் சேவித்தனர். அங்கு நமிநந்தியடிகளும் உடன்

திருந்து விழாப் பேற்றைக் கண்டுகளித்தார். ஆனந்தப் பரவசம் அடைந்தார். பொழுது போயிற்று. சுவாமி களின் திருவீதி உலா முடிந்து மீண்டும் திருவாரூருக்குத் திரும்பினார். நமிநந்தியடிகளும் தமது ஊர் திரும்பி னார் வீடு வந்தடைந்தவர் தனது வீட்டின் முன்பக்கம் செல்லாமல் புறக்கடை வழியாகச் சென்று அமர்ந்தார்.

தனது மனையாளை அழைத்து, "நான் திருமிழலைக்கு பங்குனி உத்திர விழாவில் இறைவன் திருவீதி உலாவுடன் சென்றேன். சென்ற இடத்தில் பல்வேறு குலத்தவர்களும் வந்திருந்தனர். அவர்களைத் தீண்டியதால் உடல் தீட்டுப் பட்டுவிட்டது. இன்று பூஜை செய்வதற்கு நான் குளித்து விட்டுத்தான் செய்ய வேண்டும். ஆகவே குளிப்பதற்கு நீர் முதலியவை எடுத்துவை" என்று சொல்லிவிட்டுப் புறக்கடைத் திண்ணையில் சற்று கண் அயர்ந்தார். சென்று திரும்பிய களைப்பால், அந்தக் கண்ணுறக்கத்தில் பெருமான் தோன்றி "ஞான வேதியனே திருவாரூரில் பிறந்தவர்கள் எல்லோரும் நமது கணங்களே. அத்தன்மையை நீ காண்பாய்" என்று கூறி மறைந்தார். உடனே கண்விழித்த அடிகளார் உண்மையை உணர்ந்தார். உடனே அந்த இரவிலே இல்லத்திற்குள் சென்று சிவபூஜையை முடித்தார். அடுத்த நாள் காலை திருவாரூர் சென்றார். அங்கு அவர் கண்ட காட்சி— இறைவன் கனவில் சொன்னது போல திருவாரூரில் உள்ள அத்தனை பேருமே சிவனடியார் களாகவே மாறியிருந்தனர். ஜோதிப் பிரகாசமான திருமேனியோடு சிவகணங்களாகவே தோன்றக் கண்டார். நமிநந்தியடிகள் தலைமேல் கைகூப்பி மிகுந்த பக்தி கொண்டு தரையில் விழுந்து வணங்கி பெருமகிழ்வு கொண்டார். சற்று நேரத்திற்கெல்லாம் சிவ கணங்கள் மறைய பெருமானிடம் சென்று வழிபட்டார்.

இவர் போன்ற பலரும், இழிவுபடுத்தாத ஆலய ஒழுக்க நெறிகளை கடைப்பிடித்து இருந்தனர் என

அறிகிறோம். வேத, சாத்திர, சம்பிரதாய நியதிகளின்படி பல நெறிகளின்படி பல நெறிகளைப் பின்பற்றி ஆலய ஒழுக்கம் காப்போம். ஆலயப் பெருமைகள் வழிபடு வோரிடம்தான் உள்ளது நாம் மட்டும் அதன் பெருமை களை உணர்ந்து மகிழ்வதோடு இருந்து விடாமல் மற்ற யோருக்கும் எடுத்துக்காட்டி வழக்கப்படுத்தல் தர்ம மாகும்.

பொதுவான நல்லொழுக்கம் மனிதரை வாழ்க்கையின் உச்ச நிலைக்கே கொண்டு நிறுத்தும். சில பந்த பாசங் களுக்கு கட்டுப்பட்டு நடக்க வேண்டிய அவசியத்திற்காக கடைப்பிடிக்க வேண்டிய நியதிகளுள் நல்லொழுக்கம் ஒன்றாகும். ஆனால் இடம் பொருள் ஏவல் என்று ஒரு பகுதியை வைத்திருக்கிறார்கள். இடம் என்பது பொது இடம் ஆன ஆலயம் ஆகும். அங்கு செல்வது இறைவன் அருள் பெற்று உய்யவேதான். இறைவன் அருள் பெற எந்த நல்லொழுக்கமும் இல்லாமல் அங்கு சென்று அவனருள் பெற இயலாது. ஆண்டவனோ மிகத் தூய்மையானவன், மிக உயர்ந்தவன், ஆணவத்திற்கு எட்டாத பரம்பொருள், எளிமைக்கு இறங்குபவன்.

முன் அத்தியாயத்தில் கூறியதுபோல சுருக்கமாக, எளிமைக்கு புறச் சுத்தம் நீரால் அமைந்தும், அகச்சுத்தம் மனத்தூய்மையில் அமைந்தும் நல்லொழுக்கத்தைப் பல வழிகளில் செயல்படுத்திக் காட்டியும் நின்றால் இறை யருள் தானாக அமையும். இம்மூன்றில் ஒன்று குறைந் தாலும் இறைவனது அருள் கிடைப்பது அரிதே.

இன்னும் ஒரு படி ஆலய ஒழுக்கம் காப்பதை உயர் வாகச் சொன்னால், புலால் உண்ணாதிருத்தல், புகை பிடிக்காதிருத்தல், மது அருந்ாது இருத்தல் எல்லோ ருக்கும் நன்மை தரும். ஆலய எல்லைக்குள் எதுவும் பிறருக்குத் தீமை தராதவகையில் அமையும் ஒழுக்கம் தெய்வம் ஏற்றுக் கொள்ளும்

# 4. ஆலயப் பூஜை முறைகள்

வாழ்க்கையில் நாம் உயர்வதற்குப் பல மனிதர்கள், உறவினர்கள், என்ற முறையில், நண்பர்கள் என்ற முறையில், எதிர்பாராத சந்திப்புக் காலத்தில் ஏற்படும் உதவிகள், அன்பர்கள், பெரியோர்கள் என்னும் பாசத்தில் அதிக உதவிகள் புரிந்து வருகிறார்கள். அப்படிப்பட்ட சான்றோர்களின் அன்பும் மரியாதையும், ஆதரவும், நன்மதிப்பும் நமக்குக் கிடைக்க வேண்டுமானாலும், அது நிலைத்து நிற்க வேண்டுமானாலும்... நம் அன்பு அவர்களிடம் நீங்காது இருக்க வேண்டுமானாலும், அதற்கான ஆயத்தமாகப் பல வழிகளைக் கையாளுகின்றோம். முக மலர்ந்து உபசரித்தில், விருந்தோம்புதல், பணத்தாலும், பொருள்களாலும், செயல்களாலும், உதவிகள் நாம் அவர்களுக்கும் செய்து அன்பான இடம் பிடிக்கின்றோம். இது இயற்கையாகவோ செயற்கையாகவோ நடைபெறும் ஒன்று.

சமுதாய அமைப்பில், கூடி வாழ்தல் என்று எடுத்துக் கொண்டால் மேற் சொன்னவையெல்லாம் செய்தாக வேண்டும். ஒரு இலக்கண, இலக்கிய மனிதாபிமான, நாகரீக வாழ்க்கை சிறப்புப் பெற சில வகையான கூட்டமைப்பு, இல்லை யென்றால் வாழ்க்கை ஒளிபெறாது.

மக்களுக்காக, மக்களிடையே தோன்றும் அன்பிற்காகவும், ஆதரிப்பிற்காகவும், மேற்சொன்னவை மேற்கொள்கிறோம் என்றால் இந்தப் பூவுலக மக்களையும் மற்ற கோடானு கோடி ஜீவராசிகளையும் படைத்துக் காக்கும் இறைவனை எத்தனைச் சிறப்புக்களோடு

உபசாரங்கள் செய்ய வேண்டும் தெரியுமா? "மக்கள் தொண்டே மகேசன் தொண்டு" என்பார்கள். ஆனால் மகேசன் இல்லையானால் மக்கள் இல்லை என்பது உண்மையல்லவா. "குழந்தையும் தெய்வமும் கொண் டாடும் இடத்தில்" என்பதும் உயர்ந்த செயலுக்குரிய வார்த்தை. இங்கே கொண்டாடுதல் என்பது பல உபசரிப் புகளோடு பொருள் கொண்டது.

யாவராயினும் உயர்வானவற்றை அவர்கள் விரும்பி ஏற்றுக் கொள்வனவற்றை ஏற்றபின் மனம் மகிழ்ந்து ஆனந்திக்கின்றவற்றை, அதனால் நல்ல பிற்புலன்கள் கிடைக்கின்றவற்றை உபசார முறையில் செய்ய வேண்டும்.

ஆண்டவருக்குச் செய்யும் உபசாரங்களான சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு செயல் களுக்கும் உள்ளடங்கிய பொருள், நித்திய பூஜைகள் செய்வதையே குறிக்கும். முறையான பூஜைகளால், மேற்கண்ட நான்கையும் நிறைவேற்றி முழுமை அடைய முடியும். ஒன்றுக்குப் பலவான முறைகளில் செய்தால் நம் மனம் இறைவனிடத்தில் ஒன்றி அருள் கிடைக்க வழி பிறக்கும்.

தனக்கென்று அருள் கிடைக்கச் செய்யும் பூஜை ஆத்மார்த்த பூஜை எனவும், பிறர் உய்வதற்காகச் செய் யும் பூஜை பிரார்த்த பூஜை எனவும் இரண்டு வகையில் சொல்லலாம்.

ஆத்மார்த்த பூஜை என்பது, ஒரு மகானிடம் சென்று, அல்லது, ஒரு குருவினிடம் சென்று (குருகுல ஆசான்) உபதேசம் பெற்று தான் மேலோங்குவதற்காகச் செய்து கொள்ளும் பூஜைகள் ஆத்மார்த்தம் எனப்படும்.

பரார்த்த பூஜை என்பது உலகில் உள்ளோர் அனை வரும் தெய்வத்தை வணங்கி உலக வாழ்வுத் துன்பங்

களிலிருந்து, பாவங்களிலிருந்து கடைத் தேறுவதற்கு தேவர்களும், முனிபுங்கவர்களும், ரிஷிகளும், அரசர்களும், தற்காலத்தில் மனிதர்களும் ஸ்தாபிக்கப்பட்ட ஆலயங் களில் பூஜைகள் நடைத்துவதாகும்.

பல்லோருடைய நலன் கருதிச் செய்யப்படும் பூஜைகள் எப்படிப்பட்டதாக இருக்க வேண்டுமென்றால், அது முற்றிலும், ஆத்மசுத்தி, ஸ்தான சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்னும் ஐந்து வகை சுத்தி களையும் எவ்விதக் குற்றங் குறைகளும் இல்லாதவாறு செய்தல் வேண்டுமென்பதைச் சைவ சமய நெறி வலியுறுத் துகிறது. இந்தப் பஞ்ச சுத்தியினால் ஆணவம், கன்மம், மாயை, திரோதாயம், மாயேயம் என்னும் ஐவகைப் பாசங்களைக் களைந்து இறையோடு ஒன்றும் இறைத் தன்மையை அடையலாம்.

## 1. ஆத்ம சுத்தி

முக்கரண சுத்தியாகிய மனம், வாக்கு, காயம் என்னும் சுத்திகளோடு, பஞ்ச சுத்தியும் ஆலயப் பூஜையின் போது மேற்கொள்ளல் வேண்டும். கற்பக்கிரகத்தில் நின்று ஆராதனைகள் செய்யும் அர்ச்சகர்களானாலும் சரியே, இல்லங்களில், மற்றும் திருவிழாக்களில், அல்லது தெய்வத் திருஉருவப் படங்களுக்கு முன் நின்று பூஜைகள் செய்யும் ஆச்சார்யர்களானாலும் சரியே, மற்ற சேவார்த்திகளானாலும் சரியே, ஆன்மாவைச் சிதற விடாமல், அவசியமற்ற வேறு எண்ணங்களில் ஈடுபட விடாமலும், மனம் மற்றவற்றின் பால் ஓடவிடாமலும், நேர்முகமான ஒரு தியான நிலையில் இறைவன்பால் வைத்துப் பூஜைகள் செய்தால், பார்க்கிற மற்றவர்களுக்கு பயபக்தி ஏற்படும். சேவார்த்திகளுக்கு முன்மாதிரியான வழியை எடுத்துக் காட்ட முடியும். எனவே ஆத்ம சுத்திதான் எல்லாவற்றிற்கும் முக்கியமானது.

## 2. ஸ்தான சுத்தி

கோயில்களில் மூலஸ்தானத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்ட திருஉருவங்களை ஒவ்வொரு நாளும், தேவைப்படும் வேளைகளில் எல்லாம் பூஜைகள் ஆரம்பிக்குமுன், அன்றாடம் எடுக்கப்பட்ட சுத்தமான நீரால் கழுவி சுத்தம் செய்தல், கால்கள் மிதிபடும் இடங்களிலும் சிறிதும் கூட அழுக்குத் தேங்காத அளவில் நீரைக் கொட்டி சுத்தம் செய்தல், ஆராதனைக்காக கையாளப்படும் அனைத்தும் சுத்தம் செய்தல், சேவார்த்திகள் கொண்டு வரப்படும் பொருட்கள் சுத்தமாக இருக்கக் கண்காணித்தல், விளக்குகளில் நாள்தோறும் புதிய திரி போட்டு, எண்ணெய் விட்டுப் பற்றவைத்தல் - இவை அனைத்தும் ஸ்தான சுத்தியில் மேற்கொள்ளப்பட வேண்டியவை ஆகும்.

## 3. திரவிய சுத்தி

இதை சற்று மிகவும் கவனமாகப் பார்த்தல் நல்லதும் அவசியமும் கூட. இறைவனுக்காகச் செய்யப்படும் பூஜைக்குரிய பொருட்கள் மற்றும் பொருளல்லாத செல்வங்கள், கொடுக்கும் போது, ஒருவர் தனித்தோ அல்லது பலர் சேர்ந்து, பணம் மற்றும் உபயப் பொருட்களாகக் கொடுக்கும் செல்வங்களோ, நகை மற்றும் ஆடைகளோ, தெரிந்தும் தெரியாமலும் கூட குற்றமற்றதாக இருத்தல் வேண்டும். அவை, பிறரிடமிருந்து மனமுவந்து பெறாமல் கட்டாய, நிர்ப்பந்தத்தின் பேரில் கொடுக்கப்பட்டதாகவும், களவாடியதான பொருட்களாக, தகாதவர்களிடமிருந்து பெற்ற பொருட்களாக இல்லாமல், தரம் குறைவில்லாத, தீங்குற்றதாக இல்லாமல் நல்ல நிலையில் எல்லா வகையிலும் உள்ளதாக— தேர்ந்தெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

## 4. மந்திர சுத்தி

மூர்த்தங்களுக்கு மந்திரங்கள் சொல்வதை மிக கவனத்தோடு பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு சிறு தவறு சொல்லிலோ, பொருளிலோ ஏற்பட்டால், சொல்பவருக்கும், கேட்பவருக்கும் பங்கம் ஏற்படும். ஆகவே சொல்லும் மந்திரத்தை மிக வேகமான ஒலியில் உச்சரிக்காமலும், கேட்பவருக்கு விளங்குகின்ற வகையிலும், சொற்களைத் தெளிவான, திருத்தமான வகையிலும், பிழைகள் சிறிதும் ஏற்படாத வகையிலும், ஷோடஸ மந்திரமோ, அஷ்டோத்ரமோ, அல்லது சகஸ்ர நாமமோ, எதுவாயினும், மனச் சுத்தியோடு, மந்திர சுத்தியிருத்தல் அவசியம். ஒரு சமஸ்கிருத மொழியில் அமைந்த கருத்துக்களும், தமிழ் மொழியில் அமைந்த கருத்துக்களும், உச்சரிப்பினால் உள்ளான பொருளைத் தெளிவுபட காட்ட வேண்டும் என்பதே முக்கிய நோக்கமாகும். எனவே "இறைவனது அருள் நமக்குத் திண்ணமாகக் கிடைத்தது" என்று நம்பிக்கையூட்டச் செய்வது மந்திரங்களை எடுத்துச் சொல்லும் நிலையே ஆகும்.

"மந்திர சுத்தம் மகேஸ்வர சித்தம்"

"நாவின் பொருள் நாரணன் அருள்"

என்னும் சிறப்புப் பெற வேண்டும், மந்திர சுத்தியில்.

## 5. இலிங்க சுத்தி

பக்தர்கள் பேரின்ப நிலையை அடைவதற்கு மூர்த்தங்களின் அலங்காரச் சிறப்பு எல்லா வகையிலும் முக்கியத்துவம் பெற வேண்டும். அலங்கார ஆராதனைகளுக்கு முன் திருஉருவ சுத்தி, அதாவது இலிங்கசுத்தி முறைப்படி செய்தல் அவசியம்.

அபிஷேகப் பாத்திரத்தில் நீர் நிரப்பி, அதில் தீர்த்தங்களை ஆவாஹனம் செய்து இலிங்கத்தை அபிஷேகம் செய்தல் வேண்டும். அதன்பின்தான் மற்ற அபிஷேகங்களைச் செய்ய ஆயத்தமாதல் வேண்டும். இலிங்க சுத்தியே எல்லா சுத்திகளுக்கும் மிக முக்கியமானது.

அபிஷேகத்தின் அவசியம் பற்றிச் சொல்லப் போனால் அது, "அருளென்னும் புறவினையாட்டி" என்று காசிக் காண்டத்தில் கூறியதன் உண்மையாக, இறைவனின் திருவருள் ஞானமே நீரெனப் பாவித்து அபிஷேகம் செய்தால் மும்மல நிவாரணம் ஏற்படும் என்பது திண்ணம்.

அபிஷேகப் பொருட்களையும், அவற்றைச் செய்யும் முக்கியங்களையும் முன் அத்தியாயங்களில் சொல்லப் பட்டது. அதற்குப் பிறகு முறைகளை ஆயத்தமாக்க வேண்டும். பூஜை முறையில் பதினாறு உபசாரங்களை ஒன்றன் பின் ஒன்றாகச் செய்தாக வேண்டும். அவை ஷோடஸ உபசாரங்கள் எனப் பெயர் பெறும்.

1. ஆவாஹனம், 2. ஸ்தாபனம், 3. சந்நிதானம், 4. சந்நிரோதனம் 5. அவகுண்டனம், 6. தேனுமுத்திரை, 7. பாத்தியம், 8. ஆசமநீயம், 9. அருக்கியம், 10. புஷ்பதானம், 11. தூபம், 12. தீபம், 13. நைவேத்தியம், 14. பாநீயம். 15. ஜப சமர்ப்பணை, 16. தீபாராதனை (இதில் பதினாறு வகையான தீபங்களை ஏற்றிக் காட்டுதல்) என்பனவாகும்.

**ஒவ்வொன்றைப் பற்றியும் விரிவாகப் பார்ப்போம் :**

1. **ஆவாஹனம் :** ஆண்டவன் திருவருளால் நமக்கு ஞானத்தை உண்டாக்கக் கூடிய சாதனமாக அமையும் பூஜைகளைச் செய்யப் போவதற்கு மூல மந்திரங்களைச் சொல்லி அந்த இடத்திற்கு (பிரதிஷ்டை செய்யப்பட்ட இடத்திற்கு) வரவழைத்து அபிமுகமாகச் செய்தலே ஆவாஹனம் ஆகும். இது முதற்படியாகும்.

2. ***ஸ்தாபனம் :*** இறைவனை வரவழைத்த பின் அந்த இடத்தில் அமரச் செய்யும் விதமாக— "திருவருளே அடியேனை அனுக்கிரஹிப்பதற்காக விக்ரகத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும் என்கிற பாவனையாக அவரிடம் வேண்டிக் கொள்ளல் ஸ்தாபனமாகும், அல்லது ஆசனம் ஆகும்.

3. ***சந்நிதானம் :*** ஸ்தாபனம் ஆனபிறகு பூஜிக்கப் படுகிறவராகிய இறைவன் அருளும் தன்மையையும், பூஜிக்கிறவராகிய ஒருவரின் அனுகிரகிக்கப்படும் தன்மையையும் உண்டு பண்ணுவதே சந்நிதானம் என்பதாகும்.

4. ***சந்நிரோதனம் :*** இறைவனே நீங்கள் எப்போதும் என்னிடத்தில் அனுகிரகத்தோடு இருக்க வேண்டும். திருக்கடாக்ஷம் அருள வேண்டும் என்று பிரார்த்தனை செய்து கொள்வதே சந்நிரோதனமாகும்.

5. ***அவகுண்டனம் :*** சிவலிங்கத்தின் முன் கவசமந்திரம் சொல்லும்போது இலிங்கத்தைச் சுற்றி மூன்றகழ் உண்டானதாகப் பாவனை செய்து கொள்ளல் அவகுண் டனமாகும்.

6. ***தேனு முத்திரை :*** சிவலிங்கத்தின் முன்னால் பசுவின் மடி போன்றதொரு முத்திரையைக் காட்டுவதே தேனு முத்திரையாகும்.

7. ***பாத்தியமாவது :*** இறைவனுக்கு முன்பாகச் சொல்லும் மூல மந்திரத்தில் ஒவ்வொன்றுக்கும் முடிவாக வரும் "நம" என்று இறுதியைச் சொல்லி தீர்த்த நீரை இறைவனின் திருப் பாதத்தில் சமர்ப்பிப்பதாகும்.

8. ***ஆசமநீயம் :*** மூலமந்திரத்தைச் சொல்லும்போது 'ஸ்வாக' என்று முடியும்படியாகச் சொல்லி இறைவனுக்கு முன்பாக மூன்று மூன்று தடவையாக ஐந்து முறை தீர்த்த நீரை ஊற்ற வேண்டும்

9. ***அர்க்கியம் :*** தீர்த்த நீரை இறைவன் சிரசின்மேல் முழுவதும் ஊற்றி "அர்க்கியம் சமர்ப்பயாமி" என்று சொல்லி சமர்ப்பித்தலாகும்.

10. ***புஷ்பதானம் :*** பூஜைக்கு வைக்கப்பட்டிருக்கின்ற இறைவனுக்கு உரிய மலர்களை மூலமந்திரங்களைச் சொல்லி சாற்றுவித்தலாகும். இதில் சில சமயங்களில் எட்டுவகையான மலர்களைக் கொண்டு சமர்ப்பித்தல் அஷ்டபுஷ்பதானம் என்றும் சொல்லலாம்.

11. ***தூபம் :*** இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி, என விளங்கும் செயல்களில் கிரியசக்தி ரூபமாகிய தூபத்தைக் கொண்டு சிவசக்தி தானத்தில் விடுவது. ஆணவமலமாகிய அறியாமையைக் கிரியசக்தி கொண்டு நீக்குதல் என்னும் குறிப்பினை உணர்த்துவதற்கு தூபம் என போடப்படுவதாகும்.

12. ***தீபம் :*** இருளை நீக்கி ஒளிபெறச் செய்யும் சித் சக்தியாகிய தீபம். ஆன்மாவை ஆட்டிப்படைக்கும் மலங்களைப் போக்கி ஞான ஒளியைத் தர விளங்குதலே தீபமாகும்.

13. ***நைவேத்தியம் :*** ஆன்ம குணமாகிய அகங்காரம், சங்கற்பம், குரோதம், மோகம், என்பனவற்றையே அமுதாகச் சமர்ப்பித்தல் என்னும் விதமாகப் பாவனை செய்து, அமுது படைத்தலாகும்.

14 ***பாநீயம் :*** இலிங்க சுத்தியில் சாதாரண தீர்த்தங்களைச் சமர்ப்பித்தோம். இதில் - தீர்த்தத்தில் வாசனை பொருந்திய பொருட்களைக் கரைத்து இறைவன் பொருந்திய பொருட்களைக் கரைத்து இறைவன் நிறைவுக்காக சமர்ப்பித்தல் பாநீயமாகும்.

15. ***ஜெப சமர்ப்பணம் :*** இறைவனுக்குரிய மூலமந்திரத்தை அஷ்டோத்ரமாக நூற்றியெட்டு முறை மௌன

மான முறையில் ஜபித்து அதை இறைவனிடத்திலேயே ஒப்படைத்தல் ஜெப சமர்ப்பணமாகும்.

*16. தீப ஆராத்திகம் :* தீப ஆராதனையே ஆராதிக்கம் எனப்படும். அதாவது இறைவன் திருமுன் பலவகை அமைப்புக்களான (பதினாறு வகை) தீபங்களைக் காட்டு வதாகும். ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு கருத்து விளங்கும் படியாக உண்டு.

1. மூன்றடுக்குத தீபம், 2 ஐந்தடுக்குத் தீபம் 3. நாக தீபம் 4. ரிஷப தீபம், 5. புருஷ தீபம், 6 நக்ஷத்திர தீபம் 7. யானை தீபம், 8. அன்ன தீபம், 9 குதிரை தீபம், 10, மயில் தீபம் 11, பூர்ண கும்ப தீபம், 12. கோழி தீபம் 13. சிங்க தீபம், 14. மேரு தீபம் 15. கற்பூர தீபம் 16. ஏழு கிளை கற்பூர ஆராத்தி என அத்தனையும் சேர்த்து ஷோடஸ தீபாலங்காரம் எனச் சொல்லப் படுகிறது.

கற்பூர ஆராதனையைப் பற்றி முதற் பகுதியில் ஒன்றில் சொல்லப்பட்டுள்ளது. எனினும் முடிவாக சிறப்பிற்கு மீண்டும் சில கருத்துக்கள்—

கற்பூரம் ஒரு வெண்மை நிறத்தையுடையது. அது தீயுடன் பற்றிய போது அதன் தன்மையான வடிவமாக விளங்கி ஒரு விதப் பற்று மில்லாமல், பற்றியதிலிருந்து முற்றும் கரையப் பெற்று ஆகாயத்துடன் கலந்து விடுவது போல நம் ஆன்மாவானது முன்னிரு குணங்களையும் எறியச் செய்து சத்துவ குணத்தை அடைந்து முடிவில் ஞானமாகிய அக்னியுடன் தொடர்பு பெற்று நமது உடல் எல்லாப் பற்றுக்களும் நீங்கப் பெற்று பரமுக்தியடைதல் என்னும் தத்துவக் கருத்தில் கற்பூர ஆராதனை முக்கியம் பெறுகிறது. அடுத்து உபசாரங்களில் முடிவாக சில உண்டு—குடை, கொடி, விசிறி, கண்ணாடி, சுருட்டி, அப்தாகிரி, சாமரம், அர்க்கியப் பாத்ரம், என்பனவற்றை

இறைவன் திருமுன் காண்பித்தலே முடிவான உபசாரங்களாகும்.

மேற்கண்ட வழிபாட்டு முறைகளைப் படிப் படியாகத் தெரிந்து கொண்டால் ஆலயங்களில் நடை பெறும் விசேஷகாலங்களில் செய்யப்படும் ஆராதனைகள் உபசாரங்கள் இவற்றின் பொருள் புரிந்து கண்டுகளிக்க ஏதுவாக இருக்கும். தெரிந்து கொள்ளாத நேரத்தில் அவை ஏன் நடைபெற்றன? அப்படி ஏன் செய்தார்கள்? என்ற கேள்விக் குறி எழுந்து நம் மனத்தை வாட்டும். தெரிந்து இருந்தால் நாம் ஆலயம் சென்று கண்ட முழுமை யான பூஜாபலன்களையும், அருட் பிரவாகத்தையும் அடைவோம்.

பூஜைகள் செய்யப்படும் காலங்களும் வரையறுக்கப் பட்டுள்ளன. அவை ஒரு நாளில் ஆறு காலங்களைப் பின் பற்றி செய்யப்படுகின்றன.

1. உஷத் காலம், 2. கால சந்தி, 3. உச்சிக் காலம், 4 சாயரட்சை, 5 பிரதோஷம், 6. அர்த்த சாமம் என்பனவாகும். இவற்றில் பகல் பொழுதைவிட இரவுக் காலத்தில் செய்யும் பூஜைகள் விசேஷமாகக் கருதப்படு கிறது. அமைதியான சூழ்நிலையில் இறைவனை பூஜிப்பது பேரின்ப நிலைக்கு மிகவும் ஏற்றதாகும்.

# 5. கடவுள்

ஆன்மீகம் வெற்றி பெற ஒரு மூலக்கருத்து நமக்குத் துணை செய்கின்றது. அந்தக் கருத்தை நாம் பின்பற்றித் தான் உண்மைப் பொருளை உணர முடியும். அப்படி நாம் உணர்ந்து உணர்ந்து செய்வதற்கு உலகில் வேறு எதுவுமில்லை, கடவுளைத் தவிர. கடவுள்தான் யாவற்றையும் விளங்க வைக்கும் மூலப்பொருள். கடவுளே ஆன்மீக அடிச்சுவடு. கடவுளின் உட்பொருள், அவரது தன்மைகள் ஆகியவற்றைத் தெறிதல் வேண்டும்.

கடவுள் என்ற சொல்லின் உட்பொருள் யாதெனில் கட+வுள் என்று பகுதி விகுதியாகப் பிரித்துப் பார்த்தால் முற்பகுதி—கடத்தல். அல்லது கடந்தவர் என்று பொருளாகும். எல்லாம் கடந்தவர் என்றும், வுள் பிற்பகுதி எல்லாம் தன்னகத்தே கொண்டு நிற்பவர், எல்லாவற்றிற்கும் தானாக நிற்பவர் என்று பொருளாகும். எந்நிலைக்கும் எச்செயலுக்கும் அவரே காரணமாக நிற்பவர் என்றே சொல்ல வேண்டும். இதனை தன்குணர்த்த திருமூலர்—

ஒருவனுமே உலகேழும் படைத்தான்
ஒருவனுமே உலகேழும் அளித்தான்
ஒருவனுமே உலகேழும் துடைத்தான்
ஒருவனுமே உலகோடு உயிர்தானே.

என எடுத்துச் சொல்கிறார். அப்படி யாவற்றிலும் நின்றியங்கும் கடவுள் தன்மைதான் என்ன என்றால், அவன்

எண் குணத்தானாகி விளங்குகின்றான். அந்த எண் குணங்களை வள்ளுவனார் காட்டுகின்றார்.

கோளில் பொறியிற்குணம் இலவேஎண்
குணத்தான்
தாளை வணங்காத் தலை—என்று

1. தன்வயத்தனாதல், 2. தூய உடம்பினனாதல், 3. இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய தன்மையன், 4. இயற்கை உணர்வினன், 5 முற்றும் உணர்ந்த தன்மையன், 6. பேரருள் உடையவன், 7. முடிவிலா ஆற்றல் உடையவன், 8. வரம்பு இல்லாத இன்பமுடையவன். இப்படிப்பட்ட எட்டுவகை இயல்புகளைக் கொண்டுள்ளவர், கடவுள். இந்தப் பரம் பொருளை, மூலத் தலைவனை அறிவதற்கு நாம் கொண்டுள்ள அறிவாற்றலைப் பயன்படுத்தி மூன்று நிலைகளில் அறியலாம். ஒன்று பிரத்தியட்சப் பிரமாணமாக அறிதல். இரண்டு, அனுமானப் பிரமாணமாக அறிதல் மூன்று, வேத, ஆகமப் பிரமாணமாக அறிதல், என மூன்று அளவைகள் உள்ளன. ஒவ்வொன்றும், கடினத் தன்மையும், எளிமையும், கொண்டவை.

நினைத்த பொழுதில் நேருக்கு நேரில் கடவுளைக் கண்டு கொள்வதுதான் பிரத்தியம்சமாகும். இக்காட்சி கிடைக்க மானிடர்கள் மிகுந்த முயற்சி செய்தல் வேண்டும் பல சோதனைகளுக்கு உட்படவும் வேண்டும். ஆனாலும் எளியவர்களுக்கு இறங்கி அவராக வரவேண்டும். அதற்கு தம் மனத்தில் ஆழ்ந்த பக்தி நிலவ வேண்டும். மூர்த்திகளுக்கும், தேவர்களுக்குமே இவை சாத்தியம்.

தெரியாத ஒன்றை வேறொன்றின் மூலமாகத் தெரிந்து அறிதல் அனுமானமாகும். யூகித்து திட்டப்படுத்தல், இயற்கையின் மூலமான ஐம்பூதங்களின் செயல்பாடுகளிலிருந்து கடவுள் தன்மையையும், சக்தியையும் அறிந்து

கொள்ளல். அவற்றில் மறைந்து காட்டும் உட்பொருளைக் கடவுள் எனத் தெளிவு கொள்ளலாம். முதல் நிலையான நேரில் காணும் வாய்ப்பு நமக்குக் கிட்டாது போனாலும், அனுமானத்தால் அறிதலே நமக்குத் தோன்றும் ஐயத்தை நீக்க வல்லது.

ஒரு மலையின் மீது தீ எரிந்து கொண்டிருக்கிறது என்றால் அதனைக் காண மிக வருந்தி அங்கு சென்று முயற்சி செய்து அதனைக் காணலாம். அம் முயற்சி உடனுக்குடன் நடை பெறாது. ஆனால் தீயினின்று கிளம்பும் புகை என அனுமானத்தால் உறுதி செய்து நம்புவது முடிவு. எந்த ஒன்றையும் நேரில் காண இயலாத போது கடவுளின் படைப்புப் பொருளாக இருக்கும் அனைத்திலும் அவர் தன்மை உண்டென்று கொள்ளல் சிறந்தது

இறைவனை நேரில் காண ஆணவ மிகுதியால் இருவர் புறப்பட்டனர். ஒருவர் ஆகாயம் மேல்நோக்கியும், ஒருவர் பூமியின் கீழ்நோக்கியும் சென்று முயற்சித்தனர். முடியாமல் மீண்டனர். ஆணவம் குறைந்த போது எளிதாக மறைந்து நின்ற தீப் பிழம்பாக, ஜோதி வடிவமாக, மலை மீது காட்சி கண்டனர் என்று ஒரு காரணக் கதை உண்டு. அவர் படைத்த எல்லாப் பொருளிலும் உள் நிற்பதைக் காண்கின்றோம். பூவின் நிறங்களாக, உண்டாகும் தேனாக, பழத்தின் சுவையாக, காற்றின் உணர்வாக, ஒளியின் கதிர்களாக, நீரின் தன்மையாக, நெருப்பின் சூடாக, பாலில், தயிர், வெண்ணெய், நெய் எனப் பிரதிப் பொருளாகத் தோன்றும் அற்புதங்களின் அழகாக, சிற்பங்களின் வடிவமாக, கடவுளின் ஆற்றல் வெளிப்பட்டு, அவர் உண்டென்று உணர்த்துகிறார். அவற்றையெல்லாம் ஆய்ந்து, ஆழ்ந்து அறிதலே அனுமானப் பிரமாணமாகும். அவற்றை நாம் அறிந்து

கொள்ளவே திருநாவுக்கரசுப் பெருமான், தேவாரப் பாடலில் விளக்குகின்றார்.

> விறகில் தீயினன் பாலிற் படுநெய் போல்,
> மறைய நின்றுளான், மாமணிச் சோதியன்,
> உறவுகோல் நட்(டு) உணர்வு கயிற்றினால்
> முருக வாங்கிக் கடையமுன் னிற்குமே.

மூன்றாவதாக- வேத ஆகமங்களைக் கற்றுணர்ந்து உட்பொருளை ஆங்காங்கே அவ்வப்போதே உணர்ந்து அறிந்து கொள்ளுதல், முனிவர்களுக்கும், ஞானிகளுக்கும், இயலும் என்றாலும், நாம் கடவுளை அடைதலையே ஓர் குறிக்கோளாகக் கொண்டால், எளிமையாக வெற்றி கொள்ளலாம். நீங்காத அன்பு அவர் மீது வைத்து தெளிந்த அறிவு கொண்டு ஞான மனத்தால் உண்மைப் பொருளைக் கண்டு கொள்ளலாம்.

கடவுள் தன்மையினால், முற்றுமுணர்ந்தவராக இருந்து இயற்கை நிலைகளிலெல்லாம் அவராக மாறி பேரருள் கொண்டு, முடிவில்லாத ஆற்றலையும் காட்டி, ஒரு வரம்பிலாத இன்பமுடைய நிலையாக பூவுலகில் திருவிளையாடல்களைச் செய்து அவரை விரும்புவோர்க் கெல்லாம், அருள்செய்து ஆட்கொள்ளும் சக்தியை எங்கும், எதிலும், எப்போதும் காணலாம்.

இயற்கை ஒரு காரண காரியங்களோடு தோன்றி மக்களோடு இணைந்தது. கடவுள் அவற்றிற்கும் மூலகாரணனாக நின்று நிலவுகிறார் என்பது உண்மை. விதை முதலில் வந்ததா, செடி முதலில் வந்ததா, முட்டை முதலில் தோன்றியதா, கோழி முதலில் தோறியதா இருள் உண்டானதா, ஒளி முதலில் உண்டானதா, என இதுபோன்ற பல கேள்விகளுக்கு விடை ஏதோ ஒரு திட்டமில்லாத வகையில் சொல்லலாம். ஆனால் விதைக்கும், செடிக்கும், முதலில் ஒருவர், முட்டைக்கும்

தோழிக்கும் முதலில் ஒருவர், இருளுக்கும் ஒளிக்கும் முதலில் ஒருவர், ஆதிமூலமாக இருந்துதானே ஆக வேண்டும். படைப்புப் பொருள்கள், ஜீவராசிகள் அனைத்தும் தோன்றுவதற்குக் காரணமாக நின்று இயற்கை நடப்பது போல மறைந்து நின்று காட்டுவதே கடவுள் செயலாகும்.

மேற்கண்டவாறு உள்ள கடவுளின் தனிப்பெருங் கருணையைப் பல நிகழ்ச்சிகளில் தெரிந்தும் கூட நமபிக்கையில்லா நிலையில் பலர் இருக்கலாம். நம்பிக்கை வருவதற்கு முக்கிய சம்பவம் ஒன்று நிகழவேண்டும். அதில் அவருக்கு பயம் என்ற உணர்வு தலைதூக்கி நிற்குமேயானால், அதைப் போக்கிக் கொள்ள வேறு யாராலும் முடியாத போது கடவுள் நம்பிக்கை தானாகத் தோன்றி நம்பவைக்கும்.

நாவுக்கரசு பெருமான் மருள் நீக்கியாராக சமண சமயத்தில் சேர்ந்தபோது ஒரு சூலை நோய் கண்டது- அது யாராலும் போக்க முடியாத துன்பம் கொடுத்தது. சைவத்தில் சேரும் வாய்ப்பிற்காக இறைவன் மீது பதிகம் பாடியபோது சூலை முற்றிலும் நீங்கி சைவ நம்பிக்கை பிடிபட்டது. தீராத் துன்பம் தோன்றும் போது நம்பிக்கை தோன்றும்.

மனித வாழ்வில் மட்டுமல்லாது பிற உயிர்களுக்கும் கூட பிறப்பிலிருந்து இறப்புவரை பல சந்தர்ப்பங்களில் இந்த பய உணர்வு தோன்றுகிறது. வாயால் எடுத்துச் சொல்ல முடியாதவை உள்ளூர அனுபவிக்கின்றன. சொல்லும் திறனுள்ள நாமெல்லாம் மாற்றுப் பரிகாரம் தேடிக் கொள்கிறோம். நமக்குத் தோன்றும் எல்லாவித உணர்வுகளுக்கும் அப்பாற்பட்டதாக மனத்தினுள்ளே தனித்து நின்று செயல்படும் ஒரு சோக உணர்வாகும்.

பய உணர்வுக்கு யாரும் துணை நின்று போக்க முடியாது. ஆண்டவரால்தான் முடியும். வெளிப்படை

யாக உடம்பிற்குத் தோன்றும் எதிர்ப்பு சக்திகளைப் போக்க தன் அறிவாற்றலால் செய்து கொள்ளலாம். குளிரால் நடுங்கும் ஒருவர் குளிரை மாற்றத் தீ மூட்டி எரிந்து கொண்டிருக்கும் தீச்சுடரில் காய்ந்து குளிரைப் போக்கிக் கொள்ளலாம். பசியால் வாடும் ஒருவருக்கு, தண்ணீர் அல்லது ஓரளவு உணவு கொண்டு போக்கலாம. தாங்க முடியாத வெய்யிலைத் தணித்துக் கொள்ள ஒரு மரத்து நிழல் உதவுகிறது. இப்படி தீச்சுடர் போலவும், தண்ணீர் போலவும், மரத்து நிழல் போலவும், கடவுளின் அருள் இருக்கின்றது. பிறவி நோய், தீவினை, இவற்றால் அல்லல்படும் உயிர்களின் துன்பத்தைப் போகக அவர் காத்து நிற்கின்றார்.

துன்பங்கள் நம்மைத் தொடரா வண்ணம் காத்துக் கொள்ள வேண்டுமாயின் அவனது உண்மைப் பொருளை ர்ந்தாலே பலவற்றினின்றும் விடுபட்டு விடுவோம்.

ஆண்டவனது சக்தியை உணர, ஜாதி, சமயங்கள், சம்பிரதாய நடைமுறைகள், இனங்கள், மதங்கள், அதில் பல்வேறுபட்ட பிரிவுகள், மொழி வேறுபாடுகள், கலாச் சாரப் பாரம்பரியங்கள் எதுவும் ஒரு தடையாக நிற்காது. எவ்வகையினராயினும் நம்பிக்கை முழுதும் மனதில் வைத்து தவறாத ஒழுக்க நெறி, அன்பு நெறி, அறிவு நெறி, பக்தி நெறி என்னும் பல நெறிகளை வாழ்க்கை நெறியில் கடைப் பிடித்தால் ஆன்மநெறி ஒளி பெற்று யாவற்றையும் கடந்து ஆண்டவரைக் காணலாம்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஆதிமனிதன், இயற்கையில் தோன்றும் மின்னல், இடி, மழை, காற்று, ஒளி, இருள் இவற்றால் ஏற்படும் இன்ப, துன்பங்களின் மாற்றங்களைக் கண்டு கண்டு, பயந்து அங்கும் இங்குமாக ஓடித் திரிந்து தன்னைக் காக்க முயற்சித்த போது தனக்குத் தெரியாத ஒரு சக்திதான்

இத்தனைக்கும் காரணம். அது நம்மைக் கடந்த சக்தி அதுவே கடவுள் சக்தி என்று நம்பி, அதன்பின் தனக்குத் தோன்றும் வழிகளில் எல்லாம், கடைப்பிடித்து மறைந்து நின்ற தெய்வ சக்தியையும், தெய்வத்தையும் காலப் போக்கில் கண்டறிந்து ஓர் உண்மைத் தீர்மானமாக கடவுள் அனுபவத்தில் பிரத்தியட்சப் பிரமாணமாகவும், அனுமானப் பிரமாணமாகவும், கண்டபின் தான் அவர்கள் பெற்ற கல்வியறிவால் வேதாகமங்களிலிருந்து உட்பொருள் கண்டு உணர்ந்த ஆகமப் பிரமாணமாகவும், அறிந்து எல்லாவற்றையும் கடந்தவர் கடவுள் என்று தெளிவுகொண்டனர்.

யுகாதி காலங்களிலும் கடவுள் நிலை எல்லா வற்றிற்கும் அப்பாற்பட்டது என்றுணராது தேவர் களாயினும், ரிஷிகளாயினும், தவறுகளைப் பெரிதாகவோ, சிறிதாகவோ செய்துவிட்டுத் தீராத் துன்பத்தில் சிக்குண்டு முடிவாகக் கடவுளை அடைந்து பரிகாரம் தேடினர் என்பது உண்மை.

திருப்பாற்கடலில் விஷம் தோன்றிய போது, தேவர் களும், அசுரர்களும், தாருகாவனத்தில் புத்தி தடுமாறிய ரிஷிகளும், திரிபுராந்தகத்தில் அசுரர்களும், தன்னிலைக்கு மேல் ஒரு சக்தி கடந்து நின்றதை பின் உணர்ந்தார்கள். கார்த்திகைப் பெண்கள் அட்டமாசித்திகளே போதும் என்று நின்ற போது அவற்றிற்கும் மேலான கடந்த சக்தி உண்டென்பதைப் பின் உணர்ந்தனர்

இராவணன் கைலாயத்தைப் பெயர்த்த போது அடைந்த துன்பத்தில் தனக்கும் மீறிய சக்தியை பின் உணர்ந்தான். ஆகவே அனைத்திற்கும் கடந்தவர் கடவுள் என்றுணர்தல் நன்று.

# 6. திருஉருவ அமைப்புகள்

ஆலயங்களை அமைத்து அதில் ஆண்டவரின் திருஉருவங்களைச் சிலைகளாக வடித்து ஆலயத்தில் பிரதிஷ்டை செய்து வழிபடும் வழக்கம் நீண்ட நாட்களாகவே நடைபெறுகிறது. நம் இந்து சமயத்தைப் பொறுத்த மட்டில் உருவ வழிபாடு இல்லையென்றால் ஆலயங்கள் இல்லை. ஆலயங்கள் இல்லையென்றால் இந்து மதமும் அதனைப் பின்பற்றும் மனித வாழ்க்கையின் முக்கியத் துவம் வாய்ந்த அன்பு, அறம், பக்தி, ஒழுக்கம், பண்பாடு, நன்னெறி வழிபாடு, இன்னும் பல சிறந்த செயல்கள் அனைத்தும் இல்லையென்றே சொல்லலாம்

இறைவன் பக்தியில் மிக்க ஆன்றோர்கள் அவரைத் தேடி அலையும் முயற்சியில், வெற்றி கண்டு, ஆண்டவரின் தோற்றத்தையும் நேரில் கண்டுள்ளனர். அவர்கள் கண்ட காட்சியைப் பாடல்களில் பாடியுள்ளனர். அந்தப் பாடல் களில் எப்படித் தோற்றங்கள் இருந்தனவோ அப்படியே சிற்பிகளிடம் எடுத்துச் சொல்லி உருவங்களை வடித் தெடுத்து மூலஸ்தானத்தில் வைத்துக் கும்பிடும் நியதியைப் பல காலம் கடைப்பிடித்து வருகிறார்கள்.

நமக்குத் தெரிந்தோ, தெரியாமலோ ஒருவரின் நற்பண்புகளையும், குணாதிசயங்களையும், கேள்விப் பட்டு அவரை இருக்கும் இடம் தேடி காணச் செல்கின் றோம் என்று வைத்துக் கொண்டால் நாம் சென்றபொது அவர் இல்லாமல் போனால், அதிக ஆவலோடு பார்க்கச் சென்ற நம் மனம் ஏங்குகிறது அவர் முகம், உருவம் இப்படி இருக்குமா, அப்படியிருக்குமா என்று சிந்தனை

செய்யத் தூண்டுகிறது. அந்த நேரத்தில் அவர் அரு உருவ மான நிலையில்-இப்படித்தான் என்ற திட்டமான நிலை யில்லாமல் - ஏதோ ஒரு உருவத் தோற்றத்தோடு இருப்பார் என்று மொத்தத்தில் எண்ணுகின்றோம்.

அடுத்து அவரின் உருவப்படம் இருந்தால் அதைப் பார்த்த பிறகு, இவர்தானா என்று எண்ணித் தீர்மா னித்து ருபாருபமாக நினைக்கின்றோம். அதன்பின் நீண்ட நேரம் காத்திருந்து அவர் வருகையில் ஏங்கிப் பின், திடீரென்று அவர் இல்லம் வந்து சேர்ந்த போது, நேரில் காணும் வாய்ப்புக் கிடைக்க நம் மனம் மிகுந்த உவகை யால் உண்மை ருபமான முகத்தைப் பார்க்கப் பரவச மடைகிறது.

இந்த மூன்றாவது நிலையில் நாம் மிகவும் கஷ்டப் பட்டு விடா முயற்சியாக இருந்து பார்க்க எண்ணு கின்றோம். அதுபோல ஆலயங்களில் ஆண்டவன் மூன்று நிலைகளிலும் இருக்கின்றார். அருஉருவமாயிருக்கும் போது அவன் சிவன், சக்தி, நாதம், விந்து என நான்கு விதங்களில் பெயர் பெற்று விளங்குகின்றார். ருபாருப மாயிருக்கும்போது அவன், சதாசிவன் எனப் பெயர் பெற்று விளங்குகின்றார். ருபமாயிருக்கும் போது அவன் மகேசன், ருத்திரன், மால், அயன் என்ற விதங்களில் நான்கு பெயர் பெற்று விளங்குகின்றான். இவற்றிற்கு ஏற்றாற்போல உருவங்கள் வடித்து எடுக்கப்படுகின்றன. இவற்றை விளக்க சிவஞான சித்தியார்,

> சிவன்; சக்தி; நாதம்; விந்து; சதாசிவன்; திகழுமீசன்
> உவந்தருள் உருத்திரன்தான், மால்; அயன்; ஒன்றின் ஒன்றாய்
> பவந்தரும் அருவம் நாலிங்கு, உருவம் நாலு பயம் ஒன்றாய்
> நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்''

என ஆங்கே மொழிந்துள்ளார்.

நாம் என்றுமே ஒரு ரூபமானவற்றைக் கண்டு தான் நம்பிக்கை வைத்துப் பழக்கம் ரூபமானவற்றை உண்மை யென நம்புகின்றோம். அப்படியிருக்க இறைவனும் மன மிரங்கி திருஉருவம் கொண்டு காட்டுகின்றான். அடியார் களுக்கு தன் உருவ வடிவைக் காட்ட அதை விகரகமாக ஏற்று வழிபட ஆரம்பித்தாம்.

ஆண்டவன் அருபியாயிருக்கும்போது அவனை வணங்க நம்மால் இயலாது. ஏதேனும் கண்ணுக்குத் தெரிகின்ற நிலை நமக்குத் தோன்றினால்தான் வணங்குகின்றோம். பனிக்கட்டியையும், தண்ணீரையும் ஒன்று சேர்க்க வேண்டுமானால் ஒன்று பனிக்கட்டி தண்ணீராக மாற வேண்டும் அல்லது தண்ணீர் பனிககட்டியாக வேண்டும். அது போன்றே அருபியாயிருக்க தெய்வம் ரூபியாக மாற வேண்டும். அப்போது தான் நாம் அவரை அடைய முடியும். அருபியாகமாற நம்மால் முடியுமா? முடியாது. இதையும் சிவஞான போதம் விளக்குகிறது.

> அருவனாய் நின்றானை ஆரறிவார் தானே
> உருவனாய் தோன்றிலனேல் உற்று—என்று.

இறைவன் உண்டென்று நம்பி வணங்குவதற்குத் திருஉருவங்கள் சாட்சியாக நம்பிக்கையூட்டுகின்றன. உருவத் திருமேனியை அவ்வவ்வுருவங்களாகவும், அரு உருவச் சதாசிவத்தை நாம் சிவலிங்கமாகவும், அருவத் திருமேனியை சிதம்பர ரகசியமாகவும், சிற்சபை வெளி முதலியனவாகவும், வைத்து வழிபடுகின்றோம். இப்படி அமைப்புகள் இருப்பதால்தான் வழிபடும் உள்ளங்களை இந்துமதம் கட்டுப்படுத்தாது என்பதும், அவரவர் மனத்தில் விருமபிய தகுதிக் கேற்றபடிச் சுதந்திரத்துடன் வழிபட்டு உய்யும் வழிகளை உடையது என்பது விளங்கு கிறது.

இந்து மதத்தின் தத்துவத்திற்கே விளக்கம் என்ன வென்றால், ஆண்டவனை அடைய விரும்பும் அடியார் களின் மனம் போல, வேண்டுவன வேண்டியபடியே அருள் செய்யும் சக்தி ஆண்டவன் கொண்டிருக்கின்றார். அப்படிப்பட்ட சக்தி இல்லையானால் அடியார்கள் விரும்பி ஏற்று வழிபாட்டு முறைகளை மனம் நிறைந்த அளவு செய்ய இயலாமல் போகும். உயிர்கள் கொண்டிருக கின்ற மயக்கத்தை தன் சக்தியைக் கொண்டு நீக்கி மெய் யறிவினையும், "ஆண்டவன் துணை" என்கிற ஆறுதலை யும் அளிக்கின்றான்.

அப்படிப்பட்ட அருட்சக்தி உலக இயல்புகளுககு ஏற்றபடி "சக்தியில்லையேல் சிவம் இல்லை, சிவம் இல்லை யேல் சக்தி இல்லை." என்பதற்கேற்ப, ஆண் பெண் தன்மையில் இருந்தே உலக போகம் நுகர்ந்து உலக வளர்ச்சி செய்கின்றான். ஆகவேதான் தோற்றுவித்த (படைப்புத் தொழிலில்) எல்லா உயிர்களுக்கும், ஆண் பெண் தன்மையை நிலை நிறுத்தி இருப்பதைப் பார்க்கின் றோம். ஓரறிவுயிர் முதல் ஆறறிவு வரை இத்தன்மையை அறிகின்றோம். இதனை உணர்த்தவே ஆண்டவனும் தன் அருட் சக்தியை ஒரு பெண் வடிவமாகக் கொண்டு போகி யாய்த் தோன்றி உயிர்கள் அனைத்தையும் போகத்தில் ஆழ்த்தி அனுபவிக்கச் செய்கின்றார். இந்தச் செயல் இல்லையென்றால் அவரது திருவிளையாடல் எங்கே? திருவிளையாடலில்தான் அவரது ஐந்தொழில் நடக் கின்றது.

ஆண்டவன் அம்மை அப்பனாக இருந்து உலக சிருஷ்டி செய்ததனாலேயே உலக உயிர்களனைத்தும் அம்மை அப்பனாக இருந்து மக்கட்பேறடைந்து வாழ் கின்றன. அப்படி மேற்கொண்ட வாழ்க்கையில், முரண் பாடுகளும் பேதங்களும் நியதிகளை மேற்கொள்ளாத மனமாற்றங்களும், தோன்றும் நேரத்தில், போக, யோக,

மூர்த்தியாய் இருப்பவர், யோக ரூபமும், கோர ரூபமும் உடையவராகத் தோன்றுகின்றார். அப்பொழுதும் தனித்து நின்று செயல்படாது, பெண் சக்தியோடு இணைந்து அருளாற்றல் செய்கின்றார்.

ஒரு புகைப்படம் எடுப்பதை வைத்துக் கொண்டால் அதில் இரண்டு வித உருவ அமைப்புகள் உண்டு. ஒன்று நெகடிவ், மற்றொன்று பாஸிடிவ். இவை ஒவ்வொன்றும் அவசியமானது. தனித்தனி நின்றால் படம் காண முடியாது. ஒரு மின்சார விளக்கு எரிவதை எடுத்துக் கொண்டால் இரண்டு சக்திகள் தனித்தனியாக, பாஸிடிவ், நெகடிவ், இரண்டு கம்பிகளில் வந்து சேரும் இடத்தில் ஒளி உண்டாகிறது என விஞ்ஞானிகள் சொல்லும் கூற்றுக்கு ஏற்பத்தான் உலக இயக்கங்களை காண்பிக்கின்றார் கடவுள்.

அருபத்தில் சிவனுக்குச் சொல்லியது போல சக்திக்கும் இங்கு சொல்ல வேண்டும்.

அருபத்தில் சிவனுக்கு—சக்தியும், நாதத்திற்கு—விந்துவும், ரூபாரூபத்தில் சதாசிவனுக்கு — மனோன்மணியும், ரூபத்தில் மகேசனுக்கு — மகேசையும, ருத்திரனுக்கு உமையும், மாலுக்கு—திருவாகவும் (லட்சுமியாக) அயனுக்கு—வாணியாகவும் எவ்வாறு ஏக நாயகனாகிய இறைவன் தோன்றுகின்றானோ அவ்வாறே அவனது சக்தியும் தோன்றுகின்றாள். நவரசங்கள் என்னும் ஒன்பது விதமாகத் தோன்றுகின்ற இறைவன் எப்படி ஒருவனோ, அதுபோல ஏழுவிதமாகத் தோன்றுகின்ற பெண் தெய்வங்களும், ஏகசகதி தெய்வத்தில் உருவமெடுத்து அந்தந்த காரண காரியங்களுக்காக இறைவனோடு துணை நின்று மேற்கூறியவாறு நடிக்கின்றனர். நடிப்பென்பது உருவத் தோற்றங்களை ஏற்படுத்தி அந்த அந்தச் சமயங்களில் நிறைவு செய்தலேயாகும்.

பல உருவத் தோற்றத்தில் காணும் விக்ரக வழிபாடு எல்லோருக்கும் ஏற்றதே. பாமரர் முதல் ஞானிகள் வரை ஏன் மூர்த்திகளும், விக்ரக வழிபாடு செய்துள்ளனர். ஸ்ரீராமபிரான் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழி பட்டார். பராசக்தியும் மண்ணால் சிவலிங்கம் செய்து வழிபாடு செய்தாள். விநாயகரும் சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து வழிபட்டார். சைவ சமய ஞானவான்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர், மற்றும் சங்கரர், நம்மாழ்வார், இராமகிருஷ்ண பரமஹம்சர், தியாகப் பிரம்மம் ஆகியோரும் விக்ரக வழிபாடு செய்தனர். பரமஞானிகள் முதல் பாமரர் வரை விக்ரக வழிபாடு தவிர வேறு உருவமற்ற நிலையில் யாரும் வணங்கும் செயல் செய்வதில்லை.

விக்ரக வழிபாடு செய்யும்போது அதிலுள்ள அழகு, அமைப்பு, அலங்காரத்திற்குப் பின்வரும் தோற்றம் இவை அனைத்தும் லயிக்கின்ற தன்மையில் அமைந்துள்ளதே ஒரு தெய்வீக அம்ஸமாகும். அவை நம் மனக் கண்முன்னால் நீங்காமல் நிற்கும். விக்ரக தெரிசனத்தால் பல தோஷங்கள் பீடைகள் அகலும். விக்ரகத்தை ஆவாஹனம் செய்யும்போது ஆண்டவன் அருள் அபிமுகமாக நமக்கு கிடைக்கிறது அதனால் உண்மையான சொருபத்தைக் கண்ட மனநிறைவு ஏற்படுகிறது.

விக்ரகங்களைச் செய்வதிலும், வடித்தெடுப்பதிலும் மிகக் கவனம் செலுத்தப்பட வேண்டும். விக்ரகத் திருஉருவங்களைக் கல்லாலும், ஐந்து உலோகங்களின் சேர்க்கையால் வரும் பஞ்சலோகத்தாலும், தனித்தனியே, செம்பாலும், பித்தளையாலும், வெள்ளியாலும், மரத் தாலும் கூட அழகான முறையில் வடித்தெடுத்து நீண்ட நாள் பாதுகாத்து வழிபடச் செய்யலாம். அவசரத் தேவைக்கெனவும், அவ்வப்போது நடைபெறும் விழாக் காலத் தேவைக்கெனவும் மண்ணாலும் உருவங்களைச்

செய்து வழிபடலாம். அப்படிப்பட்ட திருவுருவங்களை வழிபாடுகள் முடிந்தபின் கங்கையில், அதாவது கிணற்றில் விட்டுவிட வேண்டும்.

திருவுருவங்களை வடித்தெடுக்கின்ற நேரத்திலோ, வழிபாடு செய்கின்ற நேரங்களில் கையாளுகின்ற விதங்களிலோ அதிகக் கவனமான பாதுகாப்புடன் இருக்க வேண்டும். சிற்ப சாஸ்திர விதிப்படி விக்ரகங்கள் பழுதடையக் கூடாது. அப்படியும் ஒரு சிறு பின்னம் ஏற்பட்டாலும் விக்ரகங்களைப் பூஜை செய்பவர்களுக்கும் பூஜை செய்து கொள்பவர்களுக்கும் தீங்கு நேரிடலாம். ஆகவே அந்த விக்ரகத்தை நீக்கிவிட்டு வேறு விக்ரகத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட வேண்டும். இது சிற்ப சாஸ்திர விதிகளில் மிக முக்கியமான ஒன்றாகும்.

இனித் தெய்வங்களின் அவதார மகிமைகளைப் பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

# 7. விநாயகர்

விநாயகப் பெருமானே ஈரேழு பதினான்கு லோகங்களிலும் தொழும் பெருமை பெற்றவர், ஒப்புயர்வற்றவர், தனக்கு மேல் நாயகரற்றவர் என்ற சிறப்பு கொண்டவர். அவதாரத் திருஉருவங்களிலே மிக விசித்திரமானவர் விநாயகர். வி—என்ற ஓரெழுத்துச் சொல்லுக்கு இல்லை என்றும், நாயகர்—என்ற சொல்லுக்கு தலைவன் என்றும் வருவதைச் சேர்த்து-விநாயகன்-என்றால் தனக்கு மேல் தலைவன் இல்லை என்று உறுதிப் பொருள் கொள்ளலாம். அத்தகைய சிறப்பிற்கு அவரது உருவ அமைப்பைக் காணலாம்.

யானை முகம், ஒடிந்த கொம்பு, பருத்த வயிறு, விலாச நெற்றி, இடது கையில் மோதகம், அளவான உருவம், வாகனமோ மூஷிகம், தனக்கென்றே அமைந்த ஒருவித செந்நிறம். இத்தனையும் அமைந்த திருஉருவம். இவரது தோற்றத்தைப் பதினாறு அம்ஸங்களில் விவரிக்கலாம்.

1. ஸுமுகன்—அழகிய முகமுடையவன் 2 ஏகதந்தன்-ஒடிந்த தந்தம் போக ஒரு தந்தத்தையுடையவன் 3. கபிலன்-கபில நிறமுடையவன் (ஒருவகைச் சிவப்பு) 4. கஜகர்ணக-யானைக் காதுகளையுடையவன் 5. லம்போதரன்-நீண்டு சரிந்ததுமான யானை போன்ற வயிறுடையவன் 6. விகடன்-பெருமையுடையவன் 7. விக்னராஜன்-இடையூறுகளை அடக்கி ஆள்பவன் 8. விநாயகன்-இடையூறுகளைப் போக்குபவன் 9. கணாத்யக்ஷன்-பூத கணங்களுக்குத் தலைவன் 10. தூம கேது-அக்னி போன்ற

பிரகாசம் உடையவன் 11. பால சந்திரன்-நெற்றியில் சந்திரனைத் தரித்தவன் 12 கஜானன்-யானை முகத்தை உடையவன் 13 வக்ர துண்டன்-வளைந்த துதிக்கையை உடையவன் 14 சூர்பகர்ணன்-முறம் போன்ற காது களை உடையவன் 15. ஹேரம்பன்-பக்தர்களுக்கு அருள் புரிபவன் 16 ஸ்கந்த பூர்வஜன்-முருகனுக்கு முன்வந்தவன் (அண்ணன்)

இப்படிப் பெருமை கொண்ட பதினாறு திருப்பெயர் களையும், முக்கியமான விஷேசங்களில், கல்வி கற்கப் போகும் ஆரம்பத்தில், கல்யாண முகூர்த்த நேரத்தில், புது வீடு கிரஹப்பிரவேசத்தில், அல்லது ஒருவர் நல்ல காரியங்களுக்காக வெளியில் புறப்படும் போது, அல்லது துன்பம் வந்த காலத்திலும், எவரொருவர் படிப்பரோ அன்றியும் படித்ததைக கேட்பரோ, அவர்களுக்கு இடையூறு என்பதே ஏற்படாது இதைப் பிரமாணமாகக் கொண்டே நாம் செய்யும் விவாகம், பூஜை முதலிய எல்லாச் செயல்களிலும், மஞ்சள் பொடியில் பிள்ளையார் பிடித்து இந்தப் பதினாறு நாமங்களையும் முதலில் சொல்லிய பிறகே மற்ற எல்லாவற்றையும் செய்ய வேண்டும் எனச் செய்கிறார்கள்.

முழுமுதற் தெய்வமான சிவபெருமானே- விநாயக ருக்கு இத்தகைய முதற்பூஜை சிறப்பை அளித்துள்ளார் என்று கந்தபுராணம் கூறுகிறது. இத்தகைய சிறப்புக் கொண்ட இவரது வரலாறு காண்போம்—

வசிட்ட முனிவரது மரபில் தோன்றியவர் மரகதர் என்ற முனிவர் இவர் சிவபெருமானை நோக்கித் தவம் செய்யும் காலத்தில் விபுதை என்ற அசுரப் பெண் குறுக் கிட்டு அவளிடம் மயங்கினார் அவ்விருவரும், ஆண் யானையும் பெண் யானையுமாக மாறிவிட்டனர். அவ்விருவரும் நேசத்தால் கூடியபோது யானை முகத் துடன் அசுரன் பிறந்தான். அவன் கயமுகாசுரன்

என்னும் பெயர் பெற்று, அவனும் சிவபெருமானை நோக்கித் தவம் பலகாலம் செய்தான். தவமுடிவில், பெருமானிடமிருந்து 1 தான் யாதொரு ஆயுதத்தாலும் அழியாத வரமும், 2. பிரம்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் எவரிடமும் தோல்வியடையாது வெற்றியே பெறும வரமும, 3 தேவர்கள, மனிதர்கள, விலங்குகள் முதலிய எவராலும் மரணம் அடையாத வரமும், 4. தனக்கு நிகரான ஒருவன் வந்து போரிடினும், அவனது படையாலும் அழியாத வரமும், 5. இவைகளுக்குட் படாத வேறு ஒன்றின் மூலமாக மரணம் ஏற்பட்டால் மீண்டும் பிறவா வரமும், வேண்டிப் பெற்றான்.

தான் பெற்ற வரத்தின் பலத்தால் கயமுகாசுரன், இந்திரன், உள்ளிட்ட எல்லாத் தேவர்களையும் வெற்றி கொண்டான். அதன்பின் தென் திசையில் மதங்காபுரி என்றொரு பட்டணத்தை நிர்மாணித்துக் கொண்டு ஆட்சி புரிந்த போது விசித்திர காந்தி என்ற அசுரப் பெண்ணையும் திருமணம் செய்தான்.

இப்படி வாழ்ந்து வரும் நேரத்தில் ஆணவம் மிகுதி யால் தன்னிடம் தோல்வியுற்ற தேவர்களை எல்லாம் தனக்கு வந்து குறறேவல் செய்யச் சொல்லிக் கட்டளை யிட்டான்.

"தேவர்களே இனி நீவிர் அனைவரும் நாள்தோறும் இங்கு வந்து முதலில் என் முன் உங்களது தலையில் மூன்று முறை குட்டிக் கொண்டு, கால்களைத் தாழ்த்தி எழுந்து வணககம் செய்து பின் உங்களுககு இட்ட பணிகளைச் செய்வீர்களாக" என்றான. அமரர்களோ வேறு மார்க்க மில்லாமல் அவ்வாறே செய்து வந்தார்கள். அப்படிச் செய்வது மிகுநத துன்பத்தைக் கொடுத்தது. பொருககு முடியாத காய கட்டத்தில் இந்திரன் முதலான தேவர்கள், பிரம்மாவிடமும், விஷ்ணுவிடமும் சென்று முறையிட் டார்கள்—கயமுகாசுரன் எங்களை —

வைகலும் இவன்வந் துழிறுங்கள் நம்
மொய்கொள் சென்னியின் மும்முறை தாக்கியே
கைகள் காதுறக் கால்கொடு தாழ்ந் தெழீஇச்
செய்க நம் பணி தேவர்கள் நீரென்றான்.

தேவர்களோடு, பிரம்மா, விஷ்ணுவும், திருக் கைலாயம் சென்று சிவபெருமானிடம் முறையிட அதனைக் கேட்டு இரங்கி, இறைவன் "அந்த யானை முகத்து அவுணனை மாய்த்து, நலம் பெற ஒரு புதல்வனைத் தருவோம்" என்று அருள் செய்ய தேவர்கள் மகிழ்ந்தார்கள்.

பின்னர் ஓர் நாள் இறைவன் பார்வதி தேவியுடன், கைலயில் உள்ள ஒரு பூஞ்சோலையில் சென்று அதன் இயல்பினைக் கண்டு களித்து, அங்கே உள்ள ஒரு சித்திர மண்டபத்தினுள் சென்றனர். இருவரும் அங்குள்ள சித்திரங்களைப் பார்த்துக் கொண்டே வரும்போது, சித்திர வரிசையில் இருந்த ஒரு பிரணவத்தைப் பார்த்தனர். (பிரணவம் ஓம் என்ற ஒற்றை எழுத்து). உடனே அப் பிரணவத்திலிருந்து இரண்டு யானைகள் ஆணும் பெண்ணுமாய் தோன்றி அவை நேசத்தால் ஒன்று பட்டபோது யானை முகமும், துதிக்கை வளைந்தும், ஐந்து கரங்களுடனும், நெற்றிக் கண்ணுடனும் (சிவபெருமான் போல) பிறை சூடிய செஞ்சடையும் கொண்டு மூத்த பிள்ளையார் எனப்படும் திருக்குமரன் தோன்றினார். இதைக் கந்த புராணம்,

அக்கணத் தாயிடை ஐங்கரத்தவன் அருள்
முக்கண்நால் வாயினான் மும்மதத் தாறு பாய்,
மைக்கருங் களிறெனும் மாமுகத் தவன்மதிச்
செக்கர்வார் சடையன் ஓர் சிறுவன்வந் தருளினான்.

என எடுத்துரைக்கிறது. அங்ஙனம் தோன்றிய பிள்ளையார் சிவனாரையும், உமாதேவியாரையும், திருவடிகளில் வீழ்ந்து வணங்க, தாயும், தந்தையுமாக இருவரும் கரம் நீட்டி மைந்தரைத் தழுவி எல்லையில்லாக் கருணையை

பிள்ளையாருக்குப் புரிந்து அருளினர். இந்த வரலாறு தான் நமக்கு விநாயகர் பிரணவ சொரூபி என்பதைத் தெளிவாககிக் காட்டுகிறது. பின்னர் சிவபெருமான் மைந்தரை நோக்கிக கூறினார்—

"யாவராயிருந்தாலும் முதலில் உன்னை வணங்கித் தங்களது காரியத்தைத் தொடங்கினால் அதனை அவர்கள் சித்தை போல காரியத்தை வெற்றியுடன் முடித்துத் தருவாய். உன்னை வணங்காதவரது காரியத்துக்கு இடையூறு விளைவித்து விடுவாய். தேவர்கள், மனிதர்கள், மற்றும் பல்வகைக் கணங்களுக்கும் நீ அதிபதியாவாய்" என்றுரைத்தார்

யானை முகத் தோன்றல் இவ்வரத்தினால் விக்ன ராஜர், விநாயகர், கணபதி போன்ற பெயர்கள் பெற்றார். இங்ஙனம் வரம் பெற்று, திருப்பெயர்களும் பெற்ற விநாயகர் பூதகணங்களுக்குத் தலைவனாகி, பூத கணங்கள் புடைசூழ சிவபெருமானது திருக்கோயில் கோபுர வாயிலில் வீற்றிருந்தார். அச்சமயம் ஓர்நாள் இந்திரன் முதலான அமரர்கள் வந்து வணங்கி முன்பு நடந்ததை எடுத்துச் சொல்லி முறையிட, உடனே விநாயகப் பெருமான் தனது பூத கணங்களுடன் சென்று கயமுகாசூரனுடன் போரிட்டார்.

கயமுகாசூரனும் பல இடங்களில் உருமாறி உருமாறி கடுமையாகப் போரிட்டான் முடிவாக யாதொரு ஆயுதத் தாலும் அழியாத வரம் பெற்றவனாதலின் விநாயகர் தனது வலது பக்கத் தந்தத்தை ஒடித்து அசுரன் மீது ஏவ அது அவன் மார்பைப் பிளந்தது மீண்டும் அவன் பெருச்சாளி வடிவெடுத்துப் போருக்கு வர, அவனுக்கு ஞானத்தை வழங்கியருளி அப்பெருச்சாளியைத் தனது வாகனமாக்கிக் கொண்டார், விநாயகர்.

அசுரனின் இரத்தம் சிந்தி ஓடிய இடமாக திருச்செங் காட்டங்குடி விளங்குகின்றது. அத்திருத்தலத்தில்

விநாயகர் சிவலிங்கம் ஸ்தாபித்துப் பூஜை செய்தார். அக் கோயில் 'கணபதீச்சரம்' என வழங்கப்படுகிறது

கயமுகாசுரனுடைய கொடுமைகள் நீங்கி இன்ப மடைந்த தேவாதி தேவர்கள விநாயகரை வணங்கித் துதி செய்து, அவருக்குச் செய்ய வேண்டிய கைமாறு ஒன்றும் இல்லையாகையால்''இத்தனை காலமும் கயமுகாசுரனுக்கு செய்து வந்த தோப்புக்கரண வணக்கத்தை இனி நாங்கள தேவரீருககுச் செய்வோம்'' என்று அவரிடம் அருள் பெறறு அன்று முதல் அவ்வாறே செய்வாராயினர். அவர்கள் மட்டுமா, உலகில் எவராயினும் அவ்வித வணக்கம் செய்வோரது இடர் களைந்து அருள் புரிவார், விநாயகர். இதனைத் திருஞான சம்பந்தரும், "தனதடி வழிபடும் அவர் இடர்கடி கணபதி" எனத் தனது திருப் பதிகத்தில் விரிவுபடக் கூறியுள்ளார்.

சிவஸ்வரூபமாகிய பிரணவம், யானைகளாகிக் கூடி அதனின்றும் தோன்றியதால் விநாயகர், சிவபெருமானி னின்றும் வேறு அல்லர், என்பது தெளிவாகிறது மேலும் இவரது பெருமை, தோற்றம் இவைகள பற்றி கந்த புராணம் தக்ஷகாண்டம், கயமுகன் உற்பத்திப் படலம் விரிவாகக் கூறுகிறது

விநாயகர் சர்வசமயக் கடவுள் எனப் பெருமை கொள்கிறார் சமண சமயத்தவரும், சதுர்த்தி விழாக் கொண்டாடுகின்றனர். வைணவர்களில் சிலரும் தமது கர்மாக்களை "சுக்லாம் பரதரம்" எனத் தொடங்கும் விநாயகர் தோத்திரம் சொல்லி ஆரம்பிக்க அறிகிறோம்.

மேற்கூறிய காரணங்களால் விநாயகப் பெருமானை எல்லாக் காரியங்களுக்கும் முதலாவதாக, எல்லாத் தெய்வங்களுக்கும் முழு முதல் தெய்வமாக வணங்கி வழிபடும் காரணம் அறிகிறோம்.

விநாயகரின் ஒடித்த கொம்பு-"ஓ" என்ற எழுத்தின் சுழி இருக்குமிடம். இவ்வெழுத்து இங்கிருந்து தொடங்கி

வலக்கை வழியாக மேலே கிரீடத்தைச் சுற்றி இடக்கைப் பக்கம் வரையில் வந்து, திரும்பி வளைந்து நெற்றிப் பொட்டு வரையில் போய் துதிக்கை வழியாகக் கீழிடக்கை வந்து கால்வரை இறங்கும் இடக்கையும் மோதகமும், ''ம்'' என்பதைக் குறிக்கிறது. ஆகையால இவர் உருவம் ஓங்கார சொரூபமேயாகும்.

ஓங்கார ஒலியை யானையின் ஒலி உணர்த்துவது உண்மை உலகில் மற்ற எல்லா ஒலிகளையும் விட ஓங்காரப் பிரணவ நன்கு ஒலிப்பதால் யானை முகம் கொண்டவராகத் தோற்றம் பெற்றார். இப்பிரணவ ஒலியே முதன் முதலில் தோன்றியதாலும் விநாயகப் பெருமானை முதலாவதாகப் பூஜிக்கச் செய்கின்றோம். ஓங்காரத்துள் எல்லா அண்டங்களும் அடங்கிக் கிடக்கின்றன என்பதைக் காட்டுவதே அவர் கொண்டுள்ள பானை வயிறு. மோதகம் என்பது அமிர்த கலசமாகும். அமிர்தக் கலசம் என்பதன் பொருள்—அழிவற்ற தன்மையையும் நிஜ ஆனந்தம், ஆகிய கல்யாண குணங்கள் அவரிடம் குடி கொண்டிருக்கின்றன என்பதைக் காட்டு கிறது. விநாயகரைத் தொழுபவன் எந்நாளும் ஆனந்த மாக விளங்குவான்.

கடவுள் அணுவுக்குள் அணுவாயும், மகத்துக்கு மகத் தாயும இருக்கிறார் என்பதை உணர்த்தவே மூஞ்சூறு வாகனமாய் இருக்கிறது. பார்வைக்குப் பெரிய உருவத்தை சிறிய உருவம் எப்படித் தாங்கும், என்று எண்ணலாம். ஆனால், அணுவுக்குள் அணுவாயும், எளிமைக்கு எளிமை யாயும், உயர்ந்த பொருளுக்குப் பொருளாயும் காட்சி தருபவர் விநாயகப் பெருமான்.

பெருமானின் உருவம் பல்வேறு மக்களாலே வழிபட வழிபட நாளடைவில் பலவித வடிவங்களைக் கொண்டவ ராகவும், பலவித நோக்கங்கள் சித்தரிக்கத் தக்கதாகவும், அவரவர்களின் விருப்பப்படியும் அநேக வித வடிவங்கள்

கொண்டு விளங்கலாயின. அவை 32 வித வடிவங்களாக சொல்லப்படுகின்றன. 1. பாலகணபதி, 2. கருணைக கணபதி, 3. பக்தி கணபதி, 4 வீரகணபதி, 5. சக்தி கணபதி, 6. துவஜ கணபதி, 7 சித்திகணபதி, 8. உச்சிஷ்ட கணபதி, 9 விகன கணபதி, 10 க்ஷிப்ர கணபதி, 11 ஹேரம்ப கணபதி, 12. லட்சுமி கணபதி, 13. மகா கணபதி, 14 விஜய கணபதி, 15 நிருத்த கணபதி, 16. ஊர்த்துவ கணபதி, 17. ஏகாக்ஷர கணபதி, 18. பிரஸன்னவாஜன கணபதி, 19 துண்டி கணபதி, 20 மும்முக கணபதி, 21. வரகணபதி, 22 நிரய அக்ஷய கணபதி 23. க்ஷிப்ர கணபதி, 24 ஹரித்ரா கணபதி, 25. ஏகதந்த கணபதி, 26 ஸ்ருஷ்டி கணபதி, 27. உத்தண்ட கணபதி, 28 சிங்க கணபதி, 29 யோக கணபதி, 30. துர்கா கணபதி, 31 சங்கடஹர கணபதி, 32. செல்வ கணபதி என்பன.

அடுத்து ஐந்து கரத்தனை ஐந்தொழிலுடையனை எனப் போற்றுகின்றோம். கும்பம் ஏந்திய திருக்கரம்- ஆக்கும் தொழில், அங்குசம் ஏந்திய திருக்கரம்- அழித்தல் தொழில், மோதகம் ஏந்திய திருககரம். காத்தல் தொழில், பாசம ஏந்திய திருக்கரம்- மறைத்தல்-தந்தம் ஏந்திய, திருக்கரம்- அருளால் தொழில் என ஐந்தொழில் உடைய நாயகனாக விளங்குகின்றார்.

நமது இஷ்ட தெய்வமாக, எளிமையின் அருள் வெள்ளமாக, எல்லோருககும் ஏற்ற தெய்வமாக விளங்கும் பெருமான் கோயில் கொண்ட இடத்தையோ அலலது ஆலமரத்தடி வாசம் செய்யும் இடத்தையோ ஒருமுறை பிரதஷிணமாகச் சுற்றி வந்து வணங்க வேண்டும். பல முறையோ அல்லது மூன்று ஒன்பது முறைகளோ சுற்றக் கூடாது. பலமுறை சுற்றினாலும் ஒரு முறை சுற்றினால் வரும் பலனேதான் உண்டு. ஆகவே பலமுறை சுற்ற வேண்டியதில்லை.

விநாயகர் வழிபாடுகளில் வரும் விரத விழாக்களில் மிக உயர்ந்ததும், மிகுந்த பயன் தரக் கூடியதும், தீவினை அகற்றி நற்பயன் அதுவும் பிற்பயன் தரக் கூடியதுமாக இருப்பது விநாயக சதுர்த்தி விழாவாகும்.

# 8. முருகன்

விநாயகருக்குப் பின் தோன்றியவர் முருகன். இவரின் பெயரே மிகவும் பெருமை பெற்றது—முருகன் என்றால் அழகன் அதிலும் அழியாத அழகுடையவன், இணையில்லாத இளமை கொண்டவன், மாறாத மணம் கொண்டவன், தெவிட்டாத தேன் போன்று இனிக்கின்றவன், பரிபூரண கடவுட்தன்மை கொண்டவன், என்றும் நிறைந்தவன், என்னும் பல பொருள்படுகின்றது. குன்றாத ஆற்றல் கொண்டவனாகவும் உள்ளான்.

முருகன் பரமசிவனுக்கு இடைக்காலத்தில் தோன்றிய மகனாக விளங்கினாலும் முழுமுதற் கடவுள் என்றே சொல்கிறோம் என்றால், கந்த புராணம் கூறியது போல,

"ஆதியும், நடுவும் ஈறும் அறுவமும் உருவும் ஒப்பும்
ஏதுவும் வரவும் போக்கும் இன்பமும் துன்பமுமின்றி
வேதமும் கடந்து நின்ற விமல ஓர் குமரன் தன்னை
நீதரல் வேண்டும் நின்பால் நின்னையே நிகர்க்க" —

என்று தேவர்கள் சூரபதுமன் முதலிய அசுரர்களின் கொடுமைகளைப் பொறுக்க முடியாது சிவபிரானிடம் வேண்டிக் கேட்டுக் கொண்டதால், அவர்களின் விருப்பத்திற்கிணங்க அவரே ஒரு குமாரனாய் தோன்றினார். ஆதலால் முருகனை முழுமுதற் கடவுள் ஆகின்றார்.

சிவபெருமானே தனது நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகளைத் தோற்றுவிக்க அது ஆறு திருமுகங்களைக் கொண்டு ஆறும் சரவணம் சேர்த்து அறுமுக ஒருவன் ஆகத் திரு அவதாரம் செய்தான். இதிலிருந்து

சிவபிரானே அறுமுகன் ஆகத் தோன்றினார் என்பதும் வெளிப்படுகிறது. இதனையும் கச்சியப்ப சிவாச்சாரியார்,

ஈசனே அவனாடலால் மதலையாகினன் காண்.
பேசின் ஆங்கவன் பரனொடு பேதகன் அல்லன்,

என்று கூறுகின்றார்—அப்படி அவன் ஆறுமுகனானதற்குக் காரணம் என்னவெனில், சிவனுக்குரிய ஐந்து முகத்தோடு அதோ முகம் என ஒரு முகம் சேர்ந்து அறுமுகமானான். மற்றும் சிவனுக்குரிய ஐந்து முகத்தோடு சக்திக்குரிய ஒரு முகம் சேர்ந்து ஆறுமுகமாகினான் எனவும் நான்கு திசைகளுடன் மேல் கீழ் திசையும் சேர்ந்து அனைத்தையும் ஆளச் செய்ய ஆறுமுகமானான் எனவும், கொள்ளலாம்.

முருகனது ஆறுமுகங்களும், பன்னிரண்டு கைகளும், அழகிய வடிவேலும் கொண்டு, வள்ளி தெய்வானை என்ற இரு சக்திகள் (இச்சா சக்தி, கிரியா சக்தி) சமேதராக விளங்குவதே முருகன் தோற்ற அமைப்பாகும்.

**முருகனது ஆறு திருமுகங்கள்**
**செய்யும் அற்புதங்கள்**

1. ஒருமுகமானது, பெருமை பொருந்திய இருள் கொண்ட உலகம். குற்றமில்லாமல் ஒளி பெறும் பொருட்டுப் பல கிரணங்களைத் தோற்றுவித்தது!

2. ஒருமுகமானது, பக்தர்கள் பக்தி கொண்டு துதித்தால் அவர்களது இன்னல்களை நீக்க உடன்பட்டு அவர்கள் விருப்பத்தில் மகிழ்ந்து வேண்டும் வரங்களை அருள்வது.

3. ஒருமுகமானது. வேதங்களில் சொல்லிய மந்திர முறைமை தவராத பிராமணர்களுடைய யாகங்களில் தீங்கு வராதபடி காத்து நிலையாக நிற்கும்.

4. ஒரு முகமானது, வேதங்களில் மறைந்து கிடக்கும் பொருள்களை இருடிகள் இன்பம் பொருந்தும்படி போதித்து எல்லாத் திசைகளுக்கும் விளக்கும்.

5. ஒரு முகமானது, அசுரர்களது கோபம் கொண்டு, சமத்துவத்தை அழித்து பகைமை உண்டாக்கும் அசுர குணங்களை அழிக்கப் போர்க்கள வேள்வியை வேட்டது.

6. ஒரு முகமானது, வேடருடைய மடப்பத்தை யுடைய மகளாகிய வள்ளியம்மையுடனே மகிழ்ச்சியில் பொருந்தியிருக்கும் முகம். அதாவது தெய்வத் தன்மை, இனிமை, இளமை, மணம், மகிழ்ச்சி, அழகு என் ஆறு தன்மைகள் அமைந்தவை.

ஆறு திருமுகங்கள் கொண்டவன் பன்னிரண்டு கைகளுடனும் செய்யும் சிறப்புக்களைக் காணலாம்—

1. ஒரு கை தேவர்களையும், ரிஷிகளையும் பாதுகாக்க அமைந்தது. 2. அதற்கிணையான கை மருங்கிலே கிடந்தது. 3. ஒரு கை அங்குசத்தை செலுத்துகின்றது. 4. அதற்கிணையான கை, ஆடையுடுத்திய தொடையில் கிடக்கின்றது. 5. ஒரு கை அதாவது ஐந்தாவதும், ஆறாவதுமான கைகள் அழகிய பெரிய பரிசையொடு வேலாயுதத்தை வலமாகச் சுழற்றுகின்றது. 7. ஏழாவது கை முனிவர்களுக்கு உரையிறந்த பொருளை உணர்த்த மார்போடு சேர்த்து விளங்க, 8 எட்டாவது கை மார்பில் தாழ்ந்து தொங்கும் மாலையுடன் சேர்ந்து விளங்கிற்று. 9. ஒன்பதாவது கை வளைகளுடனே மேலே சுழன்று கள வேள்வியை வேட்டும் முத்திரை கொடுக்கின்றது. 10. பத்தாவது கை மணியை மாற்றி ஒலிக்கப் பண்ணுகின்றது. 11. பதினோறாவது கை மழையைப் பெய்விக்கின்றது. 12 அதற்கிணையான கை தெய்வப் பெண்களுக்கு மாலை சூட்டுகின்றது. இவ்வாறு ஆறு திருமுகங்களும் பன்னிரண்டு கரங்களும் கொண்டு அவதரித்த காரணம்,

தேவர்கள் ஈசனிடம் கேட்டுக் கொண்டபடி அசுரர்களை அழித்து அவனியை வாழ வைக்க, திருக் கருணையால் காத்து நிற்கவே தோன்றினார்.

இறைவன் கருணை இரண்டு விதங்களில் புரிகின்றார். ஒன்று அறக்கருணை என்றும், மற்றொன்று மறக்கருணை என்றும் புரிகின்றார். நல்ல அடியார்களை, பக்தர்களை அறக் கருணையால் காத்து ஆட்கொள்ளுகின்றார். பொல்லாதவர்களை, அசுரர்களை மறக் கருணையால் காத்து ஆட்கொளளுகின்றார்.

சூரபத்மன் தான் பெற்ற வரத்தால் நன்மக்களுக்கும், தேவர்களுக்கும் தீராத் துன்பங்களை இழைத்து வந்தான். அவன் மேலும் அவ்வுடம்போடு நீண்ட காலம் இவ்வுலகில் தங்கினால் பலப்பல பாவச் செயல்களைச் செய்து, நரகத்திற்கும் மீளாத ஆளாவான் என்பதையும், தவத்தால் வரம் பெற்ற இவன் நற்பலனை அடையாது பெரும் பாவியாகி விடக் கூடாது என்பதையும் கருணை கொண்டு ஈசன் குமர நாயகனாகத் தோன்றி, சக்தி வேலாயுதத்தால் அவனது உடலை இரு கூறாக்கி, அவற்றில் ஒன்றை மயில் வாகனமாகவும், மற்றொன்றை சேவற் கொடியாகவும் தன்னோடு சேர்த்துக் கொண்டார். இதன்படி சூரபத்மனை கொல்லவில்லை யென்பதும், மறக் கருணையால் (மாற்று உருவம் கொடுத்து) ஆட்கொண்டார் என்பதும் விளங்குகின்றது.

சூரபத்மன் இக் கருணையால் இறைவனது பேராற்றலை உணர்ந்து பாடுவதாகக் கந்த புராணம்,

> கோலமா மஞ்ஞைதன்னில்
> குலவிய குமரன் தன்னைப்
> பாலன் என்றிருந்தேன் அந்நாள்
> பரிசு இவை உணர்ந்திலேன் யான்,

மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தனக்கும் யார்க்கும்
மூலகாரணமாய் நின்ற
மூர்த்தி இம் மூர்த்தியன்றோ

என்று கூறுகிறது.

மானிடர்கள் மும்மலங்களாலும், அறு பகைவர்களாலும், தன்னைத்தான் அழித்துக் கொள்கிறார்கள் என்றால் மேலுலகத்தில் தேவர்களையும், முனிவர்களையும், ரிஷிகளையும் ஆணவமே உருவெடுத்த அசுரர்கள் அழிக்க முற்படுகிறார்கள். அந்த வேளைகளில் இறைவன் ஒருவனால்தான் அழித்து முக்திகொடுக்க முடியும் என்னும் நிற்பந்தம் ஏற்படுகிறது.

ஆணவம் நிறைந்த ஓர் உயிர் ஒரு போதும் இறைவனைக் காண முடியாது. ஆணவத்தின் முழுச் செயலும் ஒடுங்கியபோதுதான் இறைவனை அடைய முடியும் என்றும். நிலை கொண்டு நம்மை ஆட்டிப் படைக்கும் மும்மலங்கள் ஒழியும் காலம்வரை பேதமை, அறியாமை கொண்டு தவிக்கும் தீராக் கொடுமையின் உருவத்தோடு நிற்கும் அரக்கனைக் கொன்றால் அல்லாது உயிருக்குப் பிணி மூப்புச் சாக்காடும் ஒழித்துக் கொள்ளாது இறைவனோடு ஒன்றி வாழ இயலாது. இவற்றைப் போக்கும் ஆற்றல் உடையவன் இறைவன் அல்லாது வேறு எவராலும் இயலாது. அனைத்து உயிர்களிடத்தும் கொண்ட கருணையால் ஸ்தூல உடம்பு கொண்ட அசுரனைக் கொன்று அநாதித் தன்மையுள்ள, நிற்கதியில் நிற்கும் ஆத்மாவாகிய உயிரினைத் தன்னோடு சேர்த்துக் கொள்ளுகிறான் என்பதே சூரசம்ஹாரத்தின் தத்துவமாம்.

மேலும் பல உயிர்களும் தன்னியல்பு அறியாது, பல ரூபங்களில் பிறரிடம் சிக்கித் தவிக்கின்ற நேரத்தில் பரம்

பொருளான இறைவன் ஒரு கருவி போல இருந்து ஏற்றுக் கொள்ளுகிறான். இதற்கு எடுத்துக்காட்டாக வள்ளி தெய்வானை திருமணங்கள் உண்மையை உணர்த்து கின்றன. அசுரனை அழித்து இந்திராதி தேவர்களுக்கு இன்பத்தை அளித்த முருகனுக்குப் பரிசாக இந்திரன் மகளான தெய்வயானையின் திருமணம் நடந்தது. திருமாலின் கண்மலரில் தோன்றிய சுந்தரவல்லி என்பவளே பின் ஒரு சமயம் வள்ளியம்மையாகி ஸ்ரீ முருகப் பெருமானை மணந்து கொண்டாள்.

இதன் தத்துவம்—இறைவனை உணர்ந்து, அவனது அன்பிற்குப் பாத்திரமாகிய உயிர் அவனோடு இரண்டறக் கலக்கும் என்பதை உணர்த்துகிறது. இப்படித் தத்துவ ஞான சற்குருவாக விளங்கும் முருகனின் பல்வேறு திருநாமங்களை அறிந்தும் அதன் உட்பொருளையும் உணர்ந்து கொள்வோம்.

முருகன் நம்மை அனைத்து வழிகளிலும் காக்க வல்ல தெய்வம் அல்லாது பிரணவப் பொருள் உணர்த்த வந்த நாயகனுமாகும் ப்ரணவம் என்ற சொல்லில் ப்ர + நவம் என்று பிரித்தால் ப்ர-என்பது சிறப்பு என்றும், நவம் என்பது புதுமை என்றும், இரண்டும் சேர்த்தால் புதுமையின் சிறப்பு என்று பொருளாகும்.

ப்ரணவப் பொருளானவன்தான் முருகன். உகரம் சேர்ந்த சொல்லில், 'உ' காக்கும் தொழில் புரிவது. உலகைக் காக்கும் தொழில் புரிபவனை நாம் கா வா வா. என்றழைக்க, ம் + உ மு, ர் + உ = ரு—முரு கா வா வா என்று அழைப்பதில் உண்மை இருக்கிறது.

'உ'-என்ற எழுத்து காக்கும் என்பதால் காவியம் படைக்கும் பெரும் புலவர்கள், 'உ' என்ற எழுத்தை முதலில் வருமாறு 'உலகம் உவப்ப'' என்று திருமுருகாற்றுப் படையில் நக்கீரரும், ''உலகெலாம் உணர்ந்து''

என்று பெரிய புராணத்தில் சேக்கிழாரும், "உலகம் யாவையும் தாமுள வாக்கலும்" என்று கம்பராமா யணத்தில் கம்பர் பெருமானும், தொடங்கினார்கள். மகர மெய்யில் உகர உயிர் மருவிட-' மு' என்ற எழுத்தில் "முத்தைத்தரு" என்று திருப்புகழில் அருணகிரியாரும் தொடங்கினார்.

ம, ர, க எனும் மெய்யெழுத்துக்களில் உகர உயிர் மருவிநின்று முருகு என்ற சொல் உலகைக் காக்க எழுந்தது. இவ்வாறு மூன்று உயிர்கள் அமைந்த வேறு மந்திரச் சொல் ஏதுமில்லை. ஆகையால் 'முருகா' என்று ஒரு முறை சொன்னால் கிடைக்கும் பலன் மிகவும் பொருள் நிறைந்த சிறப்புப் பெற்றது. இவ்வாறு மேற் கூறியது போல பல காரணப் பெயர்கள் கொண்டவன் தான் முருகன். அவனது பெயர்ச் சிறப்புகளை கீழ்க்கண்ட குறிப்பில் அறிவோம்...

## பன்னிரு திருப் பெயர்கள்

1. குமரன், 2. குகன், 3. குரு, 4. கந்தன், 5. கார்த் திகேயன், 6. சரவணபவன், 7. சுப்ரமண்யன், 8. வேலன், 9. சுவாமி, 10. விசாகன், 11. செவ்வேள், 12. தேவ சேனாதிபதி, ஆகியவை.

1. குமரன்— இப்பெயர் எப்போதும் இளமைப் பருவத்தை உடையவன் என்றும், சிவபெருமானின் திருக்குமரன் என்றும், வெறுக்கப்பட்டவர்களை அழிப் பவன் என்றும், பக்தர்களுக்கு செல்வ சம்பத்தைக் கொடுப்பவன் என்றும் பொருள்படும்.

2. குகன்—இது குறிஞ்சி நிலக்கடவுள் என்றழைக் கலாம். மலைக் குகைகளில் கோயில் கொண்டிருப்பவன். அதோடு நம் இதயக் குகையில் கோயில் கொண்டிருப்பவன் என்பதாகும்.

3. **குரு:** அஞ்ஞானத்தை நீக்குபவன் குரு. ஆன்மாக்களின் அஞ்ஞான இருளை அகற்றுபவர் குரு, குருசாமி, குருமூர்த்தி, என்பதாகும்.

4 **கந்தன்:** பகைவர்களுடைய பராக்கிரமத்தை வற்றச் செய்கின்றவன் ஸ்கந்தன், ஆறு திருமேனியும் ஒன்றாய்ப் பொருந்தியவன், ஆன்மாக்களுக்குப் பற்றுக் கோடாய் இருப்பவன். இந்தப் பெயர் சிறப்பு - கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தர் சஷ்டிக் கவசம், கந்தகோட்டம் என வருதல் ஆகும்.

5. **கார்த்திகேயன் :** கார்த்திகைப் பெண்கள் பாலூட்டித் தாலாட்டி வளர்த்ததால் இப்பெயர் பெற்றான்.

6. **சரவணபவன் :** சரம் என்றால் நாணல், வனம் என்றால் காடு, பவன் என்றால் தோன்றியவன். ஆக நாணல் காட்டில் தோன்றியவன் என்னும் பொருள் வரும். வனம் என்றால் நீர் என்றும் பொருள்படும். நாணல் காட்டில் சரவணப் பொய்கையில் தோன்றியவன் என்பதாகும்.

7. **சுப்ரமண்யன் :** சுப்ரம நியம், என்று பிரித்து, சு— மேலான ப்ரமப் பொருளிலிருந்து நியம் - தோன்றியவன் என்று பொருள். அடுத்து - ஸுப்ரஹ்மண்யோம்-என்பது மாபெரும் தெய்வ வேத மந்திரம் - ஸு - தூய இன்பம், ப்ரஹ்மம் - பெரிய பொருள், நியம் வெளிப்பட்டு விளங்கும் ஒளி என்பது, இம்மந்திரச் சொல்லாகும்.

8. **வேலன் :** வெல்லுகின்ற வேலைக் கையிலே உடையவன். கைவேல் ஞானம் யாவற்றையும் கொடுக்கும், அஞ்ஞானத்தை வெல்லும், தடையில்லா ஞானம் அளிக்கும் என்பதாகும்.

9 **சுவாமி:** ஸ்வம் என்றால் சொத்து, அகில உலகத்திலுமுள்ள சகல உயிர்களும் தனது சொத்தாகக் கொண்டவன்.

10. **விசாகன் :** ஒரு பட்சியின் மீது சஞ்சரிக்கின்றவன். பட்சி மயில் மீது வரும் வாகனன் - மயில்வாகனன் எனப் பொருள்.

11. **செவ்வேள் :** செம்மை நிறங்கொண்டு, மற்றவர் களால் விரும்பப்படுவன் எனப் பொருள்

12. **தேவசேனாதிபதி:** தேவர்களின் சேனாதிபதியாக வசிட்டர் முதலிய பிரம்ம ரிஷிகள் முருகனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்ததால் தேவசேனாதிபதி யானார்.

இத்தகைய பெருமை வாய்ந்த கலியுக வரதனாகிய கந்தக கடவுளின் கழலடி போற்றி வணங்குவோம்.

முருக பக்தியை மேற்கொள்ள, விரதமிருத்தல், காவடி எடுத்தல், முக்கியத் திருநாட்களான, கார்த்திகை நாள், தைப்பூச நாள், பங்குனி உத்திர நாள் இவற்றின் போது அபிஷேக ஆராதனைகள், அன்னதானங்கள் செய்தல், மிகுந்த நன்மை பயக்கும்.



# 9. சிவலிங்கம்

சைவ சமயத்திற்கு முக்கிய மூலக் கருத்தாக விளங்குவதும், எல்லா ஆலயங்களிலும் இருக்கும் விக்ரகங்களில் முக்கியமானதுமான திருமூர்த்தம் சிவலிங்கம் ஒன்றுதான். சிவலிங்கம் என்றால் சிவ+லிங்கம், சிவம=கடவுள், லிங்கம்=அடையாளம், கடவுளைக காட்டும் அடையாளமாக விளங்குவது. இதற்கு இன்னும் சற்று விளக்கம் கொடுத்தால் சிவம்=கடவுள், லி=லயம், (ஒடுங்குதல்) இங்கம்=தோன்றுதல். அதாவது உயிர்கள் கடவுளிடம் லயித்து ஒடுங்கத் தோன்றுதல் என்பதன் அறிகுறியாக இருககின்றார், என்றும் பொருள்படும். ஆன்மாக்கள் மீண்டும் தோன்றுவதற்கு இடமாவும் இருக்கின்றார் என்றும சொல்லலாம்.

சிவலிங்கத்தின் அமைப்பையும் உருவ விளக்கத்தையும் காண்போம் :

லிங்கத்தின் மேல் பகுதி முனையற்றதான அரைவட்ட வடிவம் கொண்ட தணடு போன்றும், அதன் அடிப்பகுதி உடுக்கையின் மேல் பரப்பும், அடிப்பரப்பும் கொண்டு இடையில் ஒடுங்கி உள்ளதை ஆவுடையென்றும், தண்டு போன்ற பாகம், பாணம் அல்லது லிங்கம் என்றும், ஆவுடையின் இடது பக்கம் கோமுகம் ஒன்றும் உண்டு.

இப்படிப்பட்ட ஒரு ரூபமாக சிவலிங்கம் அமைந்து இருந்தாலும், அது மற்ற விகரங்களைப் போன்று மனித ரூபத்தில் அமைந்திருக்கவில்லை. முன்னர் கூறியதுபோல அரூபியாகிய இறைவன் உலகில் மற்றய ரூபங்கள் எல்லாம் தோன்றுவதற்கும், இறுதியாக எல்லாம் தன்னுள்

என்று பெரிய புராணத்தில் சேக்கிழாரும், "உலகம் யாவையும் தாமுளவாக்கலும்" என்று கம்பராமாயணத்தில் கம்பர் பெருமானும், தொடங்கினார்கள். மகர மெய்யில் உகர உயிர் மருவிட-' மு' என்ற எழுத்தில் "முத்தைத்தரு" என்று திருப்புகழில் அருணகிரியாரும் தொடங்கினார்.

ம, ர, க எனும் மெய்யெழுத்துக்களில் உகர உயிர் மருவிநின்று முருகு என்ற சொல் உலகைக் காக்க எழுந்தது. இவ்வாறு மூன்று உயிர்கள் அமைந்த வேறு மத்திரச் சொல் ஏதுமில்லை. ஆகையால் 'முருகா' என்று ஒரு முறை சொன்னால் கிடைக்கும் பலன் மிகவும் பொருள் நிறைந்த சிறப்புப் பெற்றது. இவ்வாறு மேற் கூறியது போல பல காரணப் பெயர்கள் கொண்டவன் தான் முருகன். அவனது பெயர்ச் சிறப்புகளை கீழ்க்கண்ட குறிப்பில் அறிவோம்...

## பன்னிரு திருப் பெயர்கள்

1. குமரன், 2. குகன், 3. குரு, 4. கந்தன், 5. கார்த்திகேயன், 6. சரவணபவன், 7. சுப்ரமண்யன், 8. வேலன், 9. சுவாமி, 10. விசாகன், 11. செவ்வேள், 12. தேவ சேனாதிபதி, ஆகியவை.

1. *குமரன்*— இப்பெயர் எப்போதும் இளமைப் பருவத்தை உடையவன் என்றும், சிவபெருமானின் திருக்குமரன் என்றும், வெறுக்கப்பட்டவர்களை அழிப்பவன் என்றும், பக்தர்களுக்கு செல்வ சம்பத்தைக் கொடுப்பவன் என்றும் பொருள்படும்.

2. குகன்—இது குறிஞ்சி நிலக்கடவுன் என்றழைக்கலாம். மலைக் குகைகளில் கோயில் கொண்டிருப்பவன். அதோடு நம் இதயக் குகையில் கோயில் கொண்டிருப்பவன் என்பதாகும்.

3. **குரு:** அஞ்ஞானத்தை நீக்குபவன் குரு. ஆன்மாக்களின் அஞ்ஞான இருளை அகற்றுபவர் குரு, குருசாமி, குருமூர்த்தி, என்பதாகும்.

4 **கந்தன்:** பகைவர்களுடைய பராக்கிரமத்தை வற்றச் செய்கின்றவன் ஸ்கந்தன், ஆறு திருமேனியும் ஒன்றாய்ப் பொருந்தியவன், ஆன்மாக்களுக்குப் பற்றுக் கோடாய் இருப்பவன். இந்தப் பெயர் சிறப்பு - கந்தரந்தாதி, கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தர் சஷ்டிக் கவசம், கந்தகோட்டம் என வருதல் ஆகும்.

5. **கார்த்திகேயன் :** கார்த்திகைப் பெண்கள் பாலூட்டித் தாலாட்டி வளர்த்ததால் இப்பெயர் பெற்றான்.

6. **சரவணபவன் :** சரம் என்றால் நாணல், வனம் என்றால் காடு, பவன் என்றால் தோன்றியவன். ஆக நாணல் காட்டில் தோன்றியவன் என்னும் பொருள் வரும். வனம் என்றால் நீர் என்றும் பொருள்படும். நாணல் காட்டில் சரவணப் பொய்கையில் தோன்றியவன் என்பதாகும்.

7. **சுப்ரமண்யன் :** சுப்ரம நியம், என்று பிரித்து, சு— மேலான ப்ரமப் பொருளிலிருந்து நியம் - தோன்றியவன் என்று பொருள். அடுத்து - ஸுப்ரஹ் மண்யோம்-என்பது மாபெரும் தெய்வ வேத மந்திரம் - ஸு - தூய இன்பம், ப்ரஹ்மம் - பெரிய பொருள், நியம் வெளிப்பட்டு விளங்கும் ஒளி என்பது, இம்மந்திரச் சொல்லாகும்.

8. **வேலன் :** வெல்லுகின்ற வேலைக் கையிலே உடையவன். கைவேல் ஞானம் யாவற்றையும் கொடுக்கும், அஞ்ஞானத்தை வெல்லும், தடையில்லா ஞானம் அளிக்கும் என்பதாகும்.

9 **சுவாமி:** ஸ்வம் என்றால் சொத்து, அகில உலகத்திலுமுள்ள சகல உயிர்களும் தனது சொத்தாகக் கொண்டவன்.

அடங்குவதற்கும் வயிப்பதற்குமாக ஒரு திருஉருவத்தை கொள்ள வேண்டியவனாகிறான். அவ்வாறு அவன் கொண்ட ரூபாரூபமாகிய சதாசிவமே சிவலிங்கமாகும்.

முழுமுதற் பரம்பொருளாகிய சிவன் எல்லாம் வல்ல இறைவனாக, கருணையின் வடிவமாக, சர்குருநாதநாக போற்றி வழிபடப் பெறுபவன் சிவலிங்கப் பெருமான்.

இவரை சிவன் என்றும், சிவம் என்றும்,பரம் பொருள் என்றும் போற்றி வழிபடப் பெறுகின்றான்.

பரம்பொருள் உலகம் உய்யும் பொருட்டும், அடியார்களுக்கு அருள்புரியும் பொருட்டும், கொண்ட திருக்கோலங்கள் பலவும் ஒரு முப்பத்தாறு தத்துவங்களில் நின்று விளக்குகின்றார்.

முப்பத்தாறு தத்துவங்களாவன :

1. சிவம், சக்தி, சாதாக்கியம், ஈஸ்வரம், சுத்த வித்தை—என்ற சிவ தத்துவம் ஐந்தும்,

2. சுத்த மாயையில் உள்ள காலம், நியதி, கலை வித்தை, அராகம, புருடன், மாயை என்ற வித்தியா தத்துவம்—ஏழும்,

3. ★ அசுத்த மாயையில் உள்ளதான இருபத்து நான்கும் அதாவது, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற தன்மாத்திரை ஐந்தும்,

★ மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் எனப் பூதங்கள் ஐந்தும்,

★ மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற அறிகருவிகள்—ஐந்தும்,

★ வாக்கு, பாதம், கை, எருவாய், கருவாய் என்ற தொழிற் கருவிகள் ஐந்தும்,

★ மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற கரணங்கள் நான்கும்,

ஆகமொத்தம் முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து சிவபரம்பொருள் சுத்த சிவம் அத் தத்துவங்களில் நின்று ஐந்தொழில் புரிந்து, ஆன்மாக்களின் மலங்களையும் போக்கி, வீடு பேறு அருள வேண்டுமென்னும் பெருங் கருணையினால் அருவம், அருஉருவம், உருவம் என்னும் மூவகையான திருமேனி ஏற்று விளங்குகின்றார்.

சிவபரம் பொருளின் அருவநிலை சுத்த சிவ தத்துவத்தில் உள்ளது. இச்சிவம் ஞானமே திருமேனியாகக் கொண்டவர். இவரை நின்மலசிவம் என்றும் கூறுவர். நின்மல, அல்லது நிட்களம் என்றால் ஒரு உருவம் இல்லாதது. இவற்றில் ஞானசக்தி, தனித்து நின்று கிரியா சக்தியும் தனித்து நின்று, பொருந்தி வியாபிக்கும் நிலையில் நோக்கும் போது மனம் லயிக்கின்ற சிவமாகவே நிலைபெறும். லயசிவம் என்பது படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களைச் செய்யும் இச்சையுடையது. இச்சிவம், ஞான சக்தியைப் பொருந்தி நிற்கும் போது சிவன் என்றும், கிரியா சக்தியைப் பொருந்தி நிற்கும்போது சிவம்—சக்தி என்றும் பெயர் பெறும்.

அருள் நிலையாகிய நிட்கள சிவம் கண்ணால் காண இயலாதது. மனத்தினால் நாம் தியானித்து வழிபடத் தக்க ஞான வடிவமுடையது. சிவபிரானின் அருவுருவ நிலை சாதாக்கிய தத்துவத்தில் நிலைபெற்றது. சாதாக்கியம் என்றாலே எப்பொழுதும் போற்றப்படுவது எனப்பொருள் எனவே வடிவம், நிறம், பெயர் முதலியன இல்லாத நிட்கள ரூபன் (அருவ) வடிவம், நிறம், பெயர்

முதலியன உடையதாய் பக்தர்களால் போற்றிப் புகழப் படுவதாகும் இவரை சாதாக்கிய தத்துவமுடையவர், மூர்த்தித் தத்துவமுடையவர் என்றும் கூறுவர்,

சாக்கிய தத்துவத்தில் உள்ளவரை "சகள நிட்கள் சிவம்" என்பர் இத்தத்துவத்தில் உள்ளவரை வடிவுடையதும் வடிவமில்லாததும் ஆகிய இரு தன்மையும் கூடி நிற்பதாகும். இதில் ஞானசக்தியும், கிரியா சக்தியும், சம நிலையில் பொருந்தி அன்பர்கள் தியானித்துப் பூஜிக்கும் பொருட்டு ஐந்தொழிலைச் செய்யும் எழுச்சிக் கொண்டு 'போக சிவம்' என்னும் பெயரும் கொண்டு இருப்பவர்.

இச்சகள நிட்கள சிவமே சிவலிங்க வடிவமாகும். "சிவலிங்கம் அசவலிங்கம்" என்றும் பெயர் பெறும். அதாவது . போக்குவரவு இல்லாதது என்றும் பொருள் படும். மூலஸ்தானத்தில் உள்ளது சிவலிங்கம். இதனைக் கண்ணால் காணவல்லது உருவம். இந்த உருவம் சகளம். இதனை இன்னது என்று திட்டமாகக் கூற முடியாமல் உறுப்புக்கள் இல்லாமல் இருப்பது அருவம். இந்த அருவம் திட்களரூபம் — உருவம் உண்டு. ஆனால் உறுப்புகள் இல்லை. இவ்விரு தன்மைகளும் பெற்றதால் சிவலிங்கம் ஒரு அரு உருவத் திருமேனி கொண்டவர் எனக் கொள்ளலாம்.

முன் கூறிய சிவலிங்க அமைப்பில் சிவநாபமாகிய குழல், ஞான சக்தி, சிவ நாபத்தின் கீழே உடுக்கை போல் அமைந்த பீடத்தின் மேல் பாகம். அதில ஒரு பக்கமாக நீண்ட கோமுகி பொருந்திய ஆவுடையாராகிய பீடம். கிரியாசக்தி வட்டமாகிய கீழ்ப் பீடம், இச்சா சக்தி சிவ நாபம் சிவ வடிவம், பீடம் சக்தி வடிவம், கீழ்ப் பீடம் பிரம்ம வடிவம். மேல் உள்ள ஆவுடையார் பீடம் விஷ்ணு வடிவம்.

ஒரு சிவலிங்கம் கிழக்கு அல்லது மேற்கு நோக்கி அமைந்திருந்தால் அதன் கோமுகி வடக்கு அல்லது தெற்கு நோக்கியும் இருக்க வேண்டும். வடக்கு முகமாக அமைந்தால் கோமுகி இடது பக்கமான மேற்கு நோக்கி அமைய வேண்டும்

கோமுகியின் சிறப்பு யாதெனில்—சிவசக்தி உயிர்களுக்குச் செய்யும் தண்ணளியைக் குறிக்கின்றது. இதனாலேயே ஆலய வழிபாடு செய்யும் அடியார்கள், பக்தர்கள் கோமுகி வழியாகப் பாயும் அபிஷேகத் தீர்த்தங்களை இறைவனது திருவருள் சுரப்பதாக மதித்துக் கையால் பிடித்துத் தலையில் தெளித்துச் சிவனருள் பெற்றதாக மகிழ்கிறார்கள்.

சிவபரத்தின் உருவ நிலையானது ஈஸ்வர தத்துவத்தில் உள்ளது. இது மகேஸ்வரம், உருத்திரன், விஷ்ணு, பிரம்மன் என நான்காகும் ஈஸ்வரதத்துவத்தில் மகேஸ்வரனின் சூக்கும அதிகாரத்தால், உருத்திரன் அழித்தலையும், அருளலையும், தூல அதிகாரத்தால் பிரம்மன் படைத்தலையும் விஷ்ணு காத்தலையும், மகேஸ்வரன் மறைத்தலையும் செய்தருள்வார்கள் விஷ்ணு பிரமன் ஆகிய இருவரிடத்திலும் சிவசக்தி பதிந்து நின்று செலுத்துவதால் இவ்விருவரும் மகேஸ்வரருக்கு ஒப்பாக வைக்கப் பெற்றுள்ளார்கள். இச் சிவ வடிவம் சகள சிவம் என்று கூறப்படும்.

இந்தச் சிவம் ஞான சக்தி குறைந்து கிரியா சக்தி மிகுந்து நின்றும், ஞான சக்தி மிகுந்து கிரியா சக்தி குறைந்து நின்றும்—வியாபிகரும் நிலையில் அதிகார சிவம் என்று பெயர் பெறும். இந்த அதிகார சிவமானது ஐந்தொழில் புரிவதாகும். ஞான சக்தி, கிரியா சக்தி ஒன்றுக் கொன்று குறைந்தும், மிகுந்தும் காணப்படும் போது மகேஸ்வரன் என்றும், ஒன்றுக் கொன்று மிகுந்தும்

குறைந்தும் காணப்படும் போது சுத்த வித்தை எனப் பெயர் பெறும்.

மகேஸ்வரராகிய சிவபெருமான் பல திருமேனிகளை எய்துகின்றார். அத்திருமேனிகளில் உருப்புக்களும் கண்ணால் காணும் நிலையில் எழுந்தருளுகின்றார். ஆதலால் இத்திருமேனிகள் சகளம் ஆயிற்று. ஆக மகேஸ்வரர் பெற்ற திருமேனிகள் இருபத்தைந்தாகும்.

**திருமேனிகள் — 25**

1. சந்திரசேகரர், 2. உமாமகேஸ்வரர், 3. இடபாரூடர், 4. நடராசர், 5. கல்யாணசுந்தரர், 6. பிட்சாடனர், 7. காமாரி, 8. காலாரி, 9. திரிபுராரி, 10. சலந்தராரி, 11. மாதங்காரி, 12. வீரபத்திரர், 13. ஆரியபத்திரர், 14. அர்த்தநாரீஸ்வரர், 15. கிராதர், 16. கங்காளர், 17. சண்டேசானுகிரகர், 18. நீலகண்டர், 19. சக்கரப் பிரதாபர், 20. கஜமுகானுக்கிரகர், 21. சோமாஸ்கந்தர், 22. ஏகபாதர், 23. சுகாசீனர், 24. தட்சிணாமூர்த்தி, 25. லிங்கோத்பவர்—என இந்த இருபத்தைந்தும், சிவ பிரானது மகேஸ்வர நிலையில் எழுந்த திருமூர்த்தங்க ளாகும்.

சிவபெருமானது நிலை பொதுவாக இருவகையாகச் சொல்லலாம். குறி, குணம், செயல்கள் இல்லாத நிலையைத் தட்த்தம் என்று கூறுவர். உயிர்களின் ஈடேற்றம் கருதி அருவம், அருஉருவம், உருவம் என்னும் நிலையில் தோன்றி அருள் புரியும் தன்மையை சொரூபம் என்று கூறுவர். பல்வேறு சமயங்களில் உருவத் திருமேனி கொண்டு அருளும் நிலைகளையும், திருவிளையாடல்கள் புரிந்து அருளிய கருணையையும் சிவமூர்த்தங்களாக நினைந்து வழிபட்டு வருகின்றோம். கருணாமூர்த்தியான சிவனார் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள் புரிந்து;

பக்தர்களின் சேவையையும், அன்பையும் ஏற்று, ஆட்கொண்டு அருள் புரிந்த விதமோ அந்த ஞானமூர்த்திக்குத்தான் பொருந்தும்.

அங்ஙனம் இவர் மேற்கொண்ட மூர்த்தங்களை மூன்று வகையாகவும் அதனால் ஏற்பட்ட வடிவங்களை மூன்று வகையாகவும் கொள்ளப்பெறும் போக வடிவம் கொண்டதால்—போக மூர்த்தியெனவும், கோர வடிவம் கொண்டதால்—அகோரமூர்த்தியெனவும், யோக வடிவம் கொண்டதால்—யோக மூர்த்தியெனவும், சொல்லப் பெறுவர். அம்மையொடு கூடிய இன்ப நிலையில் எழுந்தருளியுள்ள மூர்த்தங்களை இம்மை, மறுமை இன்பங்களைப் பெற வேண்டி விருப்பங்கொண்டு நாம் போக மூர்த்தியை வணங்க வேண்டும். அவ்வாறான போக மூர்த்திகள், சந்திரசேகரர், உமாமகேஸ்வரர், இடபாரூடர், சோமஸ்கந்தர் என்பவர்களாவர். அம்மையின்றி வீரநிலையில் எழுந்தருளியுள்ள மூர்த்தங்களை உலகில் பகையை வெல்ல விரும்புவோரும், வினையை ஒழிக்க விரும்புவோரும் கோர மூர்த்திகளை வழிபட வேண்டும் அவ்வாரான மூர்த்தங்கள், காமாரி, காலாரி, கங்காளர், வீரபத்திரர், திரிபுராரி, போன்றவர்களாவர்.

யோக நிலையில் எழுந்தருளியுள்ள மூர்த்தங்களை, வீடு பேற்றைப் பெற விரும்புவோர், சரணாகதி தத்துவத்தை மேற்கொண்டு திருப்பாத கமலங்களை அடைய விரும்புவோர் யோகமூர்த்தியை வணங்க வேண்டும். அவ்வாரான மூர்த்தங்கள், சுகாசீனர், தட்சணாமூர்த்தி, சண்டேசுவரர், ஏகபாதர், லிங்கோத்பவர் போன்றவர்களாவர்.

மேற்கூறிய மூன்று நிலைகள் அல்லாமல் மேலும் ஒரு அற்புத நிலையில் திருமேனி எடுத்துக் காட்டுகின்றார். அதுவே, ஆண்பாதி, பெண்பாதி என்றிருக்கும்படியாக

அமைந்த அர்த்தநாரீசுவரத் திருஉருவம். இது மாதொரு பாகன் ஆகத்திகழும் காட்சி ஓர் அற்புத வடிவம்.

தொன்று தொட்டு இயற்கையை இறைவனாகவும், இறைவனை இயற்கையாகவும், கண்டு கண்டு வழிபடுவது வழக்கமாக இருந்து வருகின்றது. எனவே இயற்கையிலும் மேற்கூறிய ஆண், பெண், கூறுகள் ஒரே அமைப்பில் காணும்ப . அமைந்துள்ளவை அனேகம் காணலாம். செடி, கொடி, மரம் போன்ற தாவர இனத்தில் இவ்வித வடிவ அமைப்புகள் பொருந்தியுள்ளன. ஒரே மலரில் ஆண்பாகம், பெண்பாகம் ஆகிய இரண்டும் உள்ளன. இவ்விரண்டு கூட்டுறவால் புதிய விதைகள் தோன்றுகிறது ஒவ்வோர் உயிரும் அதனதன் தாய்த் தன்மையில் பாதி அம்சம் பெற்றே உற்பத்தியாகின்றன.

இவ்வித இயற்கையில் சைதன்யம், ஜடம் என்ற இரண்டு தத்துவங்கள் கொண்டுளளது எந்த ஒன்று அறிகின்றதோ அது சைதன்யம் என்றும், எந்தக் கருவின் மூலகாரணமாக அறிவு வளர்கின்றதோ அந்தக் கருவி ஜடம் என்றும் பெயர் பெறும். உயிர் அறிவது— உயிர் உடலின் மூலமாக அறிவது— உயிரும்— உடலும் சேர்ந்து இதை செய்வது வாழ்கை. இதிலிருந்து நாம் அறிந்து கொள்வது உயிர்த் தத்துவம் சிவம். உடல் தத்துவம். சக்தி. உடல் இல்லாமல் உயிர் விளங்காது உயிர் இல்லாமல் உடல் எப்பயனும் பெறாது. இந்த சிவசக்தியாகிய இரண்டு தத்துவத்திற்கும், புறம்பான இயற்கை எதுவுமில்லை. இந்த இரண்டும் சேர்ந்ததே அர்த்த நாரீஸ்வரக்கோலம். நீககமற நின்று நாம் வேண்டும் எல்லாச் செல்வங்களையும் அருளும் மூர்த்தம் என்பது உண்மை.

உலக இயக்கங்களில் எல்லாம் சிவமயம் என்று கூறுவார்கள். சிவனாரிடத்தில் உலகும், அதன் உயிர்

களும், பொலிவுறுகின்றன. பூதங்களும், புனலும், அனலும், பெருமானிடத்தில் பொலிவுறுகின்றன. பாம்பும், காளையும், சிங்கமும், யானையும், அப்பெருமானோடு சேர்ந்து விளங்குகின்றன. இதனாலேயே எல்லாம் சிவமயம் என்பதை உணர்த்துகின்றன.

சிவம்—பொருள். (மேட்டர்—Matter)

சக்தி—உயிர்— (எனெர்ஜீ—Energy)

இரண்டும் சேர்ந்தால்தான் ஆக்டிவிடி (Activity) தோன்றும். சிவ சக்திகளை கைனிட்டிக் எனர்ஜி பொட்டன்ஷியல் எனர்ஜி என்றும் கூறுகிறார்கள்.

"ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே" என்னும் கூற்றுக்கு இலக்காகி எல்லாம் அவனுள் அடங்கும் என்பதை உணர்த்துகின்றன.

ஆகையால் சிவலிங்க வடிவமாக இருக்கின்ற இறைவனை உலகெங்கும் பூசித்து வருகின்றார்கள் என்றால் ஒரு மூலகாரணத்தைக் கண்டு கொண்ட விஞ்ஞானிகள் ஏற்றுக் கொண்டார்கள். ஞானிகள் உணர்ந்துணர்ந்து சொன்னதை விஞ்ஞானிகள் சோதனை செய்து ஏற்றுக் கொண்டார்கள். விஞ்ஞான அணு ஆராய்ச்சியாளர்கள் அணுவை சோதனை செய்தபோது பச்சை நிறமான வட்டத்தின் மையத்தில் ஒரு செந்நிறமான ஜோதி இருந்ததாகக் கண்டார்கள். அந்தப் பச்சை வடிவம் ஆவுடையாகவும், ஜோதியைச் சிவலிங்கமாகவும் ஏற்றுக் கொண்டார்கள் எனச் செய்திகள் வெளியாகியுள்ளன. ஆகவே அணுவுக்குள் அணுவாக நிறைந்த பரம்பொருள் உலகெங்கும் வியாபித்துள்ளார் இவ்வாறு இறைவன் அருஉரு வடிவமாக சிவலிங்கமான தோற்றம் முற்றிலும் தெளிவுபடுத்துகிறது.

# 10. நடராஜர்

"அவனன்றி ஓரணுவும் அசையாது" என்பது நமது ஆப்த மொழியாகும். இவ்வுலகம் இயங்குகின்றது என்றால் அது ஒரு சக்தி இயக்கமாக இயங்குகின்றது என்பதை பலரும், காரண காரியத்தோடு ஒப்புக் கொள்வார்கள். மறுப்பவர் எவரும் இல்லை. இதுபற்றிய சில கருத்துக்களை முந்நய அத்தியாயங்களில் பார்த்தோம்.

இந்த இயக்கத்திற்குக் காரணமாக இறைவன் கூத்தாடுகின்றான். அதனாலே இறைவனுக்கு கூத்தபிரான் என்று பெயர் வைத்து அழைப்பர். சைவர்கள் முற்றிலும் உணர்ந்தே இப்படிச் சொல்வர். பரம்பொருளாகிய சிவனாரும், தன் சக்தியின் துணையால் தான், இவ்வுலகையும், இதில் உள்ள சகல உயிர்களையும் இயககிக் கொண்டு இருக்கின்றார் என்று சாத்திரங்களும் சொல்லுகின்றன. நமது முன்னோர்கள் இந்த ஆண்டவனுக்கு ஒரு வடிவத்தைச் சிருஷ்டி செய்து அமைத்தார்களே அவர்களது கூர்ந்த ஞானத்திற்கு எப்படிப்பட்ட கைமாறு செய்யவல்லோம்.

உயிர்களுக்கு அவையவை முன்செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்ப உடலமைப்புக்களையும், அதற்கேற்ப கரணங்களையும், கொடுத்துதவி, அவை இருந்து வாழ்வதற்கு உலகத்தையும் படைத்து, அதில் இன்ப, துன்பங்களை முறையே அனுபவித்து, முடிவில் ;தன் திருவடி நிழலில் சேர்வதற்குறிய போகப் பொருள்களையும் வகுத்துள்ளார் என்றால் அவர்தம் கருணை என்னே. இதனைத் தான் நம் சாத்திரங்கள் "தது, கரண, புவன, போகம்" எனப் பரிபாஷையில் பேசுகிறது.

விஞ்ஞான மேதைகளும் கூட அணுவை இரு கூராக்கி ஒரு பாகம் ப்ரோடோன் (Proton) என்றும், மற்றொன்று எலக்ட்ரான் (Electron) என்றும் கூறி, ஒன்று சும்மா செயலற்றிருக்கிறது. மற்றொன்று இயங்கிக் கொண்டிருக்கிறது என்று வியந்தே கூறியுள்ளார்கள். இத்தகைய கூத்தை இயக்கிக் கொண்டிருக்கும் கடவுட் பேதத்தைத் தான் நடராஜர் எனக் கூறுகிறோம் அவர் வடிவத்தைச் சிறிது சிந்தித்தால் அவர் ஆடும் காரணம் உயிர்களிடத்து வைத்த பரம கருணையினால் நாம் வாழ அவராடுகின்றார் என்பது விளங்கும். அங்ஙனம் அவர் சிதம்பரத்தில் ஆடுவது பஞ்சகிருத்திய ஆனந்தத் தாண்டவம் எனப் பெயர் பெறும்.

பஞ்ச கிருத்தியம் என்றால் ஐந்தொழில் எனப்பொருளாகும். இந்த ஐந்தொழில் புரிந்திடும் அம்பலவாணன சிருஷ்டி அல்லது படைத்தல், திதி அல்லது காத்தல், சம்ஹாரம் அல்லது அழித்தல், திரோபாவம் அல்லது மறைத்தல், அநுக்கிரகம் அல்லது அருளல் ஆகும். பிரம்ம தேவர் படைத்தலாகிய ஒரு தொழிலையே செய்ய வல்லார். திருமால் படைத்தல், காத்தல் ஆகிய இரு தொழிலையும், உருத்திரமூர்த்தி படைத்தல், காத்தல், அழிதல் ஆகிய முத்தொழிலையும், மகேஸ்வரமூர்த்தியோ, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் ஆகிய நான்கு தொழிலையும்,சதாசிவ மூர்த்தியோ படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் செய்வர். இவரே நடராஜப் பெருமான்.

நடராஜப் பெருமானின் திருமேனி அமைப்பைக் காண்பதற்கு ஆகமஞானமும், சித்தாந்த அனுபவமும் அதோடு சிவனாரின் பேரருளும் வேண்டும். எனினும் நாம் மேலெழுந்த வாரியாகச் சற்றுப் பார்த்தல் நம் அறிவிற்குப் பயனாகும்.

சிவதாண்டவங்களில் பொதுவாக உள்ள உறுப்புக்கள் படைக்கலன்கள், அணிகலன்கள் ஆகியவற்றின் தத்துவக் குறிப்பை இங்கு காண்போம்.

முகம் முதல் பாதம் வரை: 1. திருமுகம் (சடைமுடி, திருச்செவி, தோடும்-குழையும், பிறை, கங்கை, அறுகு, ஊமத்தமலர், எருக்கு, திருவெண்ணீறு, நீலகண்டம்.) 2. திருவடிகள்—தூக்கிய திருவடி, ஊன்றிய திருவடி, 3. மணி ஏந்திய கை, 4. சுடர் ஏந்திய கை, 5. அபயகரம், 6. கபாலம் ஏந்திய கை 7. மழு ஏந்திய கை, 8. விஸ்மய ஹஸ்தம், 9. வீசியகரம், 10. பாம்பு ஏந்திய கை, 11. பாசம் ஏந்திய கை, 12. சூலம் ஏந்திய கை, 13. அங்குசம் ஏந்திய கை, 14. துடி ஏந்திய கை, 15 முயலகன், என்றபடி பெருமானின் உருப்புகள் பற்றிய விரிவான விளக்கத்தினைக் கீழே காண்போம்.

**1. திருமுகத்தில் சடைமுடி:** இது ஞானத்தின் அடையாளமாகத் திகழ்கிறது. நுண்சிகை ஞானமாகக் கூறுகிறது திருமந்திரம். அனைததையும் உணரும் பெரிய ஞானியாய் விளங்கும் இறைவன் ஆன்மாக்களுக்கு ஞானம் அருளும் பொருட்டே பெருமான் சடைமுடி தரித்திருககின்றார். திருமுறையில், பனித்தசடை, செஞ்சடை என்றும், சடையின் நிறமும், தன்மையும் கூறப்படுகின்றன முடிந்த சடை, ஒன்றுபட்டுக் குவிந்த ஞானத்தையும், விரிந்த சடை, உலக உயிர்களுக்கு ஞானமூட்டும் பரந்த நிலையையும் உணர்த்துகின்றன.

**திருச்செவி:** இறைவனின் திருச்செவிகள் பரநாதம் பரவும. பராகாச வடிவமானவை. பிரணவ வடிவமான பராகாசத்தில் உடுக்கையை ஒலித்துப் பரநாத ஒலியை வலது செவியில் ஏற்று ஒலி உலகை உண்டாக்கிக் கொண்டே இருக்கிறார். இதுவே பிரணவ ஒலியாக ஓம், ஓம் என்று உலகெங்கும வியாபித்து நிற்கின்றது. மான் ஒரு அகங்கார வடிவமாதலால் உலகை அழிக்கும்

ஒலியை உண்டாக்கியது. அதனை அடக்கி, ஒற்று நிற்பது இடது செவி. இது தீய ஒலிகளையும் பராகாசத்தில் அடக்கி ஆளும் இறைவனின் அருளாற்றல்தனை அறிவிப்பதாகும்.

**தோடும், குழையும்** : வலக்காதில் குழையும் இடக்காதில் தோடும் அணிந்திருக்கிறார். இது ஆணோடு பெண்ணாய் அமைந்த இவ்வுலகையே தன்னுடைய உருவம் என்பதை உணர்த்துவதாகும். வலது காது துடியோசையாகிய ஒலி உலகப் படைப்பாற்றலுக்கு இடமாகவும், இடக்காது அழிவாற்றலை அடக்கியாளும் அருளாற்றலின் இயல்பாகவும், சிவ—சக்திகளின் தனித்தன்மைகளை விளக்குகின்றது.

**பிறை** : இது இறைவனது முற்றறிவைக் குறிக்கிறது எனக் காமிகாகமம் கூறுகிறது.

**கங்கை** : இது ஞானவாரிதியாகக் கூறப்படுகிறது. அளவில்லாத ஞானத்தைப் பெற்றிருக்கும் இறைவன் கங்கையையும் தன் சடைமுடியில் கட்ட வல்லவன் என்று காட்டப்படுகிறது.

**அறுகு, ஊமத்தமலர், எருக்கு** : அறுகு அறிவின் நுணுகத்தையும், ஊமததமலர், விருப்பு வெறுப்பற்ற தனைமையையும, எருக்கு விளக்கத்தையும் குறிக்கிறது.

**திருவெண்ணீறு** : உயிர்களின் பாசத்தைப் போக்க, விஸ்வரூபியாகி இறைவன் மேனி முழுவதும், திருநீறு அணிந்து இருககிறான் என்பதை, மலாத நீற்றுக் கொடியை நேர்பட எடுத்தும் என்பதனால் உணரலாம். அன்றியும் திருநீறு பராசகதியின் வடிவாய் மேனி முழுவதும் பிரிவின்றிக் கூடியிருப்பதைக் காட்டவும் அணிந்திருக்கிறார். இதைப் பராவணமாவது நீரு என்று திருஞான சம்பந்தர் கூறுகிறார் துதிக்கப்படும் பொரு

வாகும் என்று திருநாவுக்கரசரும், பவளம் போல் மேனி யில் பால் வெண்ணீறும் என்று பாடுகின்றார்.

*நீலகண்டம் :* இது இறைவனின் அருளாற்றலைக் குறிககிறது. திருப்பாற்கடல் கடைந்தபோது தோன்றிய ஆலால விஷத்தைக் கண்டத்திலே அடக்கி உலக உயிர்கள் சாகக் காரணமான நஞ்சைத் தான் சாகாமையாலும் உண்டு அவனது நித்தியத் தன்மையை விளக்குவதாகும்.

2. *திருவடிகள் :* மறைத்தல், அருளல் ஆகிய இரண்டு செயல்களும், இறைவனின் திருவடிகளாகக் கூறப்படு கின்றன. உலக உயிர்களை, நல்வினை, தீவினை ஆகிய வற்றில் அழுத்தி அவற்றில் அனுபவிக்கச் செய்து, அந்த இருவினையும் ஒப்பு மலப்பரிபாக என்னும் நிலை ஏற்படச் செய்கிற மறைப்பாற்றலைத் தருகின்ற பாதம் ஊன்றிய பாதம்.

*தூக்கிய திருவடி :* இது உள் வளைந்து அடிக் கீழிருக்கும் உயிர்களுக்கு ஏற்ற முடிபோல விளங்கி முக்தி யின்பத்தை அளிப்பதாகும். குஞ்சிதபாதம் என்ற பெயரும் இதற்கு உண்டு. இது எல்லோரையும் மயக்கும். அநாதி யும், அந்தமும் ஆகியுள்ள சிருஷ்டியாதி நாடகத்திலிருந்து உயிர் விடுபட்டு, ஓய்வடையும்படி செய்யும் நிழல் போன்ற இறைவனது கருணையைக் குறிக்கிறது. இப் பாதத்தை இடக்கை நமக்கு சுட்டிக்காட்டி உபதேசிக்கும் குருவே போல "ஆண்டவன் திருவடியன்றி வேறு வழி யில்லை. ஆதலால் அதனை அடைய முயலுங்கள்" என்பதை குறிக்கிறது.

*ஊன்றிய பாதம் :* மாயாதீதமாகிய ஊன்றிய திருவடி முயலகனைத் தீண்டியும், தீண்டாத நிலையில் இருக் கின்றது. இது ஒளியானது இருளில் தோயாமல் அதன் வியாபகத்தை அடக்கி நிற்பது போன்ற நிலை. ஒளியும் இருளும் ஒன்றினால் இப்படித்தான் இருக்கும் என்பதைக் காட்டுகிறது.

**சிலம்பும் கழலும் :** நம் வினைப் பலத்தை வென்று பிறப்பு, இறப்பு அறுப்பது கழல். இது கள்ள வினை வென்று பிறப்பறுக்கச் சாத்திய வீரக்கழல் என்று ஆன்றோர்கள் கூறுவர். இதைச் சேக்கிழார் பெருமான் விளக்குகிறார், "மறைச் சிலம்பு ஆர்ப்ப" என்று.

3. **திருக் கரங்கள் :** தாண்டவப் பெருமானுக்கு, நான்கு, எட்டு, பத்து, பதினாறு கைகள் என கற்பிக்கப் பட்டுள்ளன. உலகமே வடிவமாக அமைந்த இறைவனுக்கு திசைகள் திருக்கைகளாக அமைந்திருக்கின்றன. அதனால் நான்கு கரங்களும், எட்டுத் திசைகளுடன் எட்டுக் கரங் களும், விண்ணும், மண்ணுமாகிய திசைகளுடன் பத்துக் கரங்களும் அமைந்தவன் என்று காமிகாகமம் கூறு கின்றது. பதினாறு திசைகளும் இது போன்றே சிறப்புப் பெற்றவை.

**மணி ஏந்திய கை :** ஓசையின் சொரூபமாக அமைந்தி ருக்கும் மணியை ஏந்தி இருப்பது இறைவனின் மந்திர ரூபத்தைக் குறிக்கிறது. ஜீவநாத தத்துவத்திறகுக் காரண மானவன் தலைவன்தானே என்பதை உணர்த்துகிறது, என்றும் ஆகமம் கூறுகின்றது.

**தீச்சுடர் ஏந்திய கை :** இடக் கரத்தில் தீயகலை ஏந்தி இருக்கின்றான். இது அழிக்கும் செயலைக் குறிக்கின்றது. தீயகல், மாயா காரணமான தத்துவங்களைக் காட்டி உயிராகிய நீ அவற்றினின்றும் வேறானவன் என்ற உண்மை ஞானத்தை உணர்த்துகின்றது. பாசங்களை நீராக்குவதனால், தீச்சுடரை சங்கார சக்தி என்று கூறு கிறது காமிகாகமம்.

**அபயகரம் :** இது வலக்கைகளுள் ஒன்று. இறைவன் திருக்கரத்தை தனது அபயம் எனக் காட்டியிருக்கின்றார். பிறவிச் சூழலில் அகப்பட்டு, வருந்தி ஓடிவரும் உயிர் களுக்கு அபயம் அளித்துக் காப்பது. இது, அமைந்த கை

என்றும் கூறுவர். அனைத்தையும் காப்பதாக அமைந்தது இக் கை.

*கபாலம் ஏந்திய கை :* எத்தனையோ கற்பகங்களைக் கடந்து என்றும் நித்தியமாய் விளங்குபவன் என உணர்த்துகிறது.

*மழு ஏந்திய கை :* பராசக்தியின் உருவம் என்பதையும், லயஸ்தானம் என்பதையும் தெரிவிப்பது மழு என்னும் ஆயுதம் பறையின் வடிவாயப் பாசத்தைச் சேதம் செய்வது என்று காரணமாகக் கூறுகிறது

*பரசு :* கோடரி வடிவாய் இறைவன் பாசங்களை சேதிப்பவன் என்பதை உணர்த்துகிறது.

*விஸ்மயஹஸ்தம் :* இது வியப்புக் குறியைக் காட்டும் கை.

*வீசிய கரம் :* இக்கரம், தூக்கிய திருவடியைக் காட்டியபடியிருக்கும். இடக்கை இது. திரிபதாகை முத்திரையோடு காணப்படும். ஆனந்த நடனத்தில் இதுவே வரதஹஸ்தமுமாகும். பரிபாகமுற்ற ஆன்மாக்களை நோக்கி, இதுதான் நீ அடையக்கூடிய இடமாகும் என்று சுட்டிக் காட்டும் கை.

*பாம்பு ஏந்திய கை :* இறைவனது, சடை, கழுத்து வயிறு, மணிக்கட்டுகள், அரை, கால், இவற்றில் பாம்புகள் அணியாக அணிந்திருக்கிறான். பாம்பு சாதகர்களுக்கு ஓர் எடுத்துக் காட்டு. காற்றையே உணவாக உட்கொண்டு, வேறு எதையும் உண்ணாமல், ஐந்து பேரறிவும் கண்களே கொண்டு இருக்கின்ற நிலையில் பாம்பு மிகச் சிறந்த உயிர். இது இறைவன் அன்பர்க்கு எளியவன் என்பதையும், மூலாதாரத்திலுள்ள குண்டலினி சக்தியை நாகமாகக் கூறுவது யோக ஆகமங்களின் மரபு இவர் அணிந்துள்ள நாக சக்தி அனைத்து உலகத்தையும் நியமிக்கிறது என்று கூறுகிறது காமிகாகமம்.

***பாசம் ஏந்திய கை :*** ஆன்மாக்களுக்கு வினைபோகத்தில் ஆசையை விளைவித்து, உயிர்கள் அதிலேயே அழுந்தியபடி அழியாத நிலையில் கரையேற்ற உதவுகிறது பாசக்கயிறு. மும்மலங்களையும் பாசம் ஏந்திய கை குறிப்பதாக இருக்கிறது ஆன்மாக்களுக்கு மலத்தை ஊட்டுவிப்பவனும், அதில் அழுந்தாதபடி காப்பவனும் நீயே, என்பதை எடுத்துக் காட்டுகிறது மாயாருபமாகிய பாசக் கயிற்றை ஏந்திய கை கொண்டான்.

***சூலம் ஏந்திய கை :*** சூலத்தின் மூன்று கிளைகளும் மூன்று குணங்களை உணர்த்துவன. அவை, ஆரணி, செனனி, ரௌதயித்ரி என்ற முச்சக்திகள் வடிவாக இருந்து முத்தொழில்களைச் செய்து மும்மலங்களை நீக்கி முக்தி அளிப்பன என்று பௌஷ்கர விருத்தி கூறுகிறது. மந்திர சாஸ்திரங்களின்படி சூலம் உயிர் வடிவானது. உயிர்களுக்கு தீங்கு வராதவண்ணம் இறைவன் கையில் சூலம் தாங்கிக் காக்கின்றான். இவ்வாறு படைக்கலங்கள் ஏந்திக் காக்கின்ற தத்துவக் கருத்தை நாம் ஒரு ஞானக் கண் கொண்டு பார்ப்பதே நமக்கு உயர்ந்த பொருளாக அமையும்.

***அங்குசம் ஏந்திய கை :*** வசப்படாத பொருளை வளைத்து வசப்படுத்தப் பயன்படுத்தும் ஆயுதம். இதுவும் பாசக் கன்மங்களில் கிடந்து உழலும் உயிர்களை வலித்து இழுத்து காக்கப் பயன்படுகிறது

***துடி (உடுக்கை) ஏந்திய கை :*** துடி ஒரு நாத வடிவானது. "நாதப் பறையின் அன்னே" என்று மணிவாசகர் கூறுகின்றார் இது இறைவனது படைப்புத் தொழிலை அறிவிப்பது என உண்மை விளக்கம் கூறுகிறது. இதனை வலது பின்கரத்தில் ஏந்ியுள்ளான்.

**பிற உறுப்புகள் :**

**பூணூல் :** இது வேதத்தின் முடிவாகிய பிரணவ காயத்ரியைக் குறிப்பதாகும். அன்றியும் இது மூலாதாரத்திலிருந்து எழும் குண்டலினி சக்தியைக் குறிக்கும், "நூலது வேதாந்தம்" என்று திருமந்திரம் குறிப்பிடுகிறது.

**கோவணம் :** "மன்னுகலை துன்னு பொருள் மறை நான்கும் வான்சரடாத் தன்னையே கோவணமாச் சாத்தினன் காண் சாழலோ" என்று மணி வாசகப் பெருமான் கூறுகின்றார். அதாவது அறுபத்து நான்கு கலைகளும் அறியப்படும் பர ஞானக் கலையை நான்கு வேதங்களுமாகிற அரை நாணில் கோத்து இறைவன் அணிந்திருக்கிறான். எனவே கோவணம் வேதமும், பரஞானமும் ஆகும்.

**கபால மாலை :** இறைவன் கழுத்தில் இருபத்தொரு கபாலங்களை மாலையா அணிந்திருக்கிறான். இது இறைவன் எத்தனையோ பிரம்ம கற்பங்களையும், ஆதிவராகக் கற்பங்களையும் கடந்து என்றும் நித்தியனாய் விளங்குபவன் என்பதை உணர்த்துகின்றது.

**திருவாச்சி :** கூத்தப் பெருமானின் திருஉருவம் திருவைந்தெழுத்து வடிவம். ஓங்காரமே திருவாச்சி என்பது உண்மை விளக்கம். எனவே பிரணவமாகிய வித்தெழுத்தின்றி திருவைந் தெழுத்தை ஒலிப்பது கூடாது. நமசிவாய என்று ஒலித்தல் கூடாது. ஓம் நமசிவாய என்று ஒலிக்க வேண்டுமென்ற மரபினை அறிவிக்க ஓங்காரத்தின் இடையில் திருவைந்தெழுத்து வடிவமாக இறைவன் விளங்குகின்றான். எனவே திருவாச்சி இல்லாத நடராஜப் பெருமான் உருவத்தை தரிசித்தலும், வணங்குதலும், வாழ்த்துதலும் கூடாது. என்பது மரபு, திருவாச்சியின் மேல் விளங்கும் சுடர் இருபத்தொன்று. அவையனைத்தும் ஒளியின்

உருவங்கள். ஒலியும், ஒளியும் ஒன்றையொன்று விட்டுப் பிரியாது இயங்கும். ஆகவே ஒளியின் இடையில் காணப் படும் ஒலியினிடையில் ஐந்தெழுத்து வடிவமாகி கூத்த பிரான் விளங்குகின்றான். இவ்வாறு தாண்டவப் பெரு மானின் உருவத்தின் மறை பொருளாக பல தத்துவக் கருத்துக்கள் உள்ளன. பொருளை உணர்ந்து வியப்படை வதே நம் கடமையாகும்.

மேற்கண்டவாறு நடராஜப் பெருமானின் திருஉருவ அமைப்பு பிரபஞ்சத்து உயிர்களின் நன்மைக்காக ஆனந்த தாண்டவக் கோலம் பூண்டுள்ளார், என்பதை அறிகிறோம். இனி நடராசப் பெருமானின் பல்வேறு வகையான தாண்டவங்களைப் பற்றிப் பார்ப்போம். சிவபெருமான் நடராஜராக உலகத்திற்கு அளித்த அற்புத ஆடற்கலையை அகத்தியமுனிவர் 108 பேதங்கள் எனக் கூறுகின்றார்.

ஆனால் அதில் மிக முக்கியமாக சாரங்கர் பன்னிரண்டு பேதங்களை விளக்குகின்றார். மேலும் இக் கலையை நந்திகேஸ்வரர், வசிஸ்டர், பரதர், முதலியோர் களாலும் இன்னும் அநேகம் பேர்களாலும் பரத சாஸ்திரங்கள் மிகவும் விரிவாக எழுதப்பட்டு இருக் கின்றன.

சாரங்கத்தேவர் விளக்கிய சிவபெருமானின் துவாதசத் தாண்டவம், என்று பன்னிரண்டைப் பற்றிப் பார்ப் போம் :—

1. ஆனந்தத் தாண்டவம், 2. சந்தியா தாண்டவம், 3. ஸ்ருங்கார தாண்டவம், 4. திரிபுரதாண்டவம், 5. ஊர்த்து தாண்டவம், 6. முனிதாண்டவம், 7. ஸம்ஹார தாண்டவம், 8. உக்கிர தாண்டவம், 9. பூதத் தாண்டவம் 10. பிரளயத் தாண்டவம் 11. புஜங்க தாண்டவம், 12. சுத்த தாண்டவம் ஆகியவையாகும்.

1. ***ஆனந்தத் தாண்டவம்*** : சிவபெருமான் சகல பிரபஞ்சமும் தேவர்கள் முதற்கொண்ட சகல ஜீவராசிகளும், தோன்ற ஆடியது. இது ஜதி நாட்டியம் என்றும் பெயர் பெறும்.

2. ***சந்தியா தாண்டவம்*** : தேவர்களுக்கு வாத்தியங்களும், வாத்தியங்களுக்கு இசைந்த தொனிகளும் உண்டாகும் பொருட்டு தேவதைகள் நிமித்தம் ஆடியது. கீத நாட்டியம் என்றும் இது பெயர் பெறும்.

3. ***ஸ்ருங்கார தாண்டவம்*** : ஜோடிதம் முதலிய ஆறு அம்சங்களும், பாவ, ராக, தாளம், நவரஸமும் உண்டாகும் பொருட்டு பார்வதிதேவி நிமித்தம் ஆடியது. இது பரதநாட்டியம் எனலாம். இதை மங்களகரமான காலத்தில் செய்கிறவர்களும், இதைப் பார்ப்பவர்களும் இக, பர, சுக போகங்களை அடைவர் எனக் கூறப்படுகிறது.

4. ***திரிபுர தாண்டவம்*** : பூமி முதல் ஆகாயம் வரையும் அனைத்தும் தன்வசமாக்கிய திரிபுர அசுரர்கள் நிமித்தம் ஆடியது. இது பேரணி நாட்டியம் எனப் பெயர் பெறும்.

5. ***ஊர்த்துவ தாண்டவம்*** : இறைவன் தனது செவியிலிருந்து நழுவிய குழை என்னும் ஆபரணத்தை தனது பாதத்தால் எடுத்து முன் போல அணிந்து, காளியின் நிமித்தம் ஆடியது அது. சித்திர நாட்டியம் எனப் பெயர் பெறும்.

6. ***முனி தாண்டவம்*** : பதஞ்சலி முனிவர் தன் வாயினால் தாளங்கள் காட்ட அதற்கிணங்க, பதஞ்சலி, வியாக்யபாதர் நிமித்தம் ஆடியது சதானந்தத் தாண்டவமாக சிதம்பரத்தில் ஆடியது. இது லய நாட்டியம் எனப் பெயர் பெறும்.

7. *ஸம்ஹாரத் தாண்டவம்* : யமனை வதைக்கும் பொருட்டு மார்க்கண்டேயர் நிமித்தம் ஆடியது இது முகசான நாட்டியம் எனவும், சிம்ம நாட்டியம் எனவும் பெயர் பெறும்.

8. *உக்கிர தாண்டவம்* : அடியவர்களைக் காக்கும் பொருட்டு கயாசுரன் நிமித்தம் ஆடியது. இது ராஜ நாட்டியம் எனப் பெயர் பெறும்.

9. *பூதத் தாண்டவம்* : மான், மழு, திரிசூலம், டமருகம் முதலிய படைகளை ஏற்றுக் கரியுரி போர்த்துத் தாருகாவன ரிஷிகளுக்கு அனுக்ரகம் செய்யும் பொருட்டு ஆடியது இது பட்டல நாட்டியம் எனப் பெயர் பெறும்.

10. *பிரளய தாண்டவம்*: சர்வத்தையும் தன்வயமாக்கி ஆடியது. இது பாவைக் கூத்து எனப்படும்.

11 *புஜங்க தாண்டவம்* : ஆலால விஷம் உண்ணும் பொருட்டு ஆடியது. இது பித்த நாட்டியம் எனப்படும்.

12. *சுத்த தாண்டவம்* : வன ரிஷிகளின் பொருட்டு ஆடியது. இது பாதசாரி நாட்டியம் எனப்படும். இது அகமார்க்கம், அந்தரங்க நடனம் எனச் சாரங்கத் தேவர் குறிப்பிடுகின்றார்.

இப்படித் தெய்வமே பல திருநடனங்கள் புரிந்து ஆட்கொள்ளும் அருளாற்றலை வியந்து நாம் திரு நடராஜப் பெருமானைக் கூத்தப் பிரான் எனப் போற்றிப் புகழாமல் நமக்கேது பெருமை:—

"தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப் பதத்தே உற்ற திரோதம் முத்தி
நான்ற மலர்ப் பதத்தே நாடு"—என்றும்,

"மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டு மலம்
சாயை அமுக்கியருள் தானெடுத்து—நேயமுடன்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவை தாழுத்தல்
தானெந்தை யார் பாதம் தான்"—என்று

உண்மை விளக்கமும் கூறுகின்றது.

திரு நடராசப் பெருமானின் சிறப்பு அவர் ஆடும் கூத்தே தான். அதன் பயன், மாயையை அகற்றும், வினைகளை தீர்க்கும், மலங்களை நீக்கும், முக்குணங் களைச் சீராக்கும், மோட்சத்தை அளிக்கும் என்பதைக் காட்டுகிறது.



# 11. மகேஸ்வரன்

ஆண்டவனது உருவத் திருமேனிகளான மகேசன், ருத்திரன், மால், அயன் என்ற நான்கினுள் முதலாவதும், தலை சிறந்ததுமான உருவகத் திருமேனியைக் கொண்டவரே இவர். பரமேஸ்வரன் என்றும் இவரைச் சொல்லலாம்.

இந்தத் திருஉருவத்தின் அமைப்பு : பிறையினையும், கங்கையையும், சடாமுடியினிடத்தே தரித்து பாம்பினை மாலையாக உடையவராய் திருநீறு அணிந்து சக்தியை ஒருபாகத்தில் அமர்த்தி ரிஷபவாகன ஆருடராய் இருப்பவரே மகேஸ்வரர். இவருக்கு வாகனமாக நந்தியென்ற வெள்ளை மாடு அமைந்திருக்கின்றது.

நந்தி ஒரு தர்ம சொருபம். இது சமம், விசாரம், சந்தோஷம், சாது சங்கமம் ஆகிய நான்கு சத்துவகுணங்களையும், நான்கு கால்களாகக் கொண்டுளது. நந்தியின் மீது பரமேஸ்வரன் ஆரோகணிப்பது இந்த நான்கு வகை ஆத்ம குணங்களையும் கொண்ட உயிர்களிடத்தில் மாத்திரமே இறைவன் எழுந்தருளி நிறைவாக வீற்றிருந்து அருள் செய்பவர் என்னும் தத்துவத்தை விளக்குவதாகிறது. நந்திபகவான் வாகனம்.

மகேஸ்வரன் திருவெண்ணீறு அணிந்து கொண்டிருக்கிறான். வெண்ணீறு இவ்வுலக வாழ்க்கை நிலையாமையையும் உணர்த்தி அருள் ஒளி நல்கி எல்லாவுயிர்களுக்கும் நற்பயன் அளிக்க இவர் வெண்ணீறு அணிந்திருக்கிறார். இவரைப் போல் நாமும் வெண்ணீறு அணிந்திருக்க

வேண்டும் என்பதை இது காட்டுகிறது. நாம் நெற்றியில் அணிந்து கொள்ளும் ஒவ்வொரு நேரத்திலும் மேற்கண்ட கருத்தை மனதில் மிக ஆழமாகப் பதிய வைத்து, ஐம்புலன் களாலும் தீமையைச் செய்யாது ஒழித்து பிறவித் துன்பத்தை அறுக்கும் இறைவனின் பேராற்றலை நினைந்து வணங்க வேண்டும்.

இறைவனின் அணிகலன்களில் அரவம் ஒரு முக்கிய இடமாகும். அரவம் அணிவதால் உலகத்தினை இயக்கும் தன் து சக்தியை உணர்த்துகின்றார். அது எப்படி எத்தனை நாட்கள் சென்றாலும் உணவுக்கான எதையுமே விரும்பாமல், காற்று ஒன்றையே உட்கொண்டு, இருக்கு மிடம் அசையாமல் தன் நிலையிலேயே இருந்து வருகிறதோ, அதுபோல இறைவன் தன் உலகைக் காக்கும் நிலை ஒன்றையே கருத்தில் கொண்டு என்றும் நிலைத்து நிற்கிறார் என்பதை உணர்கிறோம்.

மகேஸ்வரன் சடையில் கங்கையைத் தரித்திருப்பது பகீரதன் தன் மூதாதயரை எழுப்ப தேவகங்கா நதியைத் தன் தவ வலிமையால் பூலோகத்திற்குக் கொண்டு வரச் செய்தான். அது வருகின்ற ஆவேசத்தில் உலகத்தை அழித்து விடக்கூடும் ஆதலால் அதனை இறைவன் தன் சடையில் வாங்கிச் சிறிது உலகத்திற்குத் தந்தான் என்பது வரலாறு. இதனை மேலாகப் பார்ப்பவர்கள் கங்கையை இரண்டாம் மனைவியாகத் தரித்துக் கொண்டான் என்பர். உற்று நோக்கினால் உலகில் நீரால்தான் எங்கும் எதிலும் பரிசுத்தமடைகிறது. இறைவனைத் தரிசிக்காத விடத்து உயிர்கள் பரிசுத்தமடையாது என்பது இதன் தத்துவக் கருத்தாகும்.

அடுத்த அணிகலன் சந்திரப்பிறை. இதை அணிந்து கொண்ட காரணம்: தக்கனால் அடைந்த பெருஞ் சாபத் தினை நீக்கிச் சந்திரன் இறைவனை அடைக்கலம் புகவே, அந்தச்சாபத்தினை நீக்கிக் காத்து ரட்சித்து சடைமுடியில்

உயர்ந்த இடத்தில் வைத்துக் கொண்டான். இதன் உட் கருத்து இறைவன் தன்னை அன்புடன் அடைந்தவர்களைக் காத்து இரட்சிப்பான் என்றே உணர்த்துகிறது.

மகேஸ்வரனின் சக்தியாக விளங்குபவள் உமா மகேஸ்வரி, அதாவது பார்வதிதேவி. உலகமாதாவாகிய உமையம்மை மலரும் மணமும் போலவும், தீயும் வெம்மை யும் போலவும், மணியும் ஒலியும் போலவும் என்றும் பிரிவின்றி மகேஸ்வரரோடு நிலைபெற்றிருக்கின்றாள் ஆகையால் இவர் உமாமகேஸ்வரமூர்த்தி என்று அழைக்கப்படுகின்றார். சிவத்தினின்று பிரிவற்று விளங்கும் உமையாள், சிவனார் ஐந்தொழில் இயற்று வதற்குத் துணையாய் நிற்கிறாள். ஐவகைச் சக்தியாக உருவெடுத்துள்ள துணையாவாள், பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி எனத் தாமும் உடனாவாள்.

மகேஸ்வரர் நான்கு தொழில்களைச் செய்கின்றார். அவை, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் ஆகியனவாம். உமையம்மையும் இத்தொழில்களுக்குத் துணை நின்று, உயிர்களின் உய்திக்குத் துணை செய்து காப்பாள்.

மக்களும் இவ்வுலக வாழ்வில் வளம் பெற்று, இன்புற்று, பேரானந்த நிலையை அடைவதற்கு உமாமகேஸ்வர பூஜை செய்து வணங்கி வழிப தல் வேண்டும், என்னும் உண்மையைத் திருஞான சம்பந்தர் தனது பாடலில் விளக்குகிறார்.

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலைக
கண்ணில் நல்லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே—

# 12. திருமால் என்னும் மஹாவிஷ்ணு

பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளில் இவர் படைத்தல், காத்தல், ஆகிய இரு தொழில்களை மேற்கொண்ட மூர்த்தியாவார்.

ஆலயங்களில் வைஷ்ணவ சம்பரதாய முறைகளில் வழி பாடுகள், பூஜைகள் நடத்துவார்கள். மகாவிஷ்ணுவான வரை நின்ற திருக்கோலமாகவும், இருந்த திருக்கோல மாகவும், கிடந்த (படுத்த) திருக்கோலமாகவும் மூன்று நிலைகளில் வைத்து வணங்கப்படுகிறார். இவரது திரு மேனியின் அமைப்பும், படைக்கலன்களும் அறிந்து கொள்வோம்.

மகாவிஷ்ணுவின் இடது கையில் பாஞ்சசன்யம் என்னும் சங்கினையும், வலது கையில் சுதர்ஸனம் என்னும் சக்ராயுதத்தினையும், ஒரு கையில் கௌமோதகி என்ற கதையினையும் மற்றொரு வலது கை அபயஹஸ்தமாகவும் அமைந்திருக்கும். மார்பில் கௌஸ்துப மணியினையும், நெற்றியில் ஸ்ரீவத்ஸம் என்ற மறுவினையும் கொண் டிருககிறார்.

பாஞ்சசன்யம் என்னும் சங்கு உண்டாக்கும் ஓங்காரப் பிரணவ ஒலியால் இறைவன் எல்லாவற்றையும் படைக் கிறான். ஸுதர்சனம் என்னும் சக்கரம் அநீதியை அழிக் கவும், நீதியைக் காக்கவும் இருக்கும் ஆயுதம் என உணர்த் துகிறது. பெருமானின் கதாயுதம், ஓயாத சஞ்சலம் நிறைந்த உலக வாழ்வாகிய பெரும் போரில் நம்மைத்

தாக்கும் சக்ர, துக்கமான அம்புகளைத் தடுக்கும் வல்லமை கொண்டு மக்களாகிய அடியார்களை காக்கும், குறிப்பாக அமைந்துள்ளது.

அடுத்து, திருமாலின் அபயகரம், எல்லா உலகங்களையும், எல்லாவுயிர்களையும் இறைவன் காத்து ரட்சிக்கிறான், என்பதை உணர்த்தும் - கௌஸ்துபமணியோ பிரபஞ்சத்துள் ஆடும் பரஞ்ஜோதியாகிய அந்தராத்மாவை உணர்த்துகிறது. நெற்றியில் அணிந்துள்ள ஸ்ரீ வத்ஸமானது எல்லாவற்றிற்கும் ஆ தா ர மா கி ய பிரதானம் என்னும் தத்துவத்தை உணர்த்துகிறது.

இவரது திருஉருவமேனி மூன்று நிலைகளில் ஒன்றான படுத்த நிலையில், சங்கு, சக்கரம், பதுமம் ஆகியவற்றுடன் ஆதிசேஷன் என்னும் ஐந்து தலையுள்ள பாம்பின் மீது படுத்துக் கொண்டு ஒருவிதமான உறக்கத்தில் இருப்பதாகவும், ஆதிசேஷன் படமெடுத்துக் குடை பிடிப்பதாகவும், கால் பக்கத்தில் மகாலட்சுமி என்ற அம்பிகை அமர்ந்திருப்பதாகவும் அமைந்த, கிடந்த திருக்கோலம். இவரது உறக்கம், நாம் உறங்குவது போல் அல்ல. இது யோக நித்திரை அல்லது அறிதுயில் என்று பெயராகும்.

அதாவது எல்லாவற்றையும் தம்முள் அடக்கி அவற்றையும், நன்றாய் நடைபெறச் செய்து, தாம் எவ்வித பந்தமும், கவலையும் அற்றவராய் ஆனந்தமாய்க் கிடப்பதாக உணர்த்துகிறது. இந்த அனந்த சயனக் கோலம் உலகெங்கும் நிறைந்திருக்கிறார் என்பதை நமக்கு உணர்த்துகிறது.

ஆதிசேஷன் என்னும் பாம்பு இறைவனுக்குப் படுக்கையாக அமைந்தது ஏனென்றால், பாம்பு தாமச குணமாகிய கோபத்தினையுடையது. சேஷன் என்பதற்கு, மீதமாய் நிற்பது என்று பொருள். அதாவது பிரளய காலத்தில் எல்லாம் அழிந்து போக மீதியாய் நிற்பது, என்பதாக,

தாமச குணத்தினை இது உணர்த்தும். இந்தத் தாமச குணமும், இறைவனுக்குக் கீழ்ப்படிந்து அடங்கிக் கிடக்கும். ஆதலால் இஃது இறைவனது படுக்கையாக அமைந்தது. முக்குணங்களையும் அடக்கி ஆள்வது இறைவனால்தான் முடியும் என்பதை உணர்வோம்.

ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் திருப்பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பது, எவ்விதமெனில், பால் சுத்தமான பொருள். களங்கமற்ற பளிங்கு போன்ற வெள்ளை நிறத்தையுடையது. இந்த விதமான பரிசுத்த இடங்களே இறைவன் அமர்ந்து அருள் புரிவதற்கு ஏற்ற இடங்கள் இத்திருப்பாற்கடல், குறிக்கிறது. இது மட்டுமல்லாமல் மற்றய கடல்கள் எல்லாம் எப்பொழுதும் ஆடிக்கொண் டிருக்க பாற்கடல் மட்டும் அலைகளால் ஆடாமல் சலன மற்றிருக்கிறது. இது சாந்தத்தைக் குறிக்கிறது. இக் கடலில் பரமன் படுத்திருக்கும் தன்மை, சஞ்சலமற்ற சாந்த குணமுடையவரது உள்ளத்தில்தான் இறைவன் குடி கொண்டிருப்பான் என்ற தத்துவத்தை உணர்த்துகிறது. மேலும் பரந்தாமனது திருவருள்பால் அமுதமயமாகப் பொங்கித் ததும்பிப் பூரணமாய், ஏக உருவாய் கிடப்பதை யும் உயிர்கள் திருவருளையடைந்து பரமானந்தத்தை அனுபவிக்க வேண்டும் எனக் குறிக்கிறது.

பரவெளியில் பரமன் நித்தியமாய்ப் பரந்து கிடக்கின் றான் என்ற உயர்ந்த தத்துவத்தை ஒட்டிப் பார்க்கின்ற போது பாற்கடல் பரவெளியாகிறது. அப்படி எங்கும் ஏகமுற்று நீங்கா நிலையில் இருக்கும் திருமாலின் திருநாமங்களைப் பற்றி விரிவாகத் தெரிந்து கொளவோம். திருநாம மகிமை மேலான புகழ்பரப்பி நிற்கும் பன்னிரண்டு திருநாமங்கள் :—

1 கேசவன், 2. நாராயணன், 3. மாதவன், 4 கோவிந்தன், 5. விஷ்ணு, 6. மதுசூதனன், 7. திரிவிக்ரமன், 8. வாமனன், 9. ஸ்ரீதரன், 10. ஹ்ருஷீ

தேசன், 11. பத்மநாபன், 12. தாமோதரன் என்பனவாம். இவற்றால் ஸ்ரீமந் நாராயணனைச் சேவிக்க வேண்டும். திருநாமவிளக்கம்—

1. **கேசவன்:** இப்பெயர்தான் முதல் திருநாமம். கேசு என்ற அசுரனை வதம் செய்து உலக சந்தோஷத்தை நிலைபெறச் செய்தார். அப்படித் துன்பங்களை அகற்றுவதாலும், தலையில் கேசத்தைச் சுருண்ட விதமாகக் கொண்டிருப்பதாலும் கேசவன் எனப்பெயர் பெற்றார்

2. **நாராயணன்:** இப்பெயர் இரண்டாவது திருநாமம். உலகில் உள்ள அறிவுள்ள, அறிவற்ற அனைத்துப் பொருள்களுக்கும் ஆதாரமாக விளங்குபவன் எனப்படும்.

3. **மாதவன்:** இத்திருநாமம் மூன்றாவதாகும். மா, என்றால் திருமகளைக் குறிக்கும். மாதவன் என்றால் அத் திருமகளை மார்பில் அணிந்து கொண்டிருப்பவன் எனப் பெருமை பெறும்.

4. **கோவிந்தன்:** நான்காவதாக அமைந்த திருநாமம் சற்று விரிவான பொருள் கொண்டது. கோ—என்பது பசு, வாக்கு, பூமி, என வரும். இந்த மூன்று சொற்களாலும் போற்றப்படுபவன், பிரளய காலத்தில், பூமியைக் காத்தவன், பசுக்களை மேய்த்தவன், வாக்குத் தவராதபடி திரௌபதியின் மானம் காத்தவன், எனப் பொருள்படும்.

5. **விஷ்ணு:** இப்பெயர்- எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நின்றுள்ளவன், எங்கும் வியாபித்துள்ளவன், என்னும் பொருள் கொண்டது.

6. **மதுசூதனன்:** இப்பெயர் ஐம்புலன்களையும் காப்பவன் என்றும், மது என்ற அரக்கனை சம்ஹாரம் செய்தவன் என்றும், தர்மம் நிலைநாட்டி அடியார்களுக்கு விரோதிகளை அழித்துக் காப்பவன் என்றும் பொருள் படும்.

7. ஸ்ரீ விக்ரமன் : தனது மூன்றடியால் உலகங்களை அளந்தவன் எனப் பொருள்படும்.

8. வாமனரூபன் : இப்பெயர் குள்ளமான வடிவம் கொண்டவன். இது திரிவிக்ரமனான நிலைக்கு நிலைப் பெயர். இந்திரனுக்குத் துன்பம் வருவதற்கு முன் நாம் காக்கவில்லையே என்ற வருத்தத்தால் இறைவனது திருமேனி குருகிவிட்டது என இப்பெயர் பெற்றார்.

9. ஸ்ரீதரன் : இப்பெயர், திருமகளைத் தனது நெஞ்சில் தரித்தவன் என்று பொருள்.

10. ஹ்ருஷிகேசன் : புலன்களான பஞ்சேந்திரியங்களை தன் ஆணைப்படி நடத்தி வருபவன் என்பதாகும்.

11. பத்மநாபன் : இப்பெயர் நாபிக் கமலத்தை உடையவன்; உலகையெல்லாம் படைத்தவன் என்பதைக் காட்டுகிறது இவனது நாபிக் கமலம்.

12. தாமோதரன் : இப்பெயர் ஒரு காரணமாக வந்தது. தாமோதரன் என்றால் தழும்பு உள்ளவன் எனப் பொருள். கண்ணனாக இருக்கும்போது வெண்ணெய் திருடியதற்காக யசோதை உரலில் கயிற்றினால் கட்டிப் போட்டாள். அந்த அடையாளமாகத் தன் வயிற்றில் கொண்ட தழும்பு உள்ளவன் தாமோதரன் எனப் பொருள்படும்.

மேற்கண்டவாறு ஸ்ரீமந் நாராயணன் என்னும் திருமால், திருநாமங்கள் பன்னிரண்டு தாங்கி பல உயர் குணங்களை வெளிப்படுத்துகின்றார்.

திருமால் என்னும் பெருமாள் கோயில்களில் நடைபெறும் ஷோடஸ உபசாரங்கள் தனிச் சிறப்புக் கொண்டவை. 1. கை கழுவ நீர் அளித்தல், 2. திருவடி கழுவ நீர் அளித்தல், 3. மும்முறை மந்திர நீர் அருந்த அளித்தல், 4. ஆசனமளித்தல், 5. நீராட்டல், 6. பரிவட்டம்

சமர்ப்பித்தல், 7. நறுமணப் பொருள் இடுதல், 8. மலர் சூட்டுதல், 9. நறுப்புகை வாடை சமர்ப்பித்தல், 10. திருவிளக்கு ஆட்டுதல். 11. தளிகை கண்டருளப் பண்ணுதல், 12. கற்பூர ஆராத்தியெடுத்தல், 13. கவரி வீசுதல், 14. விசிறி வீசுதல், 15. மரியாதைக்குடை சமர்ப்பித்தல், 16. தட்டொளி (கண்ணாடி) காட்டுதல் என்பனவாம்.

திருமால் என்னும் பரமாத்மா தான் கொண்ட தொழில்களின் நிமித்தம் பல அவதாரங்களை எடுத்து அருள் புரிந்தார். அங்ஙனம் எடுத்த அவதாரங்களுள் தசாவதாரம் என்று பத்து அவதாரங்களைப் பற்றிய சிறப்பினைக் காண்போம். அவதாரம் என்றாலே இறங்கி வருதல் எனப் பொருள்படும். அதுவும் அடியார்கள் மீது கொண்ட கருணையினால், பரம் பொருள் இறங்கி வந்து அற்புதங்களைச் செய்து ஆட்கொள்வதே அவதார புருஷரின் சிறப்பு. அத்தகைய தெய்வ வடிவங்களின் சிறப்பைக் காண்போம்:—1. மச்சாவதாரம். 2. கூர்மாவதாரம், 3. வராகவதாரம், 4. நரசிம்மாவதாரம் 5. வாமனாவதாரம், 6. பரசுராமாவதாரம், 7. இராமாவ்தாரம், 8. கிருஷ்ணாவதாரம் 9. பலராம அவதாரம், 10. கல்கி அவதாரம், எனத் திருமாலின் அவதாரப் பெருமைக்கு நிகரேது.

பெருமானின் பெருமைகளைப் போற்றிப் பரவுதற்குக் காரணமான இவரது 5 நிலைகளும், 4 கல்யாண குணங்களுமேயாகும். ஐந்து நிலைகளான 1. பரம், 2. வியூகம், 3. விபவம், 4. அந்தர்யாமித்துவம், 5. அர்ச்சாவதாரம் ஆகியவையே அடுத்து நான்கு கல்யாண குணங்களான 1. வாத்ஸல்யம், 2. சௌலப்யம் 3. சௌசீல்யம். 4. சுவாமித்வம், என்பனவாம்.

அடுத்து நிலைகளைக் காண்போம்—

1. *பரம்* :—என்பது—இவரது இருப்பிடமான வைகுந்தத்தில், முக்தர்கள், கருடன்,. அனந்தன், முதலிய நித்யர்கள் சூழ எழுந்துள்ள நிலை.

2. *வியூகம்* :—என்பது முத்தொழில் புரியவும், உலக மக்களுக்கு நன்மை தந்து, தீமை போக்கிப் பாதுகாத்து அருளவும், வாசுதேவனாக திருப்பாற்கடலில் விளங்கும் நிலை.

3. *விபவம்* :—என்பது பெருமான் எடுக்கும் அவதார நிலை.

4. *அந்தர்யாமியம்* :—என்பது எல்லாப் பொருள்களிலும் எல்லா உயிர்களிடத்தும் உட்கலந்து நின்று, இயக்குபவன் ஆக இருக்கும் நிலை.

5. *அர்ச்சாவதாரம்* :—திருமேனி, திருநாமம் கொண்டு ஆலயங்களிலும், அன்பர்கள் இல்லங்களிலும் விருப்பத்திற்கு ஏற்ப எழுந்தருளும் நிலை— ஆக இவ்வைந்தும், வாத்ஸல்யமான— குற்றங்களையும் குணமாக்கிக் கொள்ளும் அளவற்ற அன்புக் குணம்—

சௌலப்யமான— எல்லோரும் தன்னைப் பற்றும் எளியனாயிருக்கும் குணமும்,

சௌசீல்யமான— உயர்ந்தவன், தாழ்ந்தவனோடு கலக்குங்கால் தன்னுயர்வையும், அவனது தாழ்வையும் நெஞ்சில் சிறிதளவும் கொள்ளாமல் புரையறக் காக்கும் பண்பான குணம். சுவாமித்துவமான— தனக்கு மேற்பட்ட தலைவன் இல்லாத் தானே எல்லாப் பொருள்களுக்கும் தலைவனாகிய நிலை என்னும் நான்கு குணங்களும் கொண்டு விளங்குகிறார் பெருமான். இவரது அருளால், அருளிச் செயல்கள் செய்யும் ஆழ்வார்கள் பன்னிரண்டு பேராவர்.

1. பொய்கை ஆழ்வார், 2. பூதத்தாழ்வார், 3. பேயாழ்வார், 4. திருமழிசையாழ்வார், 5. நம்மாழ்வார், 6 குலசேகராழ்வார், 7. பெரியாழ்வார், 8. தொண்டரடிப் பொடியாழ்வார், 9. திருப்பா ணாழ்வார், 10. திருமங்கையாழ்வார், 11. ஆண்டாள், 12. மதுரகவி ஆழ்வார், எனப் பன்னிருவர். மற்றும் ஆச்சார்யர்களாக விளங்குபவர்கள், இருபத்து நான்கு பேராவர்.

1. நாதமுனிகள், 2. உய்யக்கொண்டான், 3. மணக்கால் நம்பி, 4. ஆளவந்தார், 5. பெரிய நம்பிகள், 6. இராமானுஜர், 7. எம்பார், 8. பராசர பட்டர், 9. நஞ்சீயர், 10. நம்பிள்ளை, 11. பெரிய வாச்சான் பிள்ளை, 12. வடக்குத் திருவீதிப்பிள்ளை, 13. பிள்ளை லோகாசாரியார், 14. எங்களாழ்வான், 15. நடாதூர் அம்மான், 16. கிடாம்பி அப்புள்ளார், 17. நிகமாந்த மகாதேசிகன், 18. திருவாய்மொழிப் பிள்ளை, 19. மணவாள மாமுனிகள், 20. பெரிய நம்பிகள் முதலான ஐந்து ஆச்சாரியார்கள். (இவர்கள் இராமானுஜரை அணுகிப் பொருள் கேட்டறிந்தவர்கள் ஐந்து பேராக, இருபத்து நான்கு ஆச்சார்யர்கள் ஆவர்.)

திருமாலின் தேவிமார்கள்— ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய இருவர்.



# 13. சக்திகள்

''சக்தி இல்லையேல் சிவமில்லை'', ''சர்வம் சக்தி மயம்'' என்றெல்லாம் பேசப்படுகிற பழமொழிகளுக்கேற்ப உலகில் இயங்கும் எல்லாச் செயல்களுக்கும் ஒரு சக்தி உடனிருந்தாற்றுகிறது. அச்சக்தியை மீறினால், நடப்பதே வேறு.

உலக இயக்கங்களில் எப்பொழுதும் பரம்பொருளோடு துணை நின்று செயல்படுகின்ற சக்தியை நாம் ஒரு பெண் தெய்வம் என்றே ஏற்று வழிபடும்போது சக்தியின் கருணை வடிவம் நம்மை உணரச் செய்கிறது. மனிதருக்கும் மற்ற ஜீவராசிகளுக்கும் இறைவன் தரும் சக்தியினை வைத்துப் பார்க்கிறபோது இறைவனுக்கும் ஒரு முடிவில்லா ஆற்றல் சக்தி இருககிறதையும் நமக்கு உணரும் வண்ணம் அவர் காட்டுகிறார்.

கடவுளின் அருளாகிய அந்தச் சக்தியினையே மனைவியென வைத்து வழிபடுகிற முறை நமக்குத் தோற்றுவிக்கிறார். வழி வழியாக இவ்வாறு தலைவன் தலைவி என சிவம் சக்தியாக வழிபடும் முறையை நாம் கண்டிருக்கிறோம். சூரியன் தன் ஒளியைக் கொண்டு இருளை ஓட்டி வெளிச்சத்தைக் கொடுப்பது போல இறைவனும் உயிர்களின் மயக்கத்தை தன் சக்தியைக் கொண்டு ஒழித்து மெய்யறிவினைத் தருகின்றான். விளக்குச் சுடரில் தீ இருக்கிறது; சூடுமிருக்கிறது. தீயிலிருந்து சூட்டினையோ சூட்டிலிருந்து தீயினையோ பிரிக்க முடியாதபடி ஒன்று சேர்ந்திருக்கிறது.

அவ்வாறே ஆண்டவனிடமிருந்து சக்தியையோ, சக்தியிடமிருந்து ஆண்டவரையோ பிரிக்க முடியாது என்பதை சிவஞான சித்தியார் நன்கு காட்டுகிறார்.

"அருளது சக்தியாகும், அரன்தனக்கு அருளையின்றித்
தெருள் சிவமில்லை, அந்தச் சிவமின்றி சக்தியில்லை."

என்றவாறு,

முன் கூறியது போல உலகவுயிர்கள் அனைத்தும், ஆண் பெண் தன்மையில் இருந்தே உலக போகம் நுகர்ந்து உலக வளர்ச்சி பெறுகின்றன ஆண்டவனும் தன் அருளையே பெண் வடிவமாகக் கொண்டு, போக மூர்த்தியாய்த் தோன்றி உயிர்கள் அனைத்தையும் போகத்தை அனுபவிக்கச் செய்து ஆனந்தமடைகிறார். அவர் அம்மை அப்பனாக இருந்து உலக சிருஷ்டி செய்தலினாலேயே, உயிர்கள் வாழ்கின்றன அதனாலேயே நாம் எந்த மூர்த்தங்களாயினும், ஒன்று சேர்த்தே திருநாமங்களைச் சொல்லிப் பழக்கப்பட்டு விட்டோம் என்பது ஒரு மரபு நிலையே. அது மாற்றவும் முடியாது என்பது கண்கூடு. உதாரணமாக—

சிவம் சக்தி, லட்சுமி நாராயணன், சீனிவாச பத்மாவதி, மீனாட்சி சுந்தரேஸ்வரர், இராதாக் கிருஷ்ணன், வள்ளி தெய்வானை முருகன், சித்தி புத்தி விநாயகர், சீதாராமன், பார்வதி பரமேஸ்வரன் என்பன போன்ற பல திரு அவதாரங்களை அந்தந்தச் சக்திகளோடு அழைக்கின்றோம்.

ஒரு புகைப்படக்காரன், ஓர் உருவத்தைப் பதிக்க முற்படும் போது, முதலில் நெகடிவ், அடுத்தது பாஸிடிவ் என்றுதான் செய்ய முடியும். ஒன்று மட்டும் தனித்திருந்தால் நிஜ உருவத்தைக் காண முடியாது. மின்சார சக்தியை எடுத்துக் கொண்டால் அதனுள் இரண்டு வகையான சக்திகள் இருப்பதைக் காண்கிறோம். அதிலும்

ஒன்று பாஸிடில் மற்றொன்று நெகடில் என இரண்டு வகை உண்டு எனச் சொன்னாலும் இரண்டும் தனித் தனியே பிரிந்து நின்று விளக்கை எரிய வைக்க முடியாது. இரண்டும் ஓரிடத்தில் சேர்ந்தால்தான் முடியும் என்பது போல உலக இயக்கத்திற்கு ஆண் பெண் அமைப்பே முழுமையாக்கும்.

ஆலயங்களில் அதிகாலை முதல் இரவு வரை அம்மை அப்பன் என்றபடி தனித்தனியாக ஆலய மூலஸ்தானங் களில் பூஜைகள் செய்து வழிபட்டாலும் இரண்டு சக்தி களையும பிரித்தேவைப்பது முறையாகாது என்பதனால், இரு சகதிகளையும் ஒன்று சேர்த்து வைத்து அன்றை நாளில் முடிவாக வணங்கும் நேரம் இரவுக் காலம். ஒன்று சேர்த்து வைக்கும் இடம் பள்ளியறை என்ற தனியிடத் தில் இரண்டு உற்சவமூர்த்தங்களையும் வைத்து வணங்கி அன்றைய பூஜை முறைகளை முடித்துக் கொள்கிறார்கள்.

ஆண்டுக்கொரு முறை திருக்கல்யாண வைபவம். நடத்தும் தத்துவம் யாதெனில், ஆண்டவன் நித்திய கல்யாண குணரூபம் உடையவன். மக்களுக்கு ஓராண்டு என்பது இறைவனுக்கு ஒரு நாள் என்றாகும். நாம் ஆண்டுக் கொருமுறை கல்யாண உறசவம் செய்யும் போது அவன் நித்திய கல்யாண ரூபியாகின்றான். போக வடிவில் இறைவனை இருக்கச் செய்வதே நாம் உய்யும் வழியாகும்.

ஆலயங்கள் தனித்தனி தெய்வங்களுக்காக ஏற்பட்டு அந்தந்த மூர்த்தங்களை வழிபடும் போது அந்தந்த சக்தி களின் அருளைப் பெறுகின்றோம் சிவன் சம்பந்தப்பட்ட ஆலயங்களில் சேவார்த்திகள் அவரவர்களின் அருளைப் பெறுகின்றோம். சக்திகள் சம்பந்தப்பட்ட ஆலயங்களில் சேவார்த்திகள் சக்திகளின் அருளைப் பெறுகின்றோம்.

இப்படித் தனித்தனியே இயங்கிவருவது அந்தந்த சமயத்தில் இடத்தின் புராண காரணமாகவோ, அல்லது,

இறைவனோ, இறைவியோ தன் இஷ்டமாகவோ (சுயம்பு வடிவில்) எழுந்திருக்கக் கூடும். அவ்வாரான காரண அவதாரங்களில் மகிமை, மற்றும் பேராற்றல்களை உணர்ந்து வழிபடுதல். அவ்வப்போது நமக்குக் கிடைக்கும் பேரருளே நாம் உய்வதற்கு வழியாகும்.

மூலசக்தியிலிருந்து தோன்றிய பராசக்தி, லட்சுமி தேவி, சரஸ்வதிதேவி, இம்மூவரும் கிரியாசக்தி, இச்சா சக்தி, ஞானசகதி ஆகிய வடிவங்களாகத் தோன்றி உலகில் வீரம், செல்வம், கல்வி ஆகிய செல்வங்களை வழிபடுகிற வர்களுக்கு வழங்குகிறார்கள்.

ஒருசமயம் மூவரும் ஒன்று சேர்ந்து, துர்க்கா தேவி யாக் அவதாரம் எடுத்து மகிஷாசுரனை வதம் செய்து உலகில் மகிழ்ச்சியை நிலை நாட்டினர். இந்த மூன்று தேவிமார்களும் விரதமிருந்து வெற்றி கொண்ட நாட்களே நவராத்திரி நாட்கள் என்பர். முதல் மூன்று நாட்கள், பராசக்தி துர்க்கையின் பூஜைக்காலம். இரண்டாம், மூன்று நாட்கள் லட்சுமி துர்க்கையின் பூஜைக்குறிய காலம். மூன்றாம் மூன்று நாட்கள், சரஸ்வதி துர்க்கையின் பூஜைக்குரிய காலம் ஒன்பது நாட்கள் முடிந்து பத்தாவது நாள் துர்க்கையின் வெற்றிக் காலம் விஜயதசமி என்று கொண்டாடலாம்.

மேற்படி கொண்டாடி வரும் விழாக்களுக்கெல்லாம் பொது அம்சம் சக்தி பூஜைதான். சக்தியை சாத்வீக முறையில் பூஜிப்பது போல மற்ற குணங்களான ராஜச, தாமச முறைகளிலும் பூஜிப்பதும் உண்டு பலனைக் கருதாத முறையில் சக்தி பூஜை செய்வது, சக்தியையே வழிபடும் சாக்தம் என்ற சமயத்தையே விரும்பிச் செய்கிற வர்கள் மற்றவர்கள் பலனைக் கருதி, வெற்றி வேண்டும், பொருள் வேண்டும், வேறு விருப்பங்கள் எல்லாம் நிறை வேற வேண்டும் என்று சக்தி பூஜை புரிவதும் உண்டு. இத்தகைய விழா மக்கள் விழாவாக நவராத்திரி விழா

கொண்டாடப் படுகின்றது. ஒன்பது நாட்களிலும், சக்தியைப் பல விதங்களில் அலங்கரித்துக் கொலு வைத்துக் கொண்டாட வேண்டும்.

*முதல் நாள் விழா :* மதுகைடபர்கள் என்ற அசுரர்களின் வதத்திற்கு அடிப்படைக காரணமாக உதவிய தேவியை அபயம், வரதம், அட்சமாலை, புத்தகம் ஆகியவை கொண்டு குமாரி வடிவமாக அலங்கரித்துப் பூசிப்பது சிறந்தது.

*இரண்டாம் நாள் :* மகிஷாசுரனையும் அவனது படைகளையும் வதஞ் செய்யப் புறப்பட்ட ராஜராஜேஸ்வரி துர்க்கையின் கோலமாக அலங்கரித்துப் பூசிப்பது மிகவும் சிறந்தது.

*மூன்றாம் நாள் :* மகிஷாசுரவதம் செய்த தேவியை, சூலமும், கையுமாக மகிஷனின் தலை மீது அமர்ந்திருக்கும் துர்க்கையின் கோலமாக அலங்கரித்துப் பூஜை செய்வது மிகவும் நலம் கொடுக்கும்—ஏனெனில் தீமையை அழித்து மகிழ்ச்சியை தரும் கல்யாணி துர்க்கையாக அமர்கிறாள்.

*நான்காம் நாள் :* வெற்றித் திருக் கோலத்தில் அமர்ந்த துர்க்கையின் வடிவமாக அலங்கரித்து வழிபடுவது ஜயதுர்க்கை என்றும், ரோகிணி துர்க்கை என்றும் சொல்வர். அதாவது சிங்க ஆசனத்தில் அமர்ந்து துன்பங்களும் இடையூறுகளும் நீங்கியதால் தேவர்களும், முனிவர்களும், மந்திரங்களினால் ஸ்தோத்திரம் செய்வதை அங்கீகரித்து அனுக்ரகம் செய்வதால் ரோகிணி துர்க்கை ஆகிறாள்.

*ஐந்தாம் நாள் :* கம்பன் என்ற அசுரன் வந்து சொல்வதைக் கேட்கும் கோலத்தில் சுகாசனத்தில் அமர்ந்திருக்கும் வடிவத்தில் அலங்கரித்துப் பூசிப்பது நல்லது.

*ஆறாம் நாள் :* தூம்பரலோசன வதத்திற்கு உரிய தோற்றமாக சண்டிகா தேவி கோலத்தில் அமர்ந்திருக்கும்

விதமாக பூசைகள் செய்யலாம். இக்கோலத்தில் தேவியின் கைகளில், அட்சர மாலையும், கபாலமும், தாமரைப் பூவும், பொற் கலசமும், நெற்றியில் பிறை அணிந்தும் காண்கிறாள

*ஏழாம் நாள் :* சாம்பவி துர்க்கை என்று சொல்வர். இவள், சண்டமுண்டர்கள் என்ற அசுரர்களை வதைத்த பின், பொற் பீடத்தில் அமர்ந்து வீணை வாசிக்கும் கோலமாகப் பூசிப்பது—வடிவம்—ஒரு காலைக் கீழே தாமரையில் ஊன்றிக் கொண்டிருக்கிற விதத்தில் அலங்கரித்துப பூசைகள் செய்வது

*எட்டாம் நாள் :* ரத்த பீஜன் என்ற அசுரனை வதைத்து துர்கை கருணை நிறைந்த கோலத்துடன் அணிமா முதலிய அஷ்ட சக்திகள் புடைசூழ கையில் கருப்பு வில்லுடன், காட்சி தரும கோலததில் அலங்காரம் செயது பூசிப்பது மிக நல்லது

*ஒன்பதாவது நாள் :* இன்று இவள் கையில் வில், பாணம, அங்குசம, சூலம் ஆகியவை கொண்டு காமேசுவரி என்ற சிவ சக்தி கோலமாக அலங்கரித்துப் பூசைகள் செய்யலாம். சுப்பதி சும்ப வதத்திறகுப் பின் அமைந்த தோறறமாக வடிவமைத்துப் பூசைகள செய்யலாம்

இப்படியாக துர்க்கையின ஆட்சிக் காலம், லட்சுமியின் ஆட்சிக் காலம், சரஸ்வதியன் ஆட்சிக் காலம் ஆக ஒன்பது நாட்களும் அசுரர்களை வதம் செய்து உலகத்தன் அனைவருக்கும் சந்தோஷததை ஏற்படுத்தி, துன்பங்கள ஓடியதாக மகிழ்ந்து பத்தாவது நாள் ஒரு வெற்றி விழா வாகக் கொண்டாடுவது பூசலாக மக்களுககும் மிகமிக நல்லது.

மகா சம்ஹார காலத்தின் முடிவில் ஆண்டவன் மீண்டும் உலகைப் படைக்க விரும்புகிறான். அப்போது அவனது உள்ளம் இச்சை என்ற சக்தியைத் தோற்றுவிக்

கிறது. பிறகு ஆண்டவன் படைக்கும் விதங்களை அறிந்து கொள்ள ஞான சக்தியைத் தோற்றுவிக்கிறது. இந்த இச்சையும், ஞானமும் தோன்றியபின் கிரியா சக்தி தோன்றி அதன் செயல்பாட்டில் உலகத்தைப் படைத்து விடுகிறான். இக்கருத்தை விளக்குவதே நவராத்திரி விழா.

தேவி பூஜையில் நாம் மிகவும் ஆர்வம் வைத்துச் செய்தால் அகங்காரத்தைக் குறைக்க உதவும். ஆணவம் ஒழிந்தே போகும். தேவியின் திருப் பெயர்களை அடிக்கடி உச்சரித்துக் கொண்டால் தேவி பூஜையில் மிகவும் விருப்பம் உண்டாகி பக்தி பெருகும் அவன் திருவடி களைத் தியானித்தால் சகல வித நன்மைகளும், வெற்றி களும் உண்டாகும்.

இத்தகைய முயற்சியில் யாரொருவர் ஈடுபடு கின்றாரோ அவர்கள், கலிதோஷத்தினின்றும் விடுபட்டு அச்சமில்லாது வாழ்வர் என்பது பற்றி தேவி மகாத்மியம், தேவி பாகவதம் எடுத்துரைக்கிறது திருமூலரும் தாமது திருமந்திரத்தில் இககருத்தை வலியுறுத்தி, சக்தியின் தத்துவத்தை எடுத்துக்காட்டி நானூறு பாடல்களில் விளக்கியிருக்கின்றார்.

சக்தியைப் பற்றி மேலும் பல விதங்களில் புகழ்பாடிப் போற்றி வழிபடலாம். அவரவர் விரும்பிய விதங்களில் எல்லாம் தோன்றி மக்களை மகிழ்வித்து அருள் புரிவாள் என்பதும் திண்ணம். ஆகவே தான் தங்கள் இஷ்ட தெய்வமாக சக்தி கோயில் கட்டிக் கொண்டாடுவார்கள்.

ஊரின் எல்லைக் காவல் தெய்வமென வனபத்ரகாளி என்றும், ஊரின் மையத்திலிருந்து எல்லோரையும் காக்கும் அங்காள பரமேஸ்வரி என்றும், கொடிய நோய்கள் வரா வண்ணம் காத்து ரட்சிக்க ஒரு மாரியம்மன் என்றும் பெயர் சூட்டி மகிழ்ந்து பலவிதங்களிலும் கொண் டாடுவர். அவை எல்லாமே மகா சக்தியின் அம்சங்களே தான்.

நாட்டில் பருவங்களின் மாற்றத்தால் நிறைய வேறுபாடுகள் தோன்றுகின்றன. அதில் ஒன்று இன்பமாகவும் முடியும் இல்லை துன்பமாகவும் முடியும். எது தோன்றினாலும் அதில் மக்களுக்குச் சில பாதிப்புகளும், உண்டாகவே செய்கின்றன. அவை நீண்ட நாட்கள் நீடிக்கவும் செய்கின்றன மக்கள் சகித்துக் கொள்ள முடியாத நிலையில் சக்தி தெய்வங்களை நாடிச் செல்கின்றார்கள்.

உதாரணமாக மழை நீண்ட நாட்கள் பெய்யாது விட்டு விட்டால், மிகுந்த வரட்சி தோன்றி, செல்வச் செழிப்பு அற்றுப் போய் தண்ணீருக்கும், உணவுக்கும், பல பொருட்களுக்கும் தட்டுப்பாடு ஏற்பட்டு, அதனால் உள்ள நலமும், உடல் நலமும் குன்றி, வியாதிகள் பீடித்துத் துன்பப்படும் போது எல்லாவற்றிற்கும் தேவை மழை என்று கருதி சக்தியை வேண்டி மாரியம்மன் என்று பெயர் வைத்துத் தெய்வத்தை ஸ்தாபனம் செய்து கொண்டாடுகிறார்கள் இது போன்று பல காரணங்களில் சக்தியைச் சேவிப்பது வழக்கம்.

ஒரு கோயில் சிலைக்கு சக்தியளிப்பதும் அக்கோயில் முக்கிய மூர்த்தத்தின் வடிவமும் அதன் ஆற்றலும் ஆக உருவெடுத்துச் சிலை மூலம் ஆன்மீக ஒளி வழங்குவதும், பரம்பொருளாகிய சிவ சக்தியின் ஆற்றல்தான். அதிலிருந்து அன்னையாகிய சக்தியே உருவெடுகின்றாள். படைப்பில் ஈடுபட்டவள் எனும் நிலையில் கௌரியென்று அறியப்படுகின்றாள். விளையாட்டின் வடிவமாகிய நிலையில் குமாரியென்று அழைக்கப்படுகின்றாள். அங்ஙனம் தெளிவுபடுத்திக் காட்டுவது தொன்மை வாய்ந்த ஸ்கந்த புராணத்தில் விளக்கப்பட்டுள்ளது. பரம்பொருள் தான் அனைத்தும் என்னும் எண்ணத்துடன் சக்தியை வழிபட்டால் உள்ளிருக்கும் ஆண்டவனையே அவர் அடைகிறார்.

# 14. சமயச் சின்னங்கள்

இந்து மத விதிகளின்படி நாம் எந்தெந்த சமயங்களைத் தழுவியிருக்கின்றோமோ அச்சமயங்களை உணர்த்துவதற்கும, அதன் அருமை பெருமைகளை உணர்ந்து கொள்வதற்கும், அதனதன் சின்னங்களை அவசியம் அணிந்து கொள்ள வேண்டும். அப்படி அணிந்து கொள்வதால் நமககு மேலான பலன்கள் கிடைக்கின்றன என்பதில் ஐயமில்லை.

இந்து மதத்திலுள்ள ஆறு சமயங்களான, காணாபத்யம், சாக்தம், கௌமாரம், சௌரம், சைவம், வைஷ்ணவம், அல்லது அதன் உட்பிரிவுகளாயினும், மற்றும், வேறுபல தனித்தனி தெய்வங்களைப் பின்பற்றி வழிபடுதல், இப்படி எந்தவிதமாயினும் அதனதன் சின்னங்களை அணிந்து வழிபட வேண்டும்.

சமயச் சின்னங்களை அணிதல் ஓர் அடையாளத்திற்காகவும், தெய்வத்தின்பால் பக்தி வைத்துப் 'போற்றப்படுவதற்கும் ஒரு சான்றாகும். மேலும் பல உயர்ந்த கருத்துககளை சின்னங்களின் மூலமாகத் தெரிந்து கொண்டு பின்பற்றி வழிபடுவதற்கு ஆதாரமாகவும் அமையும். சின்னங்களை அணியும்போது ஒரு தெய்வத்தன்மை, உயர்ந்த நோக்கம், பெருந்தன்மை, தூயஉள்ளம், இவை பிரதிபலிக்கும். அப்போது, காண்பவர்கள் பிறரும் நம்மைப் பின்பற்றும் நல்ல எண்ணம் தோன்றும். இத்தனைக்கும் மேலாக சமயச் சின்னங்கள் சிறந்த மருத்துவ குணங்கொண்டு நன்மை பயக்கின்றது என்பதை அறிந்தவர்கள் மறுக்க மாட்டர்கள். இச்

கருத்தை சமயச் சான்றோர்கள் பல பாடல்கள் மூலம் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

விபூதியை நெற்றியில் பூசிக் கொள்வதால், தலைவலி, நெற்றி வேர்வை, இவற்றை நீக்கும். உடல் முழுதும் பூசிக் கொள்வதால் விஷ சுரம், நரம்புக் கோளாறுகள், சதை வலி இவையனைத்தும் நீங்கும். பாண்டியனுக்கு வெப்பு நோய்கண்ட காலத்தில், திருஞான சம்பந்தர் திருநீற்றைப் பூசி நோயைப் போக்கினார் சமண சமயத்திலிருந்து சைவத்திற்கு மாறிய திருநாவுக்கரசரும், ஒரு நல்ல மன மாற்றம் அடையச் செய்தது இத் திருநீறுதான். திருநீற்றின் மகிமை நிறைய உண்டு. சந்தனம் பூசிக் கொள்வதால் ஏற்படும் நல்ல உடல் குளிர்ச்சி, அதன் வாசனை மனதிற்கு இன்பம்.

நெற்றியின் புருவ மத்தியில் பல நரம்புகள் ஒன்று சேர்வதால் அவைகளுக்கு வெப்பம் அதிகம ஏற்படா திருக்கவே சந்தனப் பொட்டு வைக்கிறோம். குங்குமம் ஒரு சக்தியின் எடுத்துக் காட்டு. வைணவ சமயத்தில், திருமண் என்னும் நாமம் அணிவதால், நல்ல குணங்கள் கிடைகின்றன. கண் புருவத்தில், கண் இமையில் விககம் அல்லது கண் கட்டி ஏற்பட்டால் நாமத்தை நல்ல தண்ணீரில் நனைத்து உறைத்து குளம்பை விக்கத்தின் மேல் தடவ நீங்கும். கண் கட்டி உடைந்து குணமாகும்.

எல்லோரும் நல்ல குங்குமத்தை நெற்றியில் அணிவ தால், நெற்றிக்கு அழகும், பொலிவும், சாந்தத்தன்மையும், ஏற்படுகிறது. குங்குமத்தைச் சுமங்கலிகள் அணிவதால் ஒரு கற்பின் பாதுகாப்புக் கவசமாக அமைகிறது. இதனை தற்போது எச்சமயத்தாரும், பிற மதத்தவராயினும் பெண்கள் அணிந்து கொள்கிறார்கள்.

நமது முகத்தில் வலது கண் சூரியனாகவும், இடது கண் சந்திரனாகவும் இருக்கிறார்கள். ஆகவே ஒன்று உஷ்ண

மாகவும், மற்றொன்று குளிர்ச்சியாகவும் இருக்கும். இரண்டையும் சமநிலைப் படுத்த குங்குமம் அல்லது சந்தனம் புருவ மையத்தில் அணிந்து கொள்வது நல்லது.

''ஆறில்லா ஊருக்கு அழகு பாழ். நீறில்லா நெற்றி பாழ்'' என்ற முதுமொழிக் கேற்ப பல நன்மைகளைக் கருத்தில் கொண்டு நம் சமயச் சின்னங்களைக் கூசாமல் அணிந்து கொள்வது மிகவும் சிறந்தது.

விபூதி தயாரிக்கும் முறை, அணிந்து கொள்ளும் விதம், ஆகியவை காண்போம்—

ஒரு இளம் பசு புல் வெளியில் சுத்தமான இடத்தில் போடும் சாணம், நல்ல உடல் உள்ளதும், வால், காது, கொம்பு இவைகளில் குற்றமில்லாததுமான, வெள்ளை நிறப் பசுவின் சாணம், இன்னும் பங்குனி மாதத்தில் நெற் கதிர்களை மேய்ந்த பசுக்களின் சாணம், இவையே விபூதிக்கு ஏற்றதாக எடுத்துக் கொள்ள வேண்டும். கர்ப்பமுற்றதும், மலட்டுத் தன்மையுள்ளதும், கன்று ஈன்று பதினைந்து நாட்களுக்குள்ளும், கன்று இறந்தது மான பசுக்களின் சாணம் ஆகாது.

இந்த விதமாக நல்ல சாணம் தேர்ந்தெடுக்க நல்ல நாட்களையும் பார்க்க வேண்டும். அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தி, அஷ்டமி, முதலிய திதிகளில் எடுத்துக் கொள்ள வேண்டும். மேற்படி சாணத்தை பூமியில் விழாதபடி எடுத்துப் பஞ்ச கவ்யம் விட்டுப் பிசைந்து, உலரவிட்டு, அக்னியில் எரித்து குற்ற மற்ற புதுத் துணியில் வடிகட்டிப் புதுப் பானையில் அல்லது பட்டுத் துணியில் செய்த பையில் போட்டு வைத்துக் கொண்டு தேவைக்கேற்ப அவ்வப்போது எடுத்துப் பயன் படுத்த வேண்டும்.

**திருநீறு அணிந்து கொள்ளும் விதம் :**

திருநீறு ஆன்மாக்களை இரட்சித்துக் காப்பதால் இதற்கு இரட்சை எனவும், தீவினைகளை நீறாக்குவதால் இது திருநீறு எனவும், அழியாத செல்வம், அருட்செல்வம் கொடுப்பதால் விபூதி எனவும், மலமாயைகளைக் கழுவுவ தால் இது சாரம் எனவும், ஞானத்தை அளிப்பதால் இது பசிதமெனவும், இது வியாதியைப் போக்கி, உள்ளம் தெளிய வைப்பதால் மருந்தெனவும், பல்வேறு விதங்களில் சொல்ல மேன்மை கொள்கிறது.

"நீடலுறுந் தீவினையனைத்து நீற்றிடலானீறென்றும்
வீடில் வெறுக்கை தருவினால் விபூதியென்று முயிர்தோறுங்
கூடுமல மாசினை கழுவுங்குணத்தாற் சாரமென்றும் மட
மோடவளர் சோதியைத் தரலாற் பசிதமென்று

என வரும் பாடல் தெள்ளென விளக்குகிறது.

விபூதி நிறங்களில், வெண்ணிற விபூதி எல்லா நன்மை களையுங் கொடுக்கும். செந்நிற விபூதி கீர்த்தியையும், புகைநிற விபூதி ஆயுளையும். பொன்னிற விபூதி போக மோக்ஷத்தையும் கொடுக்க வல்லது. இத்தகைய மேன்மை கொண்ட திருநீற்றை நாம் நாள் தோறும், குளித்த பின் காலையிலும், மாலையிலும், பூஜைக்கு முன்னும், பின்னும், ஆலய வழிபாட்டிற்கு முன்னும், இறைவன் திரு உருவத்திற்கு முன்பும், உணவு அருந்தும் முன்னும், இரவு தூங்குவதற்கு முன்னும், திருநீறைக் கையில் எடுத்து மூன்று விரல்களிலும் படும்படியாகத் தடவி நிலத்தில் சிந்தாதபடி, தலையை மேல் நோக்கிப் பார்த்து அணியும் போது "சிவ சிவ" என்று சொல்லிக் கொண்டு அணிதல் வேண்டும்.

திருநீற்றை நெற்றியில் அணிவதோடு, உடலில் பல பாகங்களிலும் அணியலாம். சமய தீக்ஷை முறைப்படி விபூதி தரிப்பதுதான் தகுதியுடையது. எனினும் ஒரு-

குருவிடம் உபதேசம் பெற்றுக் கொள்ளும் வரை, திருநீற்றைத் தண்ணீரில் குழைத்து "ஈசான மூர்த்தியே" நம எனச் சொல்லி சிரசிலும், "தத்புருஷ வக்த்ராய நம" எனச் சொல்லி நெற்றியிலும், "அகோர ஹிருதயாய நம" எனச்சொல்லி மார்பிலும், வாமதே குஹ்யாய நம எனச் சொல்லி கொப்பூழிலும், ஸத்யோ ஜாத மூர்த்தயே நம எனச் சொல்லி புஜங்களிலும், கை முட்டுகளிலும், மணிக் கட்டுகளிலும், இடுப்பிலும், கால் மூட்டுகளிலும், இடுப் பிலும் பூசிக் கொள்ளுதல் வேண்டும்.

இப்படி திருநீற்றின் மகிமை, திருநீறு செய்யும் விதம், அணிந்து கொள்ளும் முறை, ஆகியவை அறிந்தோம். மேலும், அதன் தத்துவத்தைச் சற்றுப் பார்ப்போம்—

உலகில் மானிடராய்ப் பிறந்து, கோடானு கோடி சுகங்களை அனுபவித்தாலும் முடிவில் யாவராயினும், ஒருபிடி சாம்பல் ஆவது திண்ணம். உலக வாழ்க்கையில் தூய்மையுடனும், இறைப் பற்றுடனும் இருந்தால் வீடு பேற்றையும் அவனது திருவடிப் பேற்றையும் அடையலாம் என எடுத்துக் காட்டும் விதமாகத் திருநீறு உள்ளது. இது சைவ சமய சம்பந்தமாக மட்டுமல்லாது எல்லர் நலனுக்கும் பயனளிக்கிறது. பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பெருமான் வாழ்த்துப் பாவில்,

"வைய நீடுக; மாமழை மன்னுக;
மெய்விரும்பிய அன்பர் விளங்குக;
சைவநன்னெறி தாந்தழைத் தோங்குக;
தெய்வ வெண் திருநீறு சிறக்கவே!"

என்று கூறுகிறார்.

**அடுத்த, மிக முக்கிய சமயச்சின்னம் உருத்திராக்ஷம்:**

உருத்திராட்சம் என்பது திரிபுர சம்ஹார காலத்தில் இறைவனின் கண்களிலிருந்து ஆனந்த அமிர்த விந்து

வாகப் பூமியில் விழுந்தது. அதனின்றும் உண்டானது ருத்திராட்சம். இது ஒரு சிறந்த சிவக்கோலம் தரும். இதை அணிந்து கொள்வதால் பாவங்கள் தீரும். மோட்சம் கிடைக்கும். ஞானம் பிறக்கும். ருத்திராடசம் ஒரு மணி முதல் 108 மணிவரை கோர்த்து மாலையாக அணிவது நன்மை. ருத்திராட்ச வகைகளில் ஒருமுக மணி முதல் பதினாறு முக மணிவரை உண்டு. கழுத்தில் அணிய முப்பத்திரண்டு மணிகோர்த்த மாலை அணிவது சிறப்பு. ஏகமுக ருத்திராட்சம் ஜபத்திற்குப் பயன்படும்.

ருத்திராட்சத்தின் பெருமையும், பயனும் பல உண்டு. நல்ல ருத்திராட்சத்தை உரைத்துப் பார்த்தால் பசும் பொன் நிறமாக ஒரு மாற்றிருக்கக் காணலாம. இதனுள் மனித உடலுக்கு நன்மை பயக்கும் சில பொருட்கள் இருக்கின்றன. இதற்கும் மருத்துவ குணங்கள் உண்டு. குளிக்கும் போது தண்ணீர் இதன் மேல்பட்டு இதன் நீர் உடலில் படுவதால் உடல் புனிதமடைகிறது. இதை உரைத்துப் பாலோடும் சேர்த்து உட்கொள்ளலாம். ருத்தி ராட்சம் அணிந்தவரை எந்தவித பேய் பிசாசு, பூதங்களும் அணுகாது. பில்லி சூனியம் அண்டாது என,

''இலங்கு மாமணி உருத்திர அக்கர் ஒன் றணியில்
விலங்கெயிற்று வெம்பூதங்கள் முதலிய மேவா''

ஒரு பாடல் கூறுகிறது. ஆகவே, மேற் சொன்ன அத்தனை சமயச் சின்னங்களையும், அறிவியல் ரீதியா கவும், பக்தி ரீதியாகவும் அவரவர் விருப்பத்திற்கேற்ப அணிந்து கொள்ளுதல் ''ஒரு இந்துவின் கடமை'' என ஏற்று இறைவனுக்குப் பாத்திரர்களாவோம்.

# 15. திருவிழாக்கள்

திருவிழாக்கள் என்பது எந்த ஒரு இறைவனை, இறைவியை முன்னிட்டுக் கொண்டாடினாலும் அதில் முக்கியத்துவம், அவர்களை மகிழ்விப்பது. அதன் மூலம் அருள் பெறுவது. அடுத்தது மக்கள் எல்லோருக்கும் ஒரு வித மகிழ்ச்சியைக் கொடுக்கும் நிகழ்ச்சியாகவும் அமைகிறது. அதனால் தானோ, "குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்தில்..." என்று வந்ததோ!

கோயில்களில் கொண்டாடினாலும், பொதுவாகக் கொண்டாடினாலும், உத்ஸவம் என்பது ஒருவித உற்சாகத்தை ஊட்டுகிறது உள நூலின்படி மக்கள் உள்ளங்கள், பல துன்பங்களை மறந்து, மகிழ்வதற்கு இது போன்ற மாற்று நிகழ்ச்சிகளில் ஈடுபடும் போது மனமும், உடலும் ஒரு வித புதிய உற்சாக நிறைவு பெறுகிறது. இதை முன்னிட்டே நமது ஆகமங்களில் திருவிழாக்களை வகுத்துள்ளார்கள் என்றே சொல்லலாம்.

திருவிழா என்றதுமே எல்லோருக்கும் அதில் ஈடுபடு வதற்கு ஒருமைப்பாட்டு உணர்வுகள் தோன்றுகின்றன. ஒன்று போலச் செய்யும் செயல்கள், பிரதிபலிக்கின்றன, வாழும் இடங்கள், வீடுகள், வீதிகள், சுற்றுப்புற சுத்தம் செய்தல், அலங்காரம் செய்தல், நிழல் பந்தல்கள் அமைத்தல், தோரணங்கள் கட்டுதல் இவை போன்ற வையும்,

பெண்களின் பங்காக வெள்ளையடித்தல். வண்ணம் பூசுதல், வாசலில் கோலம் போடுதல் இறைவனுக்குப் படைக்கும் நைவேத்தியமாக இன்சுவைப் பலகாரங்கள்

செய்தல், சுவாமியின் திருவீதி உலாவின் போது புத்தாடைகள் உடுத்தியும், வழிபடுவதற்குக் குத்து விளக்குகள் ஏற்றியும், பூர்ண கும்ப மரியாதை செய்து வரவேற்றல் போன்றவற்றை மேற்கொள்வார்கள்

அந்த நாட்களில் மக்களின் பொழுது போக்கு, மன மகிழ்ச்சி, கேளிக்கை, இவற்றிற்காக, இசை நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகள் செய்தல், நாடகங்கள் நடத்துதல், மற்றும் பக்தியில் உங்களுடன் ஒன்றுபட்டு விட்டோம் என்பது போல, கடவுளின் அவதார உருவங்களை வேடங்களாகத் தரித்துக் கொண்டு ஆடிப்பாடி வருதல் ஆகியவைகளை மேற்கொண்டு இறைவனையும் மகிழ்வித்துத் தாமும் மகிழ்தல் என்னும நிறைந்த நல்லெண்ணத்தில் பெரு மகிழ்வு கொண்டு ஈடுபடுவார்கள்.

கோயில்களில் உற்சவத்திற்காக சுத்தம் செய்தல், மண்டபங்களை அலங்கரித்தல், திருவீதி உலாவிற்காக சுத்தம் செய்தல், சுவாமியின் வாகனாதிகளைச் சுத்தம் செய்தல், புதுப்பித்தல், சீர்படுத்தல், விழாக்கோல தோரணங்கள் கட்டுதல், விழாத் துவக்க கால பூஜைகள் செய்தல் போன்றவற்றை சம்பந்தப்பட்டவர்கள் விழாவிற்கு ஆயத்தமாதல், கங்கணம் கட்டுதல், பட்டம் கட்டுதல் ஆகியவற்றையும் செய்து துவக்குவார்கள்.

திருவிழாக்களைக் கொண்டாடும் காலம், ஒரு நாள் முதல் பத்து அல்லது இருபத்தொரு நாட்கள் வரை நீடிக்க வாய்ப்புகள் உண்டு. பெரிய திருவிழாக்களை பிரம்மோத்சவம் என்றும், மகோத்சவம் என்றும் சொல்வர். திருவிழாக்கள் குறிப்பாக தமிழ் மாதந்தோறும் ஆண்டு முழுவதும் நடைபெற்றுக் கொண்டேயிருக்கின்றன திருக்கோயில்களில்.

1. சித்திரையில் சைத்ரோத்சவம், 2. வைகாசியில் விசாக உத்சவம், 3. ஆனியில் திருமஞ்சன உத்சவம்,

4 ஆடியில் ஆடிப்பூரம் உத்ஸவம், 5. ஆவணியில் விநாயக சதுர்த்தி உத்ஸவம், 6 புரட்டாசியில் நவராத்திரி உத்ஸவம், 7. ஐப்பசியில் தீபாவளி, 8 கார்த்திகையில் ஜோதி உத்ஸவம், 9 மார்கழியில் மாணிக்க வாசகர் உத்ஸவம், தனூர் பூஜை, 10 தை மாதத்தில் பூச உத்ஸவம், 11 மாசியில் மக உத்ஸவம், மகாசிவராத்திரி 12 பங்குனியில் பங்குனி உத்திர உத்ஸவம், இன்னும் பல உத்ஸவங்களும் இடையிடையே நடத்தப்படும். இப்படி ஆண்டு முழுவதும் விழா செய்வதால் ஆண்டவருக்கு சந்தோஷமும், அதனால் மக்களுக்குப் பல நன்மைகளும் கிடைக்கின்றன.

நன்மைகள் பரவலாக எல்லோருக்கும் விருத்தியாகவே உத்ஸவம் நடத்தியாக வேண்டும். உத்ஸவம் என்ற வார்த்தையில் உத்—என்பது உயர்வான—ஸவ—என்பது சிருஷ்டி நன்மைகள் விருத்தியாக. நாட்டுக்கும் மக்களுக்கும் மிகுந்த பலன்களை சேர வைக்க வேண்டும் என்பதாலும், உத்ஸவங்கள் செய்ய வேண்டும் என்றும், கிரக பீடை, வியாதிகள், ஆயுள் குறைவு, மக்கள் அழிவு, இவை ஏற்படும் என்பதால் அவற்றைத் தணிக்க வேண்டும் என்பதாலும் உத்ஸவங்கள் செய்ய வேண்டும் என்று ஞானோத்திர ஆகமம் எடுத்துரைக்கிறது. மற்றும் காரணாகமம், காமிகாகமம், வாதுளாகமம் முதலியனவும் எடுத்துரைக்கின்றன.

கோயில் உத்ஸவங்கள் ஆகம விதிப்படி ஆறுவிதங்கள் உண்டு. அவை. 1. சைவம்—இது ஒரு நாள் கொண்டாடுவது. இது பொதுவான நம்மை தரும். 2. சாத்விகம்- இது மூன்று நாட்கள் கொண்டாடுவது. இது சிவபெருமானை சந்தோஷிப்பது. 3. பார்த்திபம். இது ஐந்து நாட்கள் கொண்டாடுவது. இது போகத்தைக் கொடுக்கும் 4. ஸ்ரீகரம். இது ஏழு நாள் கொண்டாடுவது. சிவத்திற்குப் பிரியமானது 5 சௌக்யம். இது ஒன்பது

நாட்கள் கொண்டாடுவது. இது மிகுந்த சாந்தியைக் கொடுக்கும் 6 பைத்ருகம்—இது பன்னிரண்டு நாள் கொண்டாட்டம். இது எல்லா வகையிலும் வலிமையைக் கொடுக்கும். இதற்கு மேலும் பதின் மூன்று நாள்-சர்வ சித்தியையும், பதினைந்து நாட்கள், நல்ல செல்வ ககங்களை அளிக்கும். பதினேழு நாள் மிகுந்த புண்ணியம் கிடைக்கும். பத்தொன்பது நாள் எல்லாப் பாபங்களும், நிவர்த்தியாகும். இருபத்தொரு நாள் திருவிழாவானது பூலோகத்தில் எல்லோரையும் காக்கின்ற உயர்ந்த பலன் கிடைக்கும்.

ஆலயங்களில் திருவிழாக்களை ஆரம்பிக்கு முன் சுத்தப் படுத்தல், துவக்க கால பூஜைகள் செய்தல், என முன் பக்கத்தில் மேலெழுந்த வாரியாகச் சொல்லப் பட்டது. இப்போது ஆகமத்தின்படி செய்ய வேண்டியவை முதலில் வாஸ்து பூஜை என்பதைச் செய்ய வேண்டும். அதன் பின் கொடியேற்றம். இவை முக்கியமாகச் செய்த பின் தொடர்ந்து கிரமப்படி மற்றவற்றைச் செய்ய வேண்டும்.

**வாஸ்து பூஜை:** வாஸ்து பூஜை செய்வது வாஸ்து புருஷனுக்கு சாந்தி செய்வதால், விழாக் காலங்களிலும், அதன் பின்னும், மற்ற பூதங்களாலும், பிசாசுகளாலும் இன்னும் பல துஷ்ட தேவதைகளும் இடையூறு செய்ய மாட்டா. இதனாலேயே வாஸ்து சாந்தி பூஜை செய்வது அவசியம். இந்த வாஸ்து புருஷன் யார், அவன் எவ்வாறு இருப்பான் என்பதைப் பார்ப்போம்.

—வாஸ்து வரலாறு—

முன் ஒரு காலத்தில் அந்தகாசுரன் என்பவன் சிவபெருமானிடம் போர் செய்ய அவரின் எதிரில் வந்து ஆர்ப்பரித்தபோது பெருமான் மிகுந்த கோபங் கொண்டார். அந்த மிகுந்த கோபாவேசத்தால் ஏற்பட்ட

வியர்வைத் துளிகள் கீழே விழுந்தன. அதிலிருந்து ஒரு பூதம் தோன்றியது. அந்தப் பூதம் சிவபெருமானின் எண்ணத்தை அறிந்து கொண்டு அந்தகாசுரனைக் கொன்று அவனது உதிரத்தைக் குடித்து திருப்தி யடைந்தது.

அதன் பிறகு அப்பூதம் பெருமானைக் குறித்து மிகுந்த தவம் செய்து தவத்தின் பயனாக சிவனாரிடமிருந்து நிறைந்த வரங்களைப் பெற்று, அதன் பலத்தால் மூன்று உலகங்களையும் அழிக்க ஆரம்பித்தது. மூவுலகிலும் இருந்த தேவர்கள் பயந்து நடுங்கி, ஓடி பெருமானிடம் சரணடைந்து வேண்டிக் கொண்டனர். அந்தப் பேராபத்திலிருந்து காக்க கருணை கொண்டு அந்த பூதத்தை அடக்குவதற்கு அதிபலர் என்ற ருத்திரரையும், எட்டு மாயா பாசங்களையும் சிருஷ்டித்தார். அந்த அதிபலர் எட்டு மாயா பாசங்களாலும் பூதத்தைக் கட்டிக் கீழே தள்ளினார். அந்த பூதம் படுத்து விட்டது. அதன்பின் பிரம்மன் முதலான ஐம்பத்து மூன்று தேவர்களையும் பூதத்தின் உடலின் மேல் பாதம் முதல் தலைவரையும் வாசம் செய்யப் பணித்தார். தன் உடம்பில் ஒவ்வொரு இடத்திலும் தேவர்கள், தேவதைகள் வசிக்கச் செய்ததால் பூதம் எழுந்திருக்க முடியாமல் பூமியில் அப்படியே சாய்ந்து விட்டது. அப்படியே உறங்கியும் விட்டது. இன்றும் உறங்கிக் கொண்டிருக்கிறது.

தேவதைகள் அந்த பூதத்தின் உடலில் வசிப்பதால் அது வாஸ்து புருசன் என்றாகி விட்டது. அந்த வாஸ்து புருஷன் இடது கையை மடித்து அதன் மேல் தன் தலையை வைத்துத் தூங்கிக் கொண்டும், சில குறிப்பிட்ட நாட்களில் சில நாழிகை மட்டும் கண் விழித்துப் பார்ப்பான். அதுவுமின்றி அவன் இடம் மாறியும் கிடப்பான். அப்படி அவன் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை ஒரு திசையில் தலை வைத்துக் கால் நீட்டியும் கிடப்பான்.

அவன் கண் விழித்த போது பார்வை பட்டால், அந்தத் திசையில் வீடோ, அல்லது கோயில் ஸ்தலங்களோ கட்டக் கூடாது. அவன் தூங்கும் நிலை வருடத்தில், புரட்டாசி மாதம் முதல் கார்த்திகை வரை கிழக்கே தலை வைத்து மேற்கே கால் நீட்டியும், மார்கழி மாதம் முதல் மாசிவரை தெற்கே தலை வைத்து வடக்கே கால் நீட்டியும், பங்குனி மாதம் முதல் வைகாசி வரை மேற்கே தலை வைத்து கிழக்கே கால் நீட்டியும், ஆனி மாதம் முதல் ஆவணி வரை வடக்கே தலை வைத்து தெற்கே கால் நீட்டியும் படுத்திருப்பான். இவ்வாறு அவன் மாறிக் கொண்டேயிருப்பதால் அவனுக்குச் சாந்தி பூஜை செய்ய எந்தத் திசையில் இருக்கிறான் என அறிந்து அதன்படி பூஜைகள் செய்வது பலன் அளிக்கும். இது பதவின்யாசம் என்று பெயர் பெறும்.

திருவிழாவிற்காக முன்தினம் மண்ணெடுத்தல், வித்திடுதல் என்று ஆரம்பிப்பது இறைவன் சிருஷ்டியை குறிக்கின்றது. இதன்பின் கொடியேற்றம் செய்தல் நடைபெறுகிறது. அதன் விளக்கம் காண்போம்.

கொடி ஏற்றுதல், எந்தக் கோயிலில், எந்தத் தெய்வத்திற்காக நாம் விழா எடுக்கின்றோமோ அந்தத் தெய்வத்திற்குறிய வாகனச் சின்னத்தை, ஒரு கொடியில் அதாவது புதிய துணியில் மங்களகரமாக மஞ்சள் பூசி எழுதி கோயிலின் எல்லைக்குள் தெய்வ சன்னதியின் எதிரில் ஏற்கனவே இருக்கும் துவஜஸ்தம்பம் என்னும் கொடி மரத்தின் பக்கம் ஒரு நீண்ட குச்சி போன்ற மரத்தில் ஏற்றுவார்கள்.

கொடியேற்றம் செய்தாலே ஊர் மக்களுக்கு, கோயில் திருவிழா ஆரம்பம் என அறிவித்த விதமாக எல்லோரும் தெரிந்து கொள்வார்கள். கொடியேற்றம் முப்பத்து முக்கோடி தேவர்களையும் சுலோகங்கள் சொல்லி அழைப்

பார்கள். கொடியேற்றம் கோயிலில் நடந்து விட்டால் ஊரில் மற்றவர்கள் வேறு எந்தக் காரியங்களையும் மனிதர்களுக்காகச் செய்ய மாட்டார்கள். திருவிழாக் காலம் முடிநத பின்னரே எதையும் செய்து கொள்வர். நாம் இறைவனுக்கு முக்கியத்துவம் கொடுத்து வழிபட்டால் கொடியேற்றம் போல நம்மையும், நாம் இருக்கும் நிலையில் இருந்து மேல் ஏற்றுவார் என்பதே கொடியேற்றத்தின் தத்துவமாக விளங்குகிறது.

காரணாகம விதிப்படி முதல் நாள் கொடியேற்றத்திலிருந்து ஒவ்வொரு நாளும் உஷத்காலம் முதல் அர்தத ஜாமம் வரை ஆறுகால பூஜைகள் செய்து கொண்டாடி முடித்து அந்தந்த நாள் மிருகயாத்திரை எனப்படும். அந்தந்த தெய்வங்களுக்குரிய வாஹனாதிகளில், சுவாமி அம்பாள் இவர்களை திருவீதி உலாவந்து முடிவாக மூர்த்தங்களைப் பளளியறைப் பூஜைகள் செய்து முடிப்பார்கள்.

**வாஹனாதிகளில் திருவீதிஉலா வருதலின் முக்கியம் :**

விருத்திக்கிரம சிருஷ்டிக் கோலம் என்னும் தத்துவப்படி விருக்ஷ வாகனத்தில் உலா வருதல். மரத்தின் இலை, கிளைகள் போன்றவையாகவும், எண்ணிறந்த ஜீவராசிகளாக இறைவன் விளங்குகிறார் என்பதைக் குறிககிறது. மரத்தின் வேரில் பீடம் போட்டு, அதில் அம்மை அப்பராக விளங்குகிற அமைப்பாகச் செய்தல். இதன் தத்துவம் இத்தகைய சிருஷ்டிக்கெல்லாம் இறைவன் வேராக இருப்பது அருள் என்ற சக்தியோடு கூடிய சிவம் என்பதாகும்.

**அடுத்த வாஹனம் சூரிய, சந்திரப் பிரபைகள் :**

இதன் தத்துவம், விருத்திக் கிரம ஸ்திதிக் கோலம், உலக உயிர்கள் பிழைத்திருப்பதற்குக் காரணம் சூரிய

வெப்பம், சந்திரக் குளிர்ச்சி. வெப்பத்தால் கடல் நீர் ஆவியாகி மேகங்கள் உண்டாகி மழை பொழிந்து பயிர் பச்சைகள் செழித்து உணவு உற்பத்தியாகி உயிர் வாழ உணவளித்துக் காக்கும் தன்மையன். மற்றும் எல்லா வகையான தொழில்களுக்கும் மூல சக்தியாய் விளங்குகிறது சூரிய, சந்திர சக்திகள். எனவே இறைவனது ஸ்திதி தொழிலுக்கு அறிகுறியாகும் இந்த வாகன உலா.

## அடுத்து ரிஷப வாகனம் - (காளை வாகனத்தில்) அல்லது நந்தி வாகனத்தில் எழுந்தருளல் :

அநேக சிவனடியார்களுக்கு அம்மை அப்பராக ரிஷப வாகனத்தில் காட்சி கொடுத்து இருக்கிறார், என அறிந்தோம். ரிஷபம் என்பது எந்த விதமான குற்றமும் இல்லாதது சுத்த வெள்ளை நிறமுடைய காளை, சமம், விசாரம், சந்தோஷம், சாது சங்கமம் என்னும் நான்குவித சத்துவ குணமுடையதுமான நான்கு கால்களாக வுடையது. ஆணவமலத்தை ஒழித்து அருளுடன் கூடிய அறிவைப் பணிவுடன் ஏற்று நிற்பதான ஒரு பிறவி காளையோடு இவ்வித முன்மாதிரியான ஆன்மாக்களுடன் தான இறைவன் அன்புடன் தங்கியிருக்கிறார் என்னும் அனுக்கிரக நிலையை ரிஷப வாகனக் காட்சி காட்டுகிறது.

## அடுத்தது நாக சர்ப உருவ வாகனத்தில் எழுந்தருளுதல் :

இது திரோபவம் என்னும் மறைத்தல் தொழிலை உணர்த்தும் காட்சி. நாகம், நஞ்சு, மாணிக்கம், படம் ஆகிய மூன்றையும் கொண்டது. அது வேண்டும் போது தான் காட்டும் வேண்டாத போது மறைத்துக் கொள்ளும். அதோடல்லாமல், தானும் மறைந்திருந்து, வேண்டும் போது புற்றிலிருந்து வெளிவரும் தொழி

முடைய உருவம் என்பது போல இறைவனும் திரோபவத் தொழிலுடையவர். இது குண்டலினி சக்தி, சுழுமுனை, நாடி முதலியவற்றோடு நாம் ஒப்பிட்டுப் பார்க்கும் தத்துவம்.

**அடுத்து யானை வாகனத்தில் எழுந்தருளல் :**

இதன் மீது எழுந்தருளல் லயக்கிரம சிருஷ்டிக் கோலம் எனப்படும். அதாவது ஒடுங்கும் முறையாகும். நாம் கொண்ட விரிந்த பாகுபாடுகள் யாவும் ஒடுங்கி ஒரே பெரிய பிண்டமாகப் பருமனான உடம்பும் கால்களையும் உடைய யானையைப் போல், ஒடுங்கி விடுவது லயகிர மத்தில் கடைசியாக உள்ள சிருஷ்டிப் படியைக் குறிக்கிறது. இக்காட்சியை ஆறாம் நாளில் திருவீதி உலாச் செய்வர்.

**அடுத்து நடராசர் திருவீதி உலா :**

பெருமான், நடராசர் திருஉருவத்தில் பஞ்ச கிருத்தி யங்கள் உள்ளது தோற்றம் துடியதனில் என்ற பாடல் மூலம், ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. இவர் சபையை விட்டு புறப்படுதல், சிருஷ்டி; அபிஷேகம், ஸ்திதி; சாந்தணிதலும், அலங்காரம் தீபாராதனையும் சம்ஹாரம்; வெள்ளை சாத்துப்படி திரோபாவம்; வீதி வலம் வந்து தரிசனம், அனுக்ரகம்; ஆகியவைகளை உணர்த்தவே இப்படி வாகனாதிகளில் அமர்த்தி விழாச் செய்தலாகும்.

**அடுத்த உத்ஸவமாக திருக்கல்யாணம் செய்தல் :**

அம்மை அப்பருக்குத் திருக்கல்யாணம் உணர்த்தும் காரணம் யாதெனில், பரம்பொருளான சிவபெருமா னுக்கும், சக்தியான பார்வதி தேவியாருக்கும், சில நேரங் களில், ஏதாவதொரு காரணத்தை வைத்து, வாக்கு வாதம்

நடைபெறும். அதனால் ஊடல் ஏற்படும். அப்போது தேவியார் கோபமடைந்து பூலோகத்தில் வந்து உதித்து சிலகாலத்திற்குப் பின் மீண்டும் சிவனோடு சேர்வாள். அவ்வாறு ஒரு சமயம் விருக்ஷத்தின் அடியிலிருந்து, அக்னியின் மத்தியிலாவது தபம் செய்வாள். அந்த இடைக்காலத்தில் தேவியைப் பிரிந்து இருக்க முடியாமல் சிவபெருமான் தோன்றிக் காட்சி கொடுப்பார். அதன் பின் அழைத்துச் சென்று, மாலை மாற்றிக் கல்யாணம் செய்து கொள்வார். கல்யாணம் என்பதே மனதை மகிழ்ச்சியாக வைத்துக் கொள்வதற்கு ஏற்ற நிகழ்ச்சிகளை அவ்வப்போது நடத்துவது என்பது பொருள். இத்தத்துவத்தை வைத்துத்தான் உத்ஸவங் களில் ஐந்தாம் நாள் திருக்கல்யாணம் நடைபெறுகிறது.

இறைவனுக்கு நிகழும் இக்காட்சியைக் காண்பது, பக்தர்களுக்கு மிகவும் புண்ணியம் சேரும், பாப தோஷங்கள் பறந்தோடிவிடும், சகல பாக்கியங்களும் எல்லாச் சம்பத்துக்களும் உண்டாகும். திருக்கோயில் களில் திருக்கல்யாண நிகழ்ச்சியை நடத்திவைக்க ஏற்றுக் கொள்பவர்கள் அஷ்டலட்சுமிகளின் அனுக்ரகம் பெற்று, செல்வ விருத்தி, மற்றும் குடும்ப விருத்தியும் உண்டாகும், என்பதில் ஐயமில்லை.

**அடுத்த நிகழ்ச்சியாகத் திருத்தேர் [illegible] செய்வது :**

இது மகோத்ஸவ விதியில் ஏழாம் நாள் அல்லது ஒன்பதாம் நாள் திருத்தேர் வீதிஉலாச் செய்வார்கள்

**திருத்தேரின் தத்துவத்தை முதலில் காண்போம் :**

ஒரு தேரின் அமைப்பில் எட்டு அடுக்குகள் அமைந் துள்ளன. இந்த எட்டு அடுக்குகள், [illegible] விராட்பிரம்ம சொரூபமாகும். தேரின் முப்பத்து முக்கோடி தேவர்களும்

யக்ஷர்களும், கின்னர், கிம்புருடர்களும், கந்தர்வர்களும், குத திரக்கணிகையர்களும், ரிஷிகளும வசிப்பார்கள் எனக் கருதப்படுகிறது. இவர்களின் சிற்ப வடிவங்கள் தேரின் அடிப்பாகத்தில சுற்றிலும், செதுககப்பட்டிருககும. இத் தேரின் அமைப்பு அண்ட பிண்டததிற்குச் சமமாகும். உச்சி யிலிருக்கும் கலசகும்பம், சோட சாந்தம், அதற்கு அடுத்த கீழ் அடுககு துவாத சாந்தம். அதற்கு அடுதத கீழ்அடுககு மஸ்தஹஸ்தானம். அதற்கு அடுத்த கீழ் அடுக்கு மத்திய மஸ்தகஸ்தானம். அதற்கு அடுதத கீழ் அடுக்கு மஸதக அந்தஸ்தானம். அதற்கு அடுத்த கீழ் அடுககு புருஷ மத்திய ஸ்தானம். நடுவில் தாங்கும குத்துக் கால்கள் முன் மூன்று துறைகள, மூனறு கண்கள, பன்னவை சிகையும், இடது, வலது காதுகளுமாகும்; இறைவன் எழுந்தருளியிருக்கும் கேடய பீடம், முப்பால் குதிரைகள்; சூரிய சநதிரக் கலைகள்; சாரதி அக்னிக் கலை; இவை நாசியாகும்.

அடுத்த அடுக்கு கண்டஸ்தானம். அதையடுத்த அடுக்கு இருதயஸ்தானம். அதையடுத்து நாபி என்பதாகும். அதற்கடுத்த அடுக்கு குண்டலினி ஸ்தானம். தேரின் பத்துச் சககரங்களும் தசவாயுக்கள்; இறைவன் இதற்குக் கர்த்தா; தான் ஒருவனே என்றுணர்த்தி இவ்வாறு அமைந்த பிண்ட தத்துவ சரீரமாக்கி, ரதத்தின் தசவாயுக் களை சககரங்களாக நிறுததி, அசைவற்ற மனத்தை உநதி குண்டலினியிலிருநது நாபிக்கும் அதிலிருந்து கண்டத்திற்கும், அதிலிருந்து வாய்க்கும் ஏற்றி லயப்படுத்தி முறையே தேர்க்குதிரையாம் நாசிககும் அங்கிருந்து கண்வழியாகவும், நடுவழியாகவும், மேல் நோக்கிப் புருவ மத்திக்கும், ஏற்றி லயப்பட்டு சும்மா இருந்தபடி இருக்கும் நித்திய சுகியாய் இருந்திடல் வேண்டும் என்ற லயச்கிரமத்தைக் காட்டுகிறது மேலும் தேர் திரிபுராதிகளைச் சிவன் சிரித்து எரித்து ஆன்ம கோடி களைக் காத்தது. ஸ்திதித் தொழிலுக்கும் இது அறிகுறி யாகிறது.

இந்தவிதத் தத்துவங்கள் நிறைந்த தேரில் சிவனார் திருவீதி உலா வருவதைத் தெரிசிக்க சகல கடாக்ஷங்களும், கோடி புண்ணியங்களும் வந்து சேரும.

## திருவிழாவின் முடிவாக தீர்த்தவாரி செய்தல் :

இதன் முக்கியக் கருத்து, இறைவனது அனுக்ரகம் பெற்ற உயிர்கள் அனைத்தும் அவனது அருட்பெருக்கில் மூழ்குவதற்கு அறிகுறியாகிறது. மங்கள நீராடி, ஆலயத்தினுள் சென்று வணங்குவது மோட்சம் அடைதலைக் குறிக்கிறது. இப்படிப் பத்துநாள் விழாவை நினைந்து, நினைந்து பரம் பொருளைப் போற்றுவார், பரகதி அடைவார்கள என்பது ஆலய வழிபாட்டின் முழுப் பயனாகும். மானிடர்க்கு இவை தவிர வேறொரு பேரின்ப நிலை எங்கே கிட்டும்.



# 16. நித்திய கடமைகள்

உலகில் வாழும் மக்களுக்கு தற்கால நாகரீகப் போகஇிற்கு ஏற்றாற் போல நாள்தோறும் காலை எழுந்த திலிருந்து இரவு படுத்துத் தூங்கப் போகும் நேரம் வரை கடமைகள் மலிந்து கிடக்கின்றன. அவையெல்லாம் நல்ல கடமைகள் என்று சொல்லி விட முடியாது கால வேகத் திற்குத் தகுந்தபடி ஒரு நிலையானதாக இல்லாமல் அவ்வப் போது வந்து போகும் வேலைகளே தவிர ஒரு லட்சி யத்திற்காக மேற்கொள்ளும் கடமைகள் அல்ல.

எல்லாவகையிலும் இன்று எதிர் நீச்சல் போட்டுக் கொண்டிருக்கும் மக்களுக்கு, அன்பு, பண்பு, விஸ்வாசம், தன்மானம், நன்றிச் செயல்கள், தான் பெற்ற கல்விச் சிறப்பிற்காக நின்று காட்டுதல், மூத்தோரின் முதுமொழிப் பயன்கள், ஒழுக்கக் கட்டுப்பாடு, மனம், வாக்கு, செயல் இவற்றின் சீரான பின்பற்றல், போன்றவையெல்லாமே வெகு தூரம் தூக்கி எறிந்து விட்டு குணம் குப்பையிலே, பணம் பந்தியிலே என உடல், பொருள், ஆவி எல்லா வற்றிற்கும் பணம் ஒன்றே பிரதானத் தேவை என மனதில் கொண்டு வாழும் மககளுக்கு மேற்சொன்ன அறிய குணங்கள் அனைத்தையும் ஒரு வியாபாரமாக நினைத்து, அதிலும் அதிக விலைக்குப் போகும் அளவு போகவிட்டுப் பணம் தேடும் மனப் போககு நிலைத்துவிட்ட காலத்தில், நல்ல பயனுள்ள, கடமைகள், இந்தப் போராட்டத்தில் வெற்றி கொள்வதில்லை. ஆனாலும் நீர்க்குமுளி போன்ற வற்றைக் தூக்கியெறிந்துவிட்டு நிலையான கடமைகளை மேற்கொண்டால் பிற்பலன் அதிகம் கிடைக்கும்.

ஒரு உண்மை பிற்காலப் பலன் கிடைப்பதற்கான நித்திய கடமையெனக் கருத்தில் ஒன்றையெடுத்துக் கொண்டால் போதும். அது ஒரு லட்சியத்தை நிறைவேற்றும். அதுவே நமக்கு மூல ஆதாரமாக நின்று நம்மைக காக்கும். அதுதான் பக்தியை அடிப்படையாகக் கொண்டு செய்யும் நித்திய கடமை. இந்த பக்திக் கடமையை நித்திய கடமை எனச் செய்தால், அதிலிருந்து பூத்துக் காய்த்துக் கனி கொடுக்கும். பக்திக் கடமைகளை நித்தியமாகச் செய்தால் அதிலிருந்து ஆயிரம் ஒழுக்கப் பண்புகள நம்மை வந்து சேர்ந்து, துன்பங்கள் அனைத்தையும் நீக்கிக் காக்கும் என்பது பல முன்னோர்கள் கண்ட உண்மையான உறுதி.

ஒரு வழிப் போக்காக, பக்தியின் மயமாகவே அதன் வழியையே பின்பற்றிச் செய்யும் நித்திய கடமைகளினால் மனமும், மனத்தால் உடலும், உடலால் உடமைகள் எல்லாம் சீரடைந்து ஒரு தெய்வ நிலைக்கே கொண்டு வந்து சேர்க்கும் ஐம்புலன்களையும் ஒரு கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரும் போது அசையாத, உண்மையான மனித நிலையை அடைவோம் பக்தியின் வழியில் செய்யும் கடமைகள் பரிபூரணமான வாழ்க்கையளிக்கும். அதில் அமையும் ஆன்மா ஒளி பெறும்.

நிலைபெற்ற ஆன்ம சக்திக்கு மனதை விட்டு மாறாத நித்திய கடமைகளாகச் செய்ய, அதிலும் ஒரு அனிச்சைச் செயலாக மாறுகின்ற அளவுக்கு மனதில் பயிற்சி செய்து கொண்டு செய்ய வேண்டும் கடமைகளை, "அதைச் செய்" 'இதைச் செய்" என்று பிறர் சொல்லிச் சொல்லித் தூண்டிவிட்டு செய்கின்ற அளவிற்குப் போகாமல் நாமாகச் செய்யும் மதிப்பிற்கு மாற்றிக் கொள்ள வேண்டும். எதையும் 'கற்றபின் நிற்க' அதற்குத்தக எனச் செய்ய வேண்டும். எந்த ஒன்றும் பழக்கத்தில் வந்தால் அது வழக்கத்திற்கு தானாக மாறிவிடும்.

இந்து தர்மத்தில் நித்திய கடமையென இறைவழி பாட்டை வலியுறுத்துகிறது. அதையே மநுதர்மத்திலும் முக்கியமாக வலியுறுத்துகிறது. இறை வழிபாட்டுத் தேவையென தன் ஆயத்தமாக முறையான கடமைகளைச் செய்து கொண்டு அதைப் பிறர்க்கும் கற்றுக் கொடுத்துச் செய்தல் வேண்டுமென குறிப்பாகக் கூறுகிறது. சாதாரண பழக்க வழக்கத்திலிருந்து உயர்ந்த செயல்கள் வரை, நல்லவர்களைக் கொண்டு நல்லவற்றைச் செய் என்னும் நியதியில் நாம் நின்றால் எடுத்துக் கொண்ட கடமைகள் இறைவழிபாட்டிற்குச் சிறப்பாக்கும்.

குறிப்பாக, நித்திய கடமையென எல்லோரும் பின் பற்றி உள்ளத்திற்கும், உடலுக்கும் தூய்மையும், செம் மையும் சேர்க்க கிழ்வருவனவற்றைக் காண்போம்—

1. **அதிகாலைத் துயில் எழுதல் :** அதிகாலைப் பொழுது அதாவது 4 முதல் 5 மணிக்குள் (விடியும் பொழுது 2½ நாழிகைக்கு முன்) எழுந்திருத்தல் மிகவும் நல்லது. அந்த நேரத்தில் வீசும் வெளிக்காற்று சுவாசித்தல் உடல் உறுதிக்கு ஏற்றது. அத்தோடு நில்லாமல் ஆன்மா வுக்கும் ஒரு தூய சக்தி கிடைக்கிறது. இது விஞ்ஞான ரீதியில் கண்ட உண்மை. தெளிந்த சிந்தனை, நினை வாற்றல் இவையும் பெருகும். இந்த நேரத்தில் எழுந்ததும் எதிரே உள்ள சுவாமி படத்தின் மேல் கண் விழித்து வணங்க வேண்டும். இல்லையேல் அவரவர்களின் இரண்டு உள்ளங்கைகளையும் சற்று தேய்த்துவிட்டுக் கைகளைப் பார்த்து வணங்குதல் வேண்டும். ஏனெனில் உள்ளங்கை விரல்களில் லட்சுமி தேவி வாசம் செய்கிறாள். அவள் முகத் தரிசனம் செய்தது போலாகும்.

இதற்கடுத்து சாதாரணமாக அமர்ந்து ஐந்து நிமிட நேரம், இறைவனை தியானம் செய்ய வேண்டும். அதன் பின் வெளியில் சென்று காலைக் கடன்களை முடிக்க வேண்டும். இதில் அதிக கவனம் செலுத்துவது,

துர்நாற்றம் நமது மூக்கில் சுவாஸிக்காதபடி பார்த்தல் வேண்டும் துர்நாற்றம் இருதயத்திற்குக் கெடுகி. ஆகவே தவிர்க்க வேண்டும். சுகாதார விதிகளை மூதாதோர் வகுத்த விதமாக "நாள் இரண்டு" என்பது காலையும், மாலையுமாகக் கழிக்கச் செய்தல் மிக நல்லது.

இதற்கு அடுத்தது நாள்தோறும் நீராடல் செய்தல் வேண்டும். நம் நாட்டில் பருவ காலங்களுக்கு ஏற்றாற் நாம் குளிக்கின்ற முறையை மாற்றிக் கொள்வது நல்லது. எப்படி ஆயினும் ஒரு நாளில் குளிக்காமல் இருக்கக் கூடாது வியாதியஸ்தர்களைத் தவிர, பெரும்பாலும் நாம் குளிர்ந்தநீரில் குளிப்பது நல்லது; உடல் ஆரோக்கியத் திற்கு வழி, சுறுசுறுப்பு, உடல், கை, கால்கள் பலம் பெறும். உஷ்ண நிலையைச் சீராக்கும்.

ஓராண்டின் இடைக்காலத்தில் வாய்ப்பை ஏற்படுத்திக் கொண்டு, கடல் நீரில் ஒரு முறை குளிப்பது புண்ணியம். பல ஆறுகள் சங்கமமாகும் இடமான கடலில் புனித நீரை நிரப்பிப் பல நன்மைகளைச் செய்கிறது கடல் நீராடல் அதனால் சிறந்தது மற்றும் நீர் வீழ்ச்சி இருக்கும் இடங் களுக்கும் சென்று நீராடல் மலையின் மேல் பகுதியில் பல மூலிகைகளில் பட்டு வரும் நீரில் சிறந்த மருத்துவ குணம் உள்ளதால், உடல் உறுதி பெறும். சரும வியாதி நீக்கம், ரத்தக்கட்டு, நீர்ப்பிடிப்புப், மூளைக் கோளாறுகள், நரம்புத் தளர்ச்சி இவையும் முற்றும் நீங்கும். மேற் சொன்னவை எதுவும் உடலுக்கு ஒத்துக் கொள்ளாதவர் கள் வெந்நீரில் குளிக்கலாம். இன்னும் நீராடல்வகைகளில் மேலும் பல மேலான சிறப்புகளைக் கண்டு கொள்ளல் நல்லது.

உலக வழக்கத்தில் அன்றாடம் கடைப்பிடிக்க ஆகமங் களில் கூறப்பட்டவை— நீராடல் ஆறு வகைகளும், பத்துப் பிரிவுகளுமாகும்.

**நீராடலில் ஆறு பிரிவுகளைக் காண்போம் :**

1. ***நித்தியம் :*** இது நாள்தோறும் விடாமல் நீராடுதல்.

2. ***நைமித்தியம் :*** இது சண்டாளர் என்னும் ஒருவனும், மாதவிடாய் பெண்கள், முதலியோர் தொட்டு விட்டால் அவசியம் நீராடல் ஆகும். உயிர் நீத்தவர் வீடு சென்று வருதல், பிணம் எரிந்த புகை படுதல் இவைகளுக்கும் நீராடல் அவசியம்.

3. ***காமியம் :*** இது கடவுளை வேண்டிய நாட்கள், கிருத்திகை, முதலிய புண்ணியங்களுக்கு விருப்பம் பூர்த்தியாகச் செய்யும் செயல்களுக்கு நீராடித்தான் செய்தல் வேண்டும்.

4. ***கிரியாங்கம் :*** பித்ரு காரியங்களைச் செய்யும் பொருட்டு, புரோஹிதர் சொல்லிய விதத்திற்கெல்லாம் நீராடல் செய்தல்.

5. ***மலாபகர்ஷணம் :*** இது எண்ணெய் தேய்த்துக் குளித்தல் என்பது, "வாரம் இரண்டு" என்ற முதுமொழிக் கொப்ப சனி, புதன் நீராடல் சிறந்தது. எக்காரணம் கொண்டும் வியாழனன்று தலைக்கு இவ்விதம் நீராடல் கூடாது. செய்தால் அதிக மறதியுண்டாகும், புத்திபேதம் ஏற்படும்.

6. ***கிரியா ஸ்நானம் :*** புண்ணிய நதிகள், மற்றும் தீர்த்தங்களுக்குச் சென்று நீராடல் மிகச் சிறந்தது. இது பற்றி ஏற்கனவே சொல்லப்பட்டது.

**நீராடலில் பத்துப் பிரிவுகளைப் பார்ப்போம் :**

1. ***வாருண ஸ்நானம் :*** இது நீருக்குள் மூழ்கி மூழ்கிச் செய்தல். கடல், ஆறு, குளம், கிணறு இவற்றில் செய்தல்.

2. ***ஆக்நேய ஸ்நானம் :*** இது பஸ்மம் சிலவற்றைப் பூசிக் கொள்வது. அத்தோடு நின்றுவிடும்.

3. ***மந்திர ஸ்நானம் :*** ஸத்யோ ஜாதாதி மந்திரங்களையாவது, அல்லது அகமர்ஷண சூக்திரத்தையாவது உச்சரிப்பது.

4. ***மானஸ ஸ்நானம் :*** பிரணவத் தியானம் செய்தல்.

5. ***திவ்ய ஸ்நானம் :*** வெய்யிலோடு பெய்யும் மழை நீரில் நனைந்தபடி குளித்தல்.

6. ***மாருத ஸ்நானம் :*** பசுக்களின் பாதத்தூளி காற்றில் கலந்தபடி சரீரத்தில் படும்படி குளித்தல்.

7. ***மிருத்திகா ஸ்நானம் :*** இது சிவாலயங்கள், புண்ணிய நதிகள் முதலிய இடங்களில் உள்ள மண்ணைக் குழைத்து சரீரத்தில் பூசிக் கொள்ளுதல்.

8. ***கௌரவ ஸ்நானம் :*** குருவின் பாத தீர்த்தத்தில் மூழ்குதல், அல்லது புர்ராக்ஷணம் செய்து கொள்ளுதல். (நீரைத் தலையில் தெளித்துக் கொள்ளுதல்.)

9. ***கபில ஸ்நானம் :*** தண்ணீரில் துணியை நனைத்து அந்த ஈர ஆடையால் உடலெங்கும் துவட்டிக் கொள்ளுதல், மட்டுமே.

10. ***பாரிச ஸ்நானம் :*** கங்கை முதலிய புண்ணிய நதிகளின் நீரைத் தீர்த்தமாகத் (அங்கு போய் வர முடியாததால்) தலையில் தெளித்துக் கொளளுதல்.

## மேலும் சில சிறப்பான ஸ்நான வகை

1. ***விரிய ஸ்நானம் :*** கடல், மற்றும் நதிகளில் நீராட வருபவர்கள், செவ்வாய், வெள்ளி ஆகிய தினங்கள் நீங்கி மறற நாட்களில் நீராட வேண்டும். ஏனெனில் அந்த

நாட்களில்தான் நதி தேவதைகளும், கடலரசனும் நீராடலில் சங்கமமாவார்கள். அந்த சமயத்தில் மானிடர் விலகுதல் மிக நல்லது.

**2. கடி ஸ்நானம்:** இது, தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் இடுப்பிற்குக் கீழே நீரால் கழுவி, மேல் உடம்பைத் தண்ணீரில் நனைத்த துணியால் துடைத்துக் கொள்ளுவது

**3 கண்ட ஸ்நானம்:** கழுத்துக்கும் கீழே நீரால் கழுவி மேற்புறத்தை ஈரத்துணியால் துடைத்துக் கொள்ளல்.

**4. புஷ்டி ஸ்நானம்:** இது கிரக தோஷ பரிகாரங்களைச் செய்து கொள்ளும் முன்னால் நீராடுவது.

**5. மிருத்தி காலேபன ஸ்நானம்:** இந்த ஸ்நானம் வைத்திய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது. உடலில் உள்ள வாயு நோய்களும், சரும நோய்களும் குணமடைய சுத்தமான களிமண்ணைப் பிசைந்து தலைமுதல் உள்ளங்கால்வரை பூசிக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட நேரம் வரை இருந்து பிறகு நீராடுதல் ஆகும். முற்காலத்தில் இருந்த இம்முறை தற்காலத்தில் நாட்டு வைத்தியத்தில் ஒரு சில இடங்களில் மட்டுமே கடைப்பிடிககப்படுகிறது.

பொதுவாகவும், குறிப்பாகவும், மேற்கண்ட நீராடல் வகைகளும், முறைகளும், சமயத்திற்கேற்றாற் போல் நடந்தாலும், அகச்சுத்தத்திற்கு எடுத்துக் காட்டாக இருப்பதே புறத்துள்ள சுத்தம். பொது இடங்களில் புறச் சுத்தம் - தூய்மையாகக் காட்டினால் அங்கே அகமும் சுத்தமடைந்து தானிருக்கும் என்பதே தெளிவு. இந்த இரண்டையும், நிலை நிறுத்த நீரால்தான் முடியும்—"நீரின்றி அமையாது உலகம்."

இதற்குப் பின் அமையும் மற்ற கடமைகள், தூய ஆடை உடுத்தல், சமயச் சின்னம் அணிதல், உணவு உண்ணுதல் பிறகு பணி செய்தல், ஆகியவையே.

**தூய ஆடை உடுத்தல் :** நீராடிய பிறகு நாம் உலர்ந்த, தூய ஆடைகளைத்தான் உடுத்த வேண்டும். கந்தையானாலும் கசக்கிக் கட்டு என்ற சுகாதார முதுமொழிக்கேற்ப அழுக்கு நீக்கிய, உலர்ந்த ஆடைதான் முக்கியம். தூர்வாடை ஆடைகளில் வீசினால் பிறருக்குக் கெடுதல் நேரிடும். அதற்கு இடம் கொடுக்கக் கூடாது. புத்தாடை உடுத்துகின்ற நேரத்தில் மங்களகரம் செய்துதான் உடுத்த வேண்டும். ஆடை அணிகலன்கள் ஒரு செல்வம். செல்வத்தை ஏற்றுக் கொள்வது லட்சுமியை வரவேற்பது போன்றதாகும்

**சமயச் சின்னம் அணிதல் :** காலை நேரத்தில் இறைவனை வழிபடுவதற்கு முன் நமது சமயச் சின்னமான திருநீற்றைக் கண்டிப்பாக நெற்றியில் அணிந்து கொள்ள வேண்டும். இது எல்லாம்வல்ல இறைவனை எப்போதும் நினைப்பதாக பழக்கம் ஏற்படும். அவரவர் வழக்கமாக அணியும் சின்னம் எதுவோ அதை அணிந்து கொள்வது நல்லது. அந்த அடையாளத்தோடு கொஞ்ச நேரமாவது இருந்து வழிபாடு செய்வது, இறைவனோடு ஒன்றியிருப்பதற்குச் சமம். அதன் பிறகு உணவு உண்ணல். உணவு உண்ணுதல் சுத்தமான இடங்களில் இருந்து கொண்டு உண்ணுதல் நல்லது. ஏனெனில் சுற்றுப்புறச் சூழ்நிலையில் காற்று, தண்ணீர், உணவுப் பொருட்கள் இவை கெடுதல் கொடுக்காமல் நாலா பக்கங்களிலும் பார்த்துக் கொள்ள வேண்டும்.

எப்பொழுதும் வாயிற்கும், வயிற்றிற்கும் வேலை கொடுத்துக் கொண்டிருக்கிற நாம், வாரத்தில் ஒரு நாள் ஒரு வேளை உபவாசம் அதாவது விரதம் இருக்க வேண்டும். உபவாசம் இருக்கச் செய்வது ஜீரண உறுப்புக்களுக்கு ஓய்வு கொடுத்தது போலாகும். இறைவன் நினைவாக உண்ணா நோன்பு, அவரவர் விருப்பம் போல் திங்கள், வெள்ளி, சனி அல்லது கிருத்திகை, பிரதோஷ

நாள் அல்லது வேறு நாட்களிலும் கடைப்பிடிக்கலாம். எல்லாவற்றிலும் மேலான விரதம் சோமவார விரதம். இது இறைவனுக்கு மிகவும் விசேஷமானது.

அடுத்தது, ''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்ற பழமொழிக் கொப்ப நித்திய கடமையை சரியான நேரத்தில், சரியான செயலை உண்மையாக ஊக்கத்தோடு அவரவர் பணிகளைச் செய்யலாம். பணிக்குப் பின் சற்று ஓய்வு கொள்ளுதல், உடலுக்கும், மனத்திற்கும் ஏற்றது. மாலையில் மீண்டும் குளித்தல் அல்லது கை, கால், முகம் இவைகளை நீரால் கழுவிக் கொண்டு சுத்தப்படுத்தல் சுறுசுறுப்பூட்டும். இரவு உணவிற்குப் பின் சற்று நேரம், பக்தி தரும் நூல்கள், அல்லது அறிவு சார்ந்த நூல்கள் எவையேனும் ஒன்றைக் கண்டிப்பாகப் படித்துவிட்டு பின் தூங்கி முன் எழுதல் என்னும் மொழி போல, அதிகாலை எழுதல், தனக்குத்தான் செய்து கொள்ளும் நித்திய கடமைகளாக முறைப்படுத்தலாம்.

வள்ளுவனார் சொல்லியது போல், எந்தக் கடமையைச் செய்வதாயினும், அதைக் காலம் அறிந்து செய்தல், அதிலும் இடனறிந்து மேற்கொள்ளல் மிக மிக முக்கிய மாகும். அவற்றை எல்லாம் பொதுவாகச் செய்கின்ற நேரத்தில் சில நித்திய கடமைகளாகக் குறிப்பிட்டுச் செய்து வழக்கப்படுத்திக் கொண்டு அதைப் பிறருக்கும் சொல்லிக் கொடுத்துப் பின்பற்றச் செய்தல் இறைவன் திருப்பணிக்கு நேராக இருக்கும். அவை ஒரு பன்னிரண்டு கட்டளைகள் போல மனதில் கொள்ள கீழே வருவன வற்றைப் பழக்கப் படுத்துவோம்.

—நித்திய கடமைக் கட்டளைகள்—

1. நாள்தோறும் அவரவர் இஷ்டதெய்வத்தை எவ்வகையிலும் இடைவிடாது வழிபாடு செய்தல் வேண்டும்.

2. வழிபாடு ஒரு நாளில் ஆறுவேளையும் அல்லது மூன்று வேளையாவது அவசியம் செய்ய வேண்டும்.

3. தெய்வ வணக்கத்திற்குமுன் இந்து சமயச் சின்னங்களான விபூதி, குங்குமம், சந்தனம் அல்லது நாமம் ஏதாவது ஒன்று நெற்றியில் அணிந்து கொள்ள வேண்டும்.

4. வணங்கும் போது தெய்வத்திற்குரிய பாடல் அல்லது மூல மந்திரம் ஏதாவது ஒன்று, இரண்டு சொல்லி வழிபட வேண்டும். மௌனமாக, ஊமையான வணக்கம் கூடாது.

5. ஜபம், அல்லது தியானம், அவரவருக்கு முடிந்த நேரத்தில் தினமும் கொஞ்சமாவது செய்தல் வேண்டும்.

6. விருப்பமான ஏதாவதொரு மந்திரத்தை 108 முறை இல்லத்திலோ அல்லது கோயிலிலோ சொல்லி வழிபட வேண்டும்.

7. தனக்கு முடிந்த நேரம் எடுத்துக் கொண்டு குறைந்தது 1 மணிக் காலமாவது மௌனப் பயிற்சி செய்தல்.

8. நாளதோறும் அல்லது வாரம் ஒரு வேளை, ஒரு கோயிலுக்குச் சென்று வழிபட்டு வருதல் வேண்டும்

9. எந்த ஒரு வேண்டுதலோ, குறிக்கோளோ இல்லாமல் ஒரு நித்திய கடமையாக வழிபாடு செய்தல் வேண்டும். இது இந்து தர்மத்தின் முறை.

10. ஆலய வழிபாட்டில், அன்பு, அமைதி போன்ற அனைத்து ஒழுக்கங்களையும் கடைப்பிடித்தல் ஆண்டவன் கருணைக்குப் பாத்திரமாகும் வழி.

11. புறச் சுத்தமும், மனச் சுத்தமும் பக்திக்கு உண்மை வழி. இதை நாம் நடைமுறைப்படுத்திக் காட்டுதல் தர்மம்.

12. புலாலும், போதைப் பொருளும், உடலுக்கு கெடுதி, உள்ளத் தூய்மை அழிவு. இறைவன் சிந்தனையை எப்பொழுதும் கொள்ள வேண்டும் —என

இவையனைத்தையும் இறைவன் முன் சமர்ப்பணம் செய்து கடமையாற்றுங்கள். அப்போது இறைவன் பக்தி தானாக உண்டாகும்.

பக்தி நெறியில் தன்னை அர்ப்பணித்துக் கொள்ள ஒரு முடிவான உறுதி மொழியாகச் சிலவற்றை ஏற்று நித்திய கடமையைச் செய்யலாம். அவற்றைக் கீழே காணலாம்.

1. பக்தி நெறிதனைத் தளராமல் கடைப்பிடிப்போம். பாவ வினைகள் வளராமல் தடுப்போம்.

2. மநு தர்ம முறைகளை ஒரு மூச்சாகக் கடைப் பிடிப்போம்.

   மனிதகுலப் பண்புகளை ஒரு வீச்சாக வளர்ப்போம்.

3. அகத்தூய்மை புறத்தூய்மை ஆவன செய்து ஆன்ம நேய ஒருமைப்பாடு காப்போம்.

4. உண்மையே பேசி உள்ளம் வளர்ப்போம். உணர்வில் பொறுமை பெரிதும் காப்போம்.

5. சத்துவ குண நலம் கடைப் பிடிப்போம். சாந்த சொரூப நிலைதனை விடாமல் காட்டுவோம்.

6. மும்மலந்தனை முற்றிலும் ஓட்டுவோம். செம்மை நலந்தனை சிந்தையில் காட்டுவோம்.

7. ஐவகை பூதங்களை இன்றே அடக்குவோம். அறநெறி வாழ்க்கை அன்புடன் நடத்துவோம்.

8. அறு பகைவர்களை அச்சமின்றி ஓட்டுவோம். அன்பே தெய்வநெறி எனக் காட்டுவோம்.

9. தர்மம் விரும்பிச் செய்து வாழ்வோம்.
தன்னலம் விரும்பாது பிறர் நலம் பேணுவோம்.

10. கூட்டு வழிபாடு குலபக்கள் மேம்பாடு.
ஆட்டும் மனக் குறைகள் அகற்றிடும் பண்பாடு.

11. வேற்றுமைக்குப் பிறப்பிடம் அஞ்ஞானம்,
ஒற்றுமைக்கு உறுதுணை செய்வது மெஞ்ஞானம்.

12. தன்னம்பிக்கை தெய்வ பக்திக்கு வித்து
தளராத ஆற்றல் தெய்வப் பணிக்கு சத்து.

13. தெய்வ அடியார்களைச் சார்ந்து போற்றுவோம்.
மெய்யான நெறிகளை அவர்கள் வழியில் ஆற்றுவோம்.

14. எல்லோர்க்கும் தேர்ந்த முறை தெய்வ முறை,
பல்லோர்க்கும் பயன ளிக்கும் பக்தித் துறை.

15. பக்தி தரும் நூல்களைப் படித்துப் பயனடைவோம்,
பல்லோர்க்கும் எடுத்துரைத்துப் பயனளிப்போம்.



# 17. ஆன்மாவும், பயனும்

மனிதன் எண்ணி, எண்ணி இயக்குகின்ற அனைத்து இயக்கங்களுக்கும் மிகவும் துணை செய்வது ஆன்மா. இந்த ஆன்மா என்பது ஒரு அரூபியாக நிற்பது. அரூபி— கண்ணுக்குத் தெரியாத ஒரு சக்தி. நாம் உடல் என்பது ஒன்று உள்ளதாக அறிகிறோம். உடலில் உயிர் ஒட்டியிருப்பது நமக்குத் தெரிவதில்லை. என்றோ ஒருசமயம் உடல் கெட்டு உயிர் போகின்ற போது உயிரின் ஆட்டம் நமக்குத் தெரிகின்றது. இந்த ஆன்மாவும் உயிர் போன்றது . உடலோடு ஒட்டியது உயிர்— உயிரோடு ஒட்டியது ஆன்மா. இதை ஒட்டியது என்றும் சொல்ல இயலாது. உயிரோடு எந்த நிலையில் கலந்து ஒன்றுக்குள் ஒன்றாக இருப்பதைக் கண்டு கொள்ள முடியாத அரூப நிலை.

ஆன்மா அரூபமான நிலையிலேயே இயங்குகிறது, ஆன்மாவிற்குச் சாந்தி செய்து கொண்டேயிருந்தால், உயிர் பிரிந்த பின்னும் ஆன்மா சாந்தியடைந்தது என்று முடிப்பார்கள். ஆன்மா கெட்டால் உயிருக்குத் துன்பம், உயிர் கெட்டால் உடலுககுத் துன்பம். "உடலார் அழியின் உயிரார் அழிவர் என ஒரு பாடலில் வந்தாலும், உயிரார் அழியின் உடலாரும் உடனே அழிவர்" என்று ஆன்மாவைப் பொருத்த மட்டும் சொல்லலாம். இப்படி ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்ட நிலை மனிதப் பிறவிக்கே உரித்தானது.

மனித நிலையில் ஆன்மா ஒரு தூய்மையான மனம் என்பது பொருந்தும். மனம் செம்மையானால் மார்க்கம்

நன்மையாகும். மனம் நோய் பிடித்தால் உயிரையும், உடலையும் மாய்க்க முற்படுவதைக் காண்கிறோம். ஆகவே மனம் ஆனந்திக்க வேண்டுமென்பதற்காக உலகில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அதையே ஆண்டவருக்கும் பொருந்துமபடி சொல்லலாம். ஆண்டவனின் மனமகிழ்ச்சிக்காகத்தான் திருவிழாக்கள், திருக்கல்யாணங்கள், சீராட்டல், பாராட்டல் எல்லாம் நடைபெறுகின்றன. அந்த அருள் மனமே, மனிதநிலையை தெய்வ நிலைக்கு உயர்த்தும்.

ஆன்மாக்கள் ஒளிபெற மனம் என்பதின் வாயிலாக உண்மை, நேர்மை, தூய்மை, ஞானம், இவற்றை யெல்லாம் கொண்டு சேர்க்கிறது. ஆன்ம வளர்ச்சிதான் ஆன்மீகப் பிடிப்பிற்கு இடம். அதற்கு இறைப்பக்தி மேலோங்க வேண்டும். அதன் வழியில்தான் ஆன்மீகத்தை வளர்க்க வேண்டும்.

ஆன்மாவானது இரண்டுவித உடம்பு எடுக்கின்றது. ஒன்று ஸ்தூல உடம்பு, மற்றொன்று சூக்கும உடம்பு. பஞ்சபூதங்கள் கூடிப் பரிணமித்த உடம்பு ஸ்தூலவுடம்பு. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் உலக போகங்களை அனுபவிக்கக் கருவியாய் நின்று, மரண காலத்தில் ஸ்தூல உடம்பை விட்டுப் பிரியும் அரூப உடம்பிற்கு சூக்கும உடம்பு என்று சொல்லலாம். இது மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் சேர்ந்து ஆன்மா ஆட்சியில், பல சூக்குமங்களைச் செய்து வெளியேறுகிறது.

நல்வினை செய்த உயிர்கள் ஸ்தூல உடம்பு கழிந்த பின் தெய்வீக உடம்போடு உயர்த்தப் படுகின்றன; அவை மேலுலகங்களில் சென்று இன்பதைப் பெறுகின்றன. அது போலவே, தீவினைக்கு ஏற்ற பாவ உடம்பெய்தி, தீயவற்றோடு இணைந்து கீழ் உலகம் சென்றடைகின்றன. இவை மரணத்தின் பின் மனிதர்க்குத் தோன்றும் ஆன்ம

நிலை. இப்படிப்பட்ட காரண காரியங்களால் ஆன்மாக்கள் துன்பப்படுகின்றன. தூய ஆன்மாக்களின் சாந்த நிலைக்குத் திருப்ப முடிவாகப் பின்பற்றப்பட வேண்டியது பக்தி நெறி ஒன்றே. பக்தியால் எல்லாவற்றையும் சரிசெய்து கொள்ள முடியும. இக்கருத்தை நமக்கு முன் தோன்றிய பல சமய ஆன்மீகப் பெரியோர்கள் பாடி வைத்த தெய்வீகப் பாடல்கள் நமக்கு விளக்குகின்றன.

ஆன்மாவினால் ஆன்மீகத்தை வளர்ப்பதற்கு மெஞ்ஞானப் பெரியோர்கள் பல கருத்துக்களையும தந்துள்ளார்கள். அந்த ஆழ்ந்த உண்மைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள ஆன்ம ஞானப் பயிற்சி பெறவேண்டும். அந்தப் பயிற்சியின் மூலம் பக்குவப்பட்ட மனம் அடைந்து அதனால் புலன்களையும் கட்டுப்படுத்தி எந்த ஒரு சூழ்நிலையையும், ஏற்றதாகச் செய்வதற்கும், ஆன்ம பலம் பெறுவதற்கும் சாந்தமே துணை செய்கிறது.

ஒரு விஞ்ஞான ஆராய்ச்சியின் முடிவான வெற்றிகள் அனைத்திற்கும் ஆன்மபலம் உறுதியாக்குகிறது எனக் கண்டறிந்த உண்மையை வெளிப்படுத்தியுள்ளனர். ஐவகை உணர்வுகளையும் கொண்டு சூக்கும உடம்போடு, விளங்கும் ஆன்மா தான் மட்டும் அவற்றால் திருப்தியடைந்து விடாமல் மற்ற ஆன்மாக்களையும் சாந்தப்படுத்துகின்றதா என்ற ஆராய்ச்சியின் பயன், திருப்திப்படுத்தும் என்ற வெற்றி நம்பிக்கையைத்தான் கொள்ள வேண்டும். ஒரு உணர்வினால் மற்றொரு உணர்வுக்கு தீங்கு வராத வண்ணம் ஆன்மா ஒரு கேந்திரமாக இருந்து சாந்தம் செய்து கொள்ள பக்குவப்பட்ட மனப் பயிற்சியினால் சரி செய்து கொள்கிறது.

புகழோடு தோன்றியதாக எண்ணும் நல்ல மனிதப் பிறவியின் முழு வெற்றிக்கு ஆன்மாவின் பயன்தான் அந்த

பயனுள்ள வெற்றிக்குப் பெரிதும் செயல் படுவது பக்தி நெறிதான். பக்தி நெறியை வளர்த்தால் ஆலயங்களும், அதன் வழிபாடுகளும் சிறந்து ஓங்கும்.

தூய நெறிகள் பலவற்றின் பயிற்சியால் மனதைச் செம்மைப் படுத்தலாம். மனம் எனும் ஆன்மா செம்மையாவதற்கு, நாம் உடற் பயிற்சி, யோகாசனம், தியானம், மௌனம், இவற்றை ஒரு நித்திய கடமையாக விடாமல் செய்தால், எல்வகையான மனத்தையும் செம்மையாக்க இயலும். ஐம்புலன் ஆதிக்கத்தை ஒடுக்கலாம். ஆன்மாவின் பலத்தால் ஆண்டவனின் சக்திகளை அறியலாம். ஆண்டவன் நம்முள் எவ்வாறு இயங்குகிறான் என்பதையும் அறிந்து கொள்ளலாம். ஒரு ஆதியந்த உண்மைப் பரம் பொருள் எவ்வாறு உள்ளான் என்பதை உணரலாம். இவையே நம் ஆன்மாவினால் நமக்குப் பயன் ஆகும்.

ஆலயங்களில் தெய்வத்தின் அருள் ஒளியை நாம் பெற ஆசைப்படும் போது அங்கே ஆன்ம ஒளி கொண்ட பலரும் கூடிச் செய்கின்ற அனைத்து நிகழ்ச்சிகளும் நமக்குச் சொர்க்கத்தைத் தரும். வீடுபேறு அடையச் செய்யும். பேரின்ப நிலை தங்கும். இறைவனை நேரில் காண்பது போன்ற தெய்வ அமைப்பு தோன்றும். ஆகவே ஆலயங்கள் ஒளிபெற, ஆன்ம சுத்தி கொண்ட ஆன்றோரும், அவர்கள் தனைக்கு அடியார்களும், அடியார்களுக்கு அடியார்களாய் நாமும் இருந்து அருட் பிரசாதம் பெறுவோம்.



# 18. வழிபாட்டுப் பாடல்களும் மந்திரங்களும்

நாள்தோறும் இறைவழிபாடு செய்யும்போது கோயி லாக இருந்தாலும் இல்லங்களில் பூஜைகள் செய்வதாக இருந்தாலும் எச்சமயத்தின் வழிபாடாக இருந்தாலும், சில நியதிகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்க வேண்டுவது கடமையாகும்.

அதில் ஒன்று, வழிபடும் போது இறைவனைப் புகழ்ந்து பாடியும், வாழ்த்தியும், அல்லது அவரின் திருவிளையாடல்களைப் பற்றிய சிறப்பினைப் போற்றி யும் அவர் அடியார்களுக்கு அருள் செய்து கொண்ட விதத்தின் மகிமைகளையும் பற்றிய பாடல்களை வாய் கூசாமல், மனமுருகிப் பாடிப் பரவுதல்தான் நாம் செய்யும் சிறப்பு பூஜைக்கு மதிப்பு. தெய்வத்தின் மகிழ்ச்சி, நமக்கு உற்ற பேறு இவை ஒருங்கே அமையும்.

அதுமட்டுமல்லாது, தெய்வம் நமக்குக் கொடுத்த நல்ல உடலில் உள்ள உறுப்புக்களுக்கு வேலையை வணங்கும்போது அவசியம் கொடுக்கப்பட வேண்டும். வெறும் ஊமையாக நின்று கண்களாலும், மனத்தாலும் வணங்கிப் பயன் இல்லை. கலியுக தர்மத்தில் இறைவன் திருநாமங்களை எவ்வளவுக் கெவ்வளவு வாயினால் உச்சரித்துப் பாடுகிறோமோ அவ்வளவிற்கும் அவரது கடைக்கண் பார்வை கிட்டும். அதற்கெனக் கால நேரங் களை ஒதுக்கி வைத்து அந்த அளவுக்குள் சொன்னாலும் போதும். ஆகவே நாம் மனதாரப் பாடுவதற்கு தெய்வ

அடியார்கள் ஏராளமாகப் பாடி வைத்துள்ளார்கள். அவை நித்திய பூஜைக்கென்று பஞ்ச புராணத் திரட்டாகவும், திருப்பாவை, திருவெம்பாவை எனவும், இம்மையில் நலங் கொடுக்கும் இனிய மந்திரங்களாகத் திருமுறைத் திருப்பதிகங்களாகவும், அவற்றில், தொல்வினை தீர்க்கவும், இடர்களை நீக்கவும், செல்வங் கொழிக்கவும், திருமணங் கூட்டவும், நன்மக்கட்பேறு நல்கவும், நாளுங் கோளும் நன்மை செய்யவும், பகைமையைப் போக்கவும், மற்றும், வாக்குவன்மை, கண்ணொளி, இவை வழங்கவும், தீராப்பிணி தீர்க்கவும், இன்னும் பல நலன்களுக்கும் இறைவன் அருள்வாக்குப் போலப் பாடல்கள் நிறைய உள்ளன. அவற்றில் மிக முக்கியமாக இங்கே நித்திய பூஜைககு பஞ்சபுராணத்திரட்டு என்பதைப் பார்ப்போம்.

வாரத்தில் ஏழு நாட்களுக்கு ஒவ்வொரு நாளும் ஐந்து விதப் பாடல்களாகப் பிரித்துப் பாட; தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் என இவ்வைந்தையும் சேர்த்துப் பாடி முடித்துப் பூஜைகள் செய்ய வேண்டும். இனி இவற்றைக் காண்போம்.

## 1. ஞாயிற்றுக் கிழமை

### 1. தேவாரப் பாடல்

திருச்சிற்றம்பலம்

நன்றுடையானைத் தீயதிலானை நரை வெள்ளேறு
ஒன்றுடையானை உமையொருபாகம் உடையானை
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பளிக்
குன்றுடையானைக் கூறவென் உள்ளங்குளிரும்மே.

1ம் திருமுறை, திருச்சிராப்பளி

—திருஞான சம்பந்தர் அருளியது.

## 2. திருவாசகம்

உடையாள் உன்றன் நடுவிருக்கும் உடையாள் நடுவுள்
நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் அடியேன்
உன்
அடியார் நடுவுள் இருக்கும் அருளைப்புரியாய்
பொன்னம்பலத் தெம்
முடியா முதலே என்கருத்து முடியும் வண்ணம்
முன்னின்றே.

8 ம் திருமுறை
—திரு மாணிக்க வாசகர்

## 3. திருவிசைப்பா

தனதன் நற்றோழா சங்கரா சுலபாணியே தாணுவே
சிவனே
கனக நற்றாணே கற்பகக் கொழுந்தே கண்கள்
மூன்றுடைய தோர் கரும்பே
அனகனே குமர விநாயக சனக அம்பலத்தரசே கரனே
உனகழல் இணையென் நெஞ்சினுள் இனிதாத்
தொண்டனேன் நுகருமா நுகரே.

9ம் திருமுறை
—திருமாளிகைத் தேவர்

## 4. திருப் பல்லாண்டு

மன்னுக தில்லை வளர்க நம் பக்தர்கள் வஞ்சகர் போயகல
பொன்னின் செய் மண்டபத்துள்ளே புகுந்து
புவனியெல்லாம் விளங்க
அன்ன நடை மடவாள் உமைகோன் அடியோமுக்
கருள்புரிந்து
பின்னைப் பிறவியறுக்க நெறிதந்த பித்தற்குப் பல்லாண்டு
கூறுதுமே.

9 ம் திருமுறை
கோயில் சேந்தனார் அருளியது

## 5. பெரிய புராணம்

உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

12-ம் திருமுறை பாயிரப்பகுதி சேக்கிழார் சுவாமிகள்.

திருச்சிற்றம்பலம்
தில்லையம்பலம்

# 2. திங்கட் கிழமை

## 1. தேவாரம்

திருச்சிற்றம்பலம்

நல்லானை நான்மறை யோடிய லாறங்கம்
வல்லானை வல்லவர் பால் மலிந் தோங்கிய
சொல்லானைத் தொன்மதிற் காழியே கோயிலாம்
இல்லானை ஏத்த நின்றார்க்குள (து) இன்பமே

2-ம் திருமுறை திருமங்கலக்குடி —திரு ஞான சம்பந்தர்

## 2. திருவாசகம்

பரவுவார் இமையோர்கள் பாடுவன நால்வேதம்
குரவுவார் குழல் மடவாள் கூறுடையாள் ஒரு பாகம்
விரவுவார் மெய்யன்பின் அடியார்கள் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள் காண்பாரோ அம்மானே.

8-ம் திருமுறை திருச்சதகம் திரு மாணிக்கவாசக சுவாமிகள்.

### 3. திருவிசைப்பா

சேவேந்து வெல்கொடி யானே என்னும்
    சிவனேஎன் சேமத்துணையே என்னும்
மாவேந்து சாரல் மகேந்திரத்தில்
    வளர்நாயகா இங்கே வாராய் என்னும்
பூவேந்தி மூவாயிரவர் தொழப்
    புகழேந்து மன்று பொலிய நின்ற
கோவே என்னும் குணக்குன்றே என்னும்
    குலாத் தில்லை அம்பலக் கூத்தனையே

9-ம் திருமுறை — கோயில் - திருமாளிகைத்தேவர்

### 4. திருப்பல்லாண்டு

மிண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள்
விரைந்து வம்மின்
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி ஈசற்காட் செய்மின்
குழாம் புகுந்து
அண்டங் கடந்த பொருள் அளவில்லதோர் ஆனந்த
வெள்ளப் பொருள்
பண்டும் இன்றும் என்றும் உள்ள பொருள் என்றே
பல்லாண்டு கூறுதுமே.

9-ம் திருமுறை- கோயில்- சேந்தனார் அருளியது.

### 5. பெரிய புராணம்

ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள அளப் பருங்
கரணங்கள் நான்கும்,
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும், திருந்து
சாத்துவிகமே ஆக
இந்து வாழ் சடையன் ஆடும் ஆனந்த எல்லையில்
தனிப் பெருங் கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா
மகிழ்ச்சியில் மலர்ந்தார்

12-ம் திருமுறை - சேக்கிழார் சாமிகள்

—திருச்சிற்றம்பலம்—

## 3. செவ்வாய்க் கிழமை

### 1. தேவாரம்

திருச்சிற்றம்பலம்

மருந்து வேண்டில்லிவை மந்திரங் கள்ளிவை
புரிந்து கேட்கப்படும் புண்ணியங் கள்ளிவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே.

3-ம் திருமுறை —திருஞான சம்பந்தர்

### 2. திருவாசகம்

மலையரையன் பொன்பாவை வாணுதலாள் பெண் திருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது என்னேடீ.
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்,
கலைநன்ற பொருள் களெல்லாங் கலங்கிடுங் காண்
சாழலோ.

8-ம் திருமுறை —திருமாணிக்கவாசக சுவாமிகள்

### 3. திருவிசைப்பா

அம்பரா அனலா அனிலமே புவிநீ
அம்புவே இந்துவே இரவி
உம்பரால் ஒன்றும் அறிவொண்ணா அணுவாய்
ஒழிவற நிறைந்த ஒண் சுடரே
மொய்ம்பராய் நலஞ்சொல் முதறி வாளர்
முகத்தலை அகத்தமர்ந்து எனக்கே
எம்பிரானாகி ஆண்ட நீ மீண்டே
எந்தையும் தாயுமா யினையே.

9-ம் திருமுறை —கருவூர்த் தேவர்.

### 4. திருப்பல்லாண்டு

சேவிக்க வந்தவன் இந்திரன்
செங்கண் மால் எங்குந் திசை திசையன்
கூவிக் கவர்ந்து நெருங்கக்
குழாங் குழாமாய் நின்று கூத்தாடும்
ஆவிக்கு அமுதை என் ஆர்வத்
தனத் தினை அப்பனை ஒப்பமரர்
பாவிக்கும் பாவகத்து அப்புறத்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

9-ஆம் திருமுறை —கோயில்—சேந்தனார்

### 5. பெரிய புராணம்

ஆதியாய் நடுவுமாகி அளவிலா அளவுமாகி
சோதியாய் உணர்வுமாகித் தோன்றிய பொருளுமாகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்
போதியா நிற்குந்தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி

12-ம் திருமுறை —சேக்கிழார் சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்

## 4. புதன் கிழமை

### 1. தேவாரம்

திருச்சிற்றம்பலம்

ஆடினா னொருவர் போலும் மலர்கமழ் குழலினாளைக்
கூடினா னொருவர் போலும் குளிர்புனல் வளைந்த
திங்கள்
சூடினா னொருவர் போலும் தூய நன்மறைகள் நான்கும்
பாடினா னொருவர் போலும் பழனத் தெம் பரனாரே.

4-ம் திருமுறை —திருநாவுக்கரசு சுவாமிகள்

## 2. திருவாசகம்

நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன்
புலனா யமைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து
உலகே ழெனத் திசைபத்தென் தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ.

8-ம் திருமுறை —திருமாணிக்கவாசக சுவாமிகள்

## 3. திருவிசைப்பா

அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டோ
அன்பொடு தன்னை அஞ்செழுத்தின்
சொற் பதத் துள்வைத்து உள்ளம் அள்ளூறும்
தொண்டருக்கு எண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன் மாளிகையும்
பவள வாயவர் [illegible] முலையுங்
கற்பகப் பொழிலும் முழுதுமாங் கங்கை
கொண்ட சோளேசரத் தானே.

9-ம் திருமுறை —கருவூர்த் தேவர்

## 4. திருப்பல்லாண்டு

சேலுங் கயலும் திளைக்குங்
கண்ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்
குமென்று புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியா நெறி
தந்து வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்து நின்
தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

9-ஆம் திருமுறை —சேந்தனார்

### 5. பெரிய புராணம்

சொல்வ தறியேன் வாழி தோற்றிய தோற்றம் போற்றி
வல்லை வந்தருளி என்னை வழித் தொண்டு கொண்டாய்
போற்றி
எல்லையில் இன்பவெள்ளம் எனக்கருள் செய்தாய் போற்றி
தில்லையம் பலத்து ளாடும் சேவடி போற்றி என்ன.

12-ம் திருமுறை —சேக்கிழார் சுவாமிகள்

## 5. வியாழக்கிழமை

### 1. தேவாரம்

திருச்சிற்றம்பலம்

விண் ணுளார் தொழுதேத்தும் விளக்கினை
மண் ணுளார் வினைதீர்க்கும் மருந்தினை
பண் ணுளார் பயிலுந்திருக கோளிலி
அண் ணலாரடி யேதொழு துய்ம்மினே.

5-ம் திருமுறை — திருநாவுக்கரசு சுவாமிகள்

### 2. திருவாசகம்

குறைவிலா நிறைவே கோதில அமுதே ஈரிலாக்
கொழுஞ்சுடர்க்குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறா நீர்போற் சிந்தை வாய்ப்பாயும் திருப்பெருந்
துறையுறை சிவனே
இறைவனே நீயென் உடலிடங் கொண்டாய் இனியுன்னை
என்னிரக்கேனே

8-ஆம் திருமுறை — திரு மாணிக்கவாசக சுவாமிகள்

### 3. திருவிசைப்பா

செம் பொனே பவளக் குன்றமே நின்ற
திசை முகன் மால் முதற் கூட்டத்து
அன்பரானவர்கள் பருகும் ஆரமுதே
அத்தனே பித்தனே னுடைய
சம்புவே அணுவே தாணுவே சிவனே
சங்கரா சாட்டியக் குடியார்க்கு
இன்பனே எங்கும் ஒளிவற நிறைந்து ஏழ்
இருக்கையில் இருந்தவாறு இயம்பே.

9-ஆம் திருமுறை —கோயில் சேந்தனார் அருளியது

### 4. திருப்பல்லாண்டு

பாலுக்குப் பாலகன் வேண்டி
அமுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள்
செய்தவன் மன்னிய தில்லை தன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற
சிற்றம் பலமே இடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல்
லானுக்கே பல்லாண்டு கூறுதுமே

### 5. பெரிய புராணம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞானசம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

12-ம் திருமுறை —திரு சேக்கிழார் சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்

## 6. வெள்ளிக்கிழமை

### 1. தேவாரம்

திருச்சிற்றம்பலம்

வேதங்கள் வேள்வி பயந்தார் போலும்
விண்ணுலகு மண்ணுலகு மானார் போலும்
பூதங்களாய புராணர் போலும்
புகழ வளரொளியாய் நின்றார் போலும்
பாதம் பரவப் படுவார் போலும்
பக்தர்களுக் கின்பம் பயந்தார் போலும்
ஏதங்களான கடிவார் போலும்
இடைமருது மேவிய ஈசனாரே.

6-ம் திருமுறை —திருநாவுக்கரசு சுவாமிகள்

### 2. திருவாசகம்

பால்நினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்து நீ பாவியேனுடை
ஊனினை உருக்கி உளளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தமாய
தேனினைச் சொரிந்து புறம் புறந்திரிந்த
செல்வமே சிவபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே.

8-ம் திருமுறை —திரு மாணிக்கவாசக சுவாமிகள்

### 3. திருவிசைப்பா

அன்ன நடையார் அமுத
மொழியார் அவர்கள் பயில்தில்லை
தென்னன் தமிழும் இசையும்
கலந்த சிற்றம்பலத் தன்னுள்

பொன்னும் மணியும் நிரந்த
தலத்துப்புலித் தோல் பியற்கிட்டு
மின்னின் இடையாள் உடையாள்
காண விகிர்தன் ஆடுமே.

9-ம் திருமுறை —திருவாலியமுதனார்

4. திருப்பல்லாண்டு

குழலொலி யாழொலி கூத்தொலி
ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவுஞ் சென்று
விம்மி மிகுதிருவா ரூரின்
மழவிடை யாற்கு வழிவழி
ஆளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடி யாரொடுங் கூடி
எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே

9-ம் திருமுறை —கோயில் - சேந்தனார் அருளியது

5. பெரியபுராணம்

தேவர் தேவனைத் திருக்கபாலீச்சரத் தமுதைப்
பாவை பாகனைப் பரிவுறு பண்பினாற் பரவி
மேவுகாதலின் விரும்பிய விரைவில் விழுந்து
நாவின் வாய்மையிற் போற்றினர் ஞானசம்பந்தர்.

12-ம் திருமுறை —சேக்கிழார் சுவாமிகள்

திருச்சிற்றம்பலம்

7. சனிக்கிழமை

1. தேவாரம்

திருச்சிற்றம்பலம்

நெறியே நின்மலனே நெடுமாலயன் போற்றி செயும்
குறியே நீர்மையனே கொடியேரிடை யாள் தலைவர்

மறிசேர் அங்கையனே மழபாடியுள் மாணிக்கமே
அறிவே நின்னையால் இனியாரை நினைக்கேனே.

7-ம் திருமுறை —சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## 2. திருவாசகம்

அணிமுடி ஆதி அமரர் கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து படவ தேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறை யெம்
பேரரு ளாளன் பெண்பால் உகந்து
மணிவலை கொண்டு வான் மீன் விசிறும்
வகையறி வாரெம் பிரானா வாரே.

8-ம் திருமுறை —மாணிக்கவாசக சுவாமிகள்

## 3. திருவிசைப்பா

நேசமுடையவர்கள் நெஞ்சுளே இடங்கொண்டிருந்த
காய்சின மால்விடையூர் கண்ணுதலைக் காமருசீர்த்
தேசமிகு புகழோர் தில்லைமாநகர்ச் சிற்றம் பலத்து
ஈசனை எவ்வுயிர்க்கும் எம்மிறைவன் என்றேத்துவனே

9-ம் திருமுறை திருவாலியதேனார்

## 4. திருப்பல்லாண்டு

ஆரார் வந்தார் அமரர்
குழாத்தில் அணியுடை ஆதிரைநாள்
நாரா யணனொடு நான்முகன்
அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர்
குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும்
ஆடியும் பல்லாண்டு கூறுதுமே.

9-ம் திருமுறை கோயில் —சேந்தனார் அருளியது

### 5. பெரியபுராணம்

என்று மின்பம் பெருகு மியல் பினால்
ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட
மன்று ளாரடி யாரவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்

12-ம் திருமுறை —சேக்கிழார் சுவாமிகள்

### வாழ்த்து

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெலாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

—திருஞானசம்பந்த சுவாமிகள்

## ஒவ்வொரு தெய்வத்திற்கும் உரிய வழிபாட்டுப் பாடல்களும், சொல்லும் மந்திரங்களும்

### 1. விநாயகருக்கு

1. ஓம் கஜானனம் பூதகணாதி ஸேவிதம்
   கபித்த ஜம்பூ பலஸார பக்ஷிதம்
   உமா சுதம் சோக விநாச காரணம்
   நமாமி விக்னேஸ்வர பாதபங்கஜம்.

2. ஓம் ஸர்வ விக்ன ஹரம் தேவம்
   ஸர்வ விக்ன விவர் ஜிதம்
   ஸர்வ சித்திப் பிரதா தாரம் வந்தே
   அஹம் கண நாயகம் மூக்ஷிக வாஹன நமோதக
   ஹஸ்த சாமர கர்ண விலம்பித சூத்ர
   வாமனரூப மஹேஸ்வர புத்ர
   விக்ன விநாயக பாத நமஸ்தே!

## பாடல்கள்

1. ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினை
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

2. முன்னவனே யானை முகத்தவனே முக்திநலம்
சொன்னவனே தூய்மைச் சுகத்தவனே
—மன்னவனே
சிற்பரனே ஐங்கரனே செஞ்சடையஞ் சேகரனே
தற்பரனே நின் றாள் சரண். (அருட்பா)

3. மண்ணுலகந் தனிற் பிறவி மாசற
எண்ணிய பொருள் எலாம் எளிதின் முற்றுறக்
கண்ணுதல் உடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

## அர்ச்சனைக்குரிய மந்திரங்கள்

1. ஓம் கஜானாய நம;
(யானை முகத்தை உடையவனே)
2. ஓம் ஏக தந்தாய நம;
(ஒற்றைக் கொம்புடையவனே)
3. ஓம் விக்ன ராஜாய நம;
(இடையூறுகளை அடக்கும் அரசனானவனே)
4. ஓம் சித்தியப் பிரதாய நம;
(எடுத்த கருமத்தை நிறைவேற்றுபவனே)
5. ஓம் கணாதிபாய நம;
(பூதகணங்களுக்குத் தலைவனானவனே)
6. ஓம் ஹேரம் பாய நம:
(போற்றுதற்குறிய வீரனே)
7. ஓம் வரப்ரதாய நம;
(விரும்பியதைக் கொடுப்பவனே)

8. ஓம் அக்ர பூஜ்யாய நம;
(எல்லோருக்கும் முதலில் வணங்கப்படுவனே)

9. ஓம் பால சுப்ரியாய நம;
(பிள்ளைக்ளுக்கு அன்பானவனே)

10. ஓம் அஸ்வத்த மூலவாஸாய நம;
(அரச மரத்தடியில் என்றும் நிலைத்திருப்பவனே)

11. ஓம் மோதக பக்ஷகாய நம;
(பிரியமான கொழுக்கட்டை உண்பவனே)

12. ஓம் யோகிஹ்ருந் நிவாஸாய நம;
(யோகியர் இதயத்தில் வீற்றிருப்பவனே)

13. ஓம் தூர்வாங்கு ராராத்யாய நம;
(அறுகம் புல்கொண்டு வணங்கப்படுபவனே)

14. ஓம் வித்யா ராஜாய நம;
(கல்வி வித்தைக்கு அரசனானவனே)

15. ஓம் மூஷிக வாகனாய நம;
(மூஞ்ஞுாரை வாகனமாக உடையவனே)

16. ஓம் விநாயகாய நம; ;
(நிகரில்லாத் தலைவனாக உடையவனே)

17. ஓம் அக்ஞான நாசகாய நம;
(அறியாமையை இல்லாது ஒழிப்பவனே)

18. ஓம் பிதரு பக்தி மதே நம;
(தந்தையிடம் பேரன்பு கொண்டவனே)

19. ஓம் வீர கணபதியே நம;
(ஆற்றல் கொண்ட கூட்டத் தலைவனே)

20. ஓம் ஞான கணபதியே நம;
(ஞானியர் கூட்டத் தலைவனே)

21. ஓம் சித்த ஸேவிதாய நம;
(பக்குவப் பட்டவர்களால் போற்றப் படுபவனே)

22. ஓம் க்ரந்தக்ருதே நம;
(நூல் ஆக்குபனே)

23. ஓம் லம்போதராய நம;
(தொந்தி வயிறு உடையவனே)

24. ஓம் வக்ர துண்டாய நம;
(வளைந்த துதிக்கையை உடையவனே)

25. ஓம் மஹேஸ்வர மோதகராய நம;
(மஹேஸ்வரனை மகிழ்விப்பவனே)

26. ஓம் பார்வதீதனயாய நம;
(பார்வதி தேவியின் மைந்தனே)

27. ஓம் ஓங்கார ரூபாய நம;
(ஓம் எனும் பிரணவ மந்திர வடிவமானவனே)

## 2. சிவபெருமானுக்கு

1. சிவாய பரமேஸ்வராய சசிசேகராய நம ஓம்
ஹராய குண சம்பவாய சிவதாண்டவாய நம ஓம்

### பாடல்கள்

2. உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்

3. குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயின் குமிழ்
சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில்
பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்
பெற்றால்
மனிதப் பிறவும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.
—அப்பர்

4. தாயாகி என்னுயிர் தந்தையும் ஆகிஎன் சற்குருவாய்
தேயாப் பெரும்பதம் ஆகிஎன் சத்தியத் தெய்வமுமாய்
வாயாரப் பாடும்நல் வாக்களித் தன்னுளம்
மன்னுகின்
தூயா திருநடராயர் சிற்றம்பலச் சோதியனே
—அருட்பா

5. கல்லாப் பிழையும் கருதாப் பிழையும் கசிந்துருகி
நில்லாப் பிழையும் நினையாப் பிழையும் நின்
ஐந்தெழுத்தை
சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப்
பிழையும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியே
கம்பனே
—பட்டினத்தார்

6. மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திரு ஆலவாயான்
திருநீறே

7. அன்னலே எனையாண்டு கொண்டருளிய அமுதே
விண்ணிலே மறைந்தருள்புரி வேதநாயகனே
கண்ணினாற் றிருக்தக்கயி லையிலிருந்த நின்கோலம்
எண்ணிநான் தொழநயந் தருள்புரி யெனப்
பணித்தார்.

8. பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பான் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும்சொல் ஆனாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி

விண்ணும் நிலனும் தீயானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

### திரு சண்டேசுவரர் துதி

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த புனிதற்கமைக்கும் பொருளன்றி
மின்னுங் கலனாடைகள் பிறவும்வேறு தனக்கென்றமை யாமே
மன்னும் தலைவன் பூசனையில் மல்கும் பயனை அடியார்கள்
துன்னும்படி பூசனைகள் கொள்ளும் தூயனடித் தாமரைகள் கொள்வாம்.

### திரு நந்தித் தேவன் துதி

அங்கணன் கயிலை காக்கும் அகம்படித் தொழின்மை பூண்டு
நங்குரு மரபிற் கெல்லாம் முதற்குரு நாதனாகி
பங்கயம் துளவநாறும் வேத்திரப்படை பொறுத்த
செங்கையெம் பெருமானந்தி சீரடிக் கமலம் போற்றி.

### சிவபெருமான் அர்ச்சனைக்கு

1. ஓம் சிவாய நம;
   (செம்பொருளாய் விளங்குபவனே)
2. ஓம் மகேஸ்வராய நம;
   (பேரிறைவனாக விளங்குபவனே)
3. ஓம் பஸ்மோத்துலித விக்ரஹாய நம;
   (திருநீறு பூசியவனே)
4. ஓம் ஸ்மாசான வாஸினே நம;
   (சுடுகாட்டில் வசிப்பவனே)

5. ஓம் விஸ்வநாதாய நம;
(உலகனைத் துக்கும் தலைவனானவனே)

6. ஓம் சூல பாணயே நம;
(சூலத்தை ஆயுதமாக ஏந்தியவனே)

7. ஓம் த்ரிலோசனாய நம;
(முக்கண் ணுடையவனே)

8. ஓம் மஹா தேவாய நம;
(பெரிய பொருளாய் விளங்குபவனே)

9. ஓம் ம்ருக பாணயே நம;
(மானைக் கையில் ஏந்தியவனே)

10. ஓம் புஜங்க பூஷணாய நம;
(பாம்பை அணிந்து கொண்டவனே)

11. ஓம் டக்காவதே நம;
(உடுக்கையை உடையவனே)

12. ஓம் நடேசாய நம;)
(நடனம் புரிபவனே)

13. ஓம் கால காலாய நம;
(காலத்தை வென் றவனே)

14. ஓம் அர்த்த நாரீஸாய நம;
(மாதொரு பாகத்தவனே)

15. ஓம் பிக்ஷாடனாய நம;
(பிச்சை மேற்கொள்பவனே)

16. ஓம் ஸஹுதாசன சகாயாய நம;
(அக்னியைக் கையில் ஏந்தியவனே)

17. ஓம் கங்காதராய நம:
(கங்கையைத் தலையில் தாங்கியவனே)

18. ஓம் உன்மத்தாய நம;
(பித்தனாக விளங்குபவனே)

19. ஓம் ஊர்த்தவ ரேதஸே நம;
(மேல் நோக்கிச் செல்லும் பிந்துவை
உடையவனே)

20. ஓம் கைலாஸ வாஸாய நம;
(கைலாயத்தில் என்றும் வசிப்பவனே)

21. ஓம் நீலகண்டாய நம;
(நீல நிறக் கழுத்தை உடையவனே)

22. ஓம் பசுபதேய நம;
(காளை வாகனத்தில் ஏறி வருபவனே)

23. ஓம் வ்ருஷ வாகனாய நம;
(உயிர்களுக்குத் தலைவனானவனே)

24. ஓம் த்யா கேசாய நம;
(துறவு வேந்தனானவனே)

25. ஓம் திரிலோக குடும்பினே நம;
(உலகமனைத்தும் ஒரு குடும்பமெனக்
கொண்டவனே)

26. ஓம் ருத்திராய நம
(அழச் செய்பவனே)

27. ஓம் சதா சிவாய நம
(என்றும் மங்களமானவனே)

முருகப் பெருமானுக்கு

1. ஓம் ஸ்கந்தாய கார்த்திகேயாய பார்வதி நந்தனாயச
மஹாதேவ குமாராய ஸுப்ரமண்யாய நம.

2. ஓம் ஸக்தி ஹஸ்தம் விருபாக்ஷம்
ஸகிவாஹனம் ஷடானநம்
தாருணம் திபு ரோகக்னம்
பாவையே குக்குடத்வஜம்,
த்யாயேத் ஷண்முக மிந்துகோடி சத்ருஸ
ரத்னப் பிரபா ஸோபிதம்
பாலார் கத்யுதி ஷட் கிரீட விலஸத்
கேயுர ஹாரரன் விதம்

பாடல்கள்

1. உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன் பன்னிருகை
கோலப்பா வானோர் கொடிய வினை தீர்த்தருளும்
வேலப்பா செந்தில் வாழ்வே.

2. மூவிரு முகங்கள் போற்றி முகம் பொழி கருணை போற்றி
ஏவரும் துதிக்க நின்ற வீராறு தோள் போற்றி—காஞ்சி
மாவடி வைகும் செல்வேள் மலரடி போற்றி அன்னான்
சேவலும் மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

3. ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்க சீரடியார் எல்லாம்

4. விழிக்குத் துணை திருமென்மலர் பாதங்கள் மெய்மை குன்றா
மொழிக்குத் துணை முருகா என்னும் நாமங்கள்
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்த தனி
வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே.

5. முருகனே செந்தில் முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே ஒரு கைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்.

சீர்கொண்ட தெய்வ வதனங்களாறும் திகழ் கடம்பத்
தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத்
தாள்களும்
கூர்கொண்ட வேலுமயிலும் நற்கோழிக் கொடியும் அருட்
கார்கொண்ட வண்மைத் தணிகாசமும் என்
கண்ணுற்றதே.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க
கருவாய் உயிராய்க கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

ஆடும் பரிவேல் அணிசே வல்எனப்
பாடும் பணியே பணியாய் அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியானை சகோ தரனே.

### பெருமானின் அர்ச்சனைக்கு

1. ஓம் குமாராய நம;
   (இளமை வடிவினனே)

2. ஓம் பாலசுந்தராய நம:
   (அழகு நிறைந்தவனே)

3. ஓம் கார்த்தி கேயாய நம;
   (கார்த்திகைப் பெண்களால்
   வளர்க்கபட்டவனே)

4. ஓம் குக்குடத்வஜாய நம;
   (சேவல் கொடியுடையோனே)

5. ஓம் கலிப்ரத்யக்ஷ தேவாய நம;
   (கலிகால கண்கண்ட தெய்வமே)

6. ஓம் குஹாய நம;
(உள்ளத்தில் இருப்பவனே)

7. ஓம் கௌரீ தனயாய நம;
(அம்பிகை மைந்தனே)

8. ஓம் கிரி நிவாஸாய நம;
(மலைகளில் வாசம் செய்பவனே)

9. ஓம் அக்னி ஸூனவே நம;
(அக்னியில் தோன்றியவனே)

10. ஓம் தண்ட பாணயே நம;
(தண்டம் எனும் ஆயுதம் கொண்டவனே)

11. ஓம் ஞான பண்டிதாய நம;
(ஞானமே வடிவெடுத்தவனே)

12. ஓம் ஸ்கந்தாய நம;
(வேகத் துணிவுடையோனே)

13. ஓம் வள்ளி தேவஸேனாபதியே நம;
(வள்ளி தெய்வானை நாயகனே)

14. ஓம் சரவணபவாய நம;
(நாணல் காட்டில் தோன்றியவனே)

15. ஓம் வேத தத்வோபதேசகாய நம;
(வேதத்தின் உட்பொருளை உபதேசித்தவனே)

16. ஓம் மஹேஸ்வர குருவே நம;
(சிவனாருக்கு குருவாய் வந்தவனே)

17. ஓம் ஷடானனாய நம;
(ஆறுமுகங்கள் கொண்டவனே)

18. ஓம் ஸ்வாமி நாதாய நம;
(தகப்பனுக்குத் தலைவனானவன்)

19. ஓம் சகிவாகாய நம;
(மயில் வாகன முடையவனே)

20. ஓம் வேதமந்தர ஸ்வரூபாய நம;
(வேத மந்திரத்தின் வடிவானவனே)

21. ஓம் தாரக ஜேத்ரே நம;
(தாரகாசுரனை வென்றவனே)

22. ஓம் ஸேனான் யே நம;
(படைத் தலைவனே)

23. ஓம் ருத்ர சம்பவாய நம;
(சிவனார் மகனே)

24. ஓம்-ரூபலாவண்ய விக்ரஹாய நம;
(கவரும் அழகு மிகுந்த வடிவமுடையோனே)

25. ஓம் ஸுராராத்யாய நம;
(தேவர்களால் வணங்கப்படுபவனே)

26. ஓம் நாத பிந்து கலாதீதாய நம;
(இயற்கை ஒலிகளுக்கெல்லாம்
அப்பாற்பட்டவனே)

27. ஓம் ஸுப்ரமண்யாய நம
(மேலான பிரம்மத்தைச் சார்ந்தவனே)

### ஸ்ரீ சக்தி தேவிகளுக்கு

ஓம் சர்வ மங்கள மாங்கல்யே சிவே
ஸர்வார்த்த ஸாதிகே
சரண்யே த்ரயம் பகே கௌரி
நாராயணி நமோஸ்துதே
ஸ்ருஷ்டி ஸ்திதி விநாசானாம்
சக்தி பூதே ஸநாதனி
குணாச்ரயே குணமயே
நாராயணி நமோஸ்துதே

சரணாகத— தீனார்த்த
பரித்ராண பராயணே
ஸர்வஸ்யார்த்தி— ஹரேதேவி
நாராயணி நமோஸ்துதே.

ஜய நாராயணி நமஸ்துதே
ஜய நாராயணி நமஸ்துதே
ஜய நாராயணி நமஸ்துதே

## துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதியை மன ஒருமைப்பாட்டுடன் தியானித்து ஆவாஹனம் செய்யும் காயத்ரி மந்திரங்கள்

### 1. துர்கா பரமேஸ்வரி

மஹா தேவ்யைச வித்மஹே
சிவ சக்தியைச தீமஹி
தன்னோ பார்வதி ப்ரசோதயாத்.

### 2, துர்கா லக்ஷ்மி

மஹா தேவ்யைச வித்மஹே
விஷ்ணு பத்னைய்ஸ்ச தீமஹி
தன்னோ லக்ஷ்மிப்ரச் சோதயாத்.

### 3. துர்கா சரஸ்வதி

மஹா தேவ்யைச வித்மஹே
ப்ரஹ்ம பத்னைய்ஸ்ச தீமஹி
தன்னோ சரஸ்வதி ப்ரச் சோதயாத்.

### தேவி அன்னபூரணி மந்திரம்

அன்னதே தேவி தேகயன்னம்
பசுன் புத்ரான்யஸஸ் ஸ்ரீயம்
ஆரோக்யம் ஐஸ்வர்யம் தேஹி
தேவி நமோஸ்துதே:

அன்னபூர்ணே சதா பூர்ணே
சங்கரப் ராண வல்லபே
ஞான வைராக்யம் சித்தியர்த்தம்
பிஷசம் தேஹிச் பார்வதி
சர்வ மங்கள மாங்கல்யே
ஸிவே சர்வார்த்த சாதகே
சரண்யேத்ர யம்பகே நாராயணி நமோஸ்துதே.

பாடல்கள்

1. ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்
ஆதி சக்தி மஹாசக்தி பராசக்தி ஓம்
இச்சா சக்தி கிரியா சக்தி ஞான சக்தி ஓம்
ப்ரஹ்ம சக்தி, விஷ்ணு சக்தி சிவசக்தி ஓம்

2. நாயகி நான்முகி நாராயணிகை நளினபஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாய்கி மாலினி வாராகி சூலினி மாதங்கியென்
நாயகி யாதி யுடையாள் சரண மரணமக்கே.

3. ஒன்றா யருப்பிப் பலவாய் விரிந்து உலகெங்குமாய்
நின்றா ளனைத்தையு நீங்கி நிற்பாளென்ற
னெஞ்சினுள்ளே
பொன்றாது நின்று புரிகின்ற வாவிப் பொருளறிவார்
அன்றாலிலையிற் றுயின்ற பெம்மானு மென்னை
யனுமே.

4. மூவர்க்கும் முதலாகி முத்தொழிற்கும் வித்தாகி
நாவிற்கும் மனத்திற்கும் நாடறியப் பேரறிவாய்
தேவிற்கும் முனிவர்க்கும் சித்தர்க்கும் நாகர்க்கும்
யாவர்க்கும் தாயாகும் எழிற்பரையை வணங்குவாம்

5. சொல்லும் பொருளுமென நடமாடுந் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழுமவர்க்கே யழியாத வராஞ்
செல்லுந் தவநெறியுஞ் சிவலோகமும் சித்திக்குமே.

## சக்தியை வழிபட்டால் மிகுந்த நற்பலனைக் கொடுக்கும் எளிய பூஜை முறை

ஒரு குத்து விளக்குப் போன்ற ஐந்து முகமுள்ள தீபத்தில் அம்பாளை ஆவாஹனம் செய்து, தினமும் வழிபடப் பன்னிரண்டு முக்கிய நாமங்கள் உள்ளன. அவை துவாதச நாமங்கள் எனப்படும். மேல் பகுதியில் குங்குமம் வைத்து, மலர்களால், பன்னிரண்டு நாமங் களைச் சொல்லி அர்ச்சனை செய்வது மிக, எளிய அதே சமயத்தில் மிகுந்த நற்பலனைத் தரும் சக்தி வழிபாடா கும். அகம், புறம் தூய்மை கொண்டு நேம நிஷ்டையோடு (தியானத்தோடு) அமர்ந்து இந்த வழிபாடு செய்பவர் களுக்கு அவர்கள் நினைத்த நல்ல காரியப் பலன் நிச்சய மாகக் கிடைக்கும்.

### துவாதச நாமங்கள்

ஓம் ஸ்ரீ ஆதிசக்தியை நம; 2. ஓம் ஸ்ரீ ப்ருக்ரிதியை நம; 3. ஓம் ஸ்ரீ மூலாதாராயை நம; 4. ஓம் ஸ்ரீ ஆதி தேவ்யை நம; 5. ஓம் ஸ்ரீ மஹாதேவ்யை நம; 6. ஓம் ஸ்ரீ மகா காள்யை நம; 7. ஓம் ஸ்ரீ மகா துர்க்காயை நம; 8. ஓம் ஸ்ரீ மகாவித்யாயை நம; 9. ஓம் மகா லக்ஷ்மியை நம; 10. ஓம் ஸ்ரீ மகா வாராஹ்யை நம; 11. ஓம் ஸ்ரீ வைஷ்ணவ்யை நம; 12. ஓம் ஸ்ரீ ராஜராஜேஸ்வர்யை நம: என்று முடித்து கற்பூர தீபாராதனை செய் கொள்ளல் வேண்டும்.

விளக்கு ஏற்றும் போது ஐந்துவித எண்ணெய் கலந்து ஊற்றி விளக்கேற்றினால், சகல ஐஸ்வர்யங்களோடு கூடிய மேலான பலனைப் பெறலாம்.

1. நெய், 2. நல்லெண்ணெய், 3. விளக்கெண்ணெய் 4. இலுப்ப எண்ணெய் 5. தேங்காயெண்ணெய், அல்லது வேப்ப எண்ணெய்.

## சக்தியின் அர்ச்சனைக்கு

1. ஓம் மஹேஸ்வர்யை நம;
   (பேரரசியானவளே)

2. ஓம் ஜெகதாம்பாயை நம;
   (உலகுக்கு அன்னையானவளே)

3. ஓம் சங்கர்யை நம;
   (நன்மை செய்பவளே)

4. ஓம் சிவாயை நம;
   (மங்கள மானவளே)

5. ஓம் அன்னபூர்ணாயை நம;
   (உணவு கொடுத்துக் கொடுப்பவளே)

6. ஓம் அபயப் ரதாயை நம;
   (பயமின்மையை வழங்குபவளே)

7. ஓம் தயாகர்யை நம;
   (அன்பு காட்டுபவளே)

8. ஓம் கல்யாண்யை நம;
   (மங்களத்தை உடையவளே)

9. ஓம் உமா தேவ்யை நம;
   (ஓங்காரப் பொருள் கொண்டவளே)

10. ஓம் அஜாயை நம;
    (எப்பொழுதும் இருப்பவள். பிறவாதவள்)

11. ஓம் அக்ஷராயை நம:
    (எழுத்து அல்லது ஓசையில் கலந்தவள்)

12. ஓம் அபவர்கப்ரதாயை நம;
    (முக்தியளிப்பவளே)

13. ஓம் த்ரிபுர சுந்தராயை நம;
    (ஜாக்ரத, சொப்பன, சுஷுப்தி எனும்
    மூன்று புரங்களையும் அலங்கரிப்பவளே)

14. ஓம் மஹா வித்யாஸ்யை நம;
(பெருங்கல்வி ஆத்ம ஞானத்தை அளிப்பவளே)

15. ஓம் ராஜ ராஜேஸ்வர்யை நம;
(அனைத்துக்கும் அரசியானவளே)

16. ஓம் மகா சக்த்யை நம;
(பேராற்றல் கொண்டவளே)

17. ஓம் ஸித்திரூபாயை நம;
(எல்லா சித்திகளையும் கொண்டவளே)

18. ஓம் காமேஸ்வர்யை நம;
(ஆசைகளை நிறைவேற்றுபவளே)

19. ஓம் ஜயாயை நம;
(வெற்றி வடிவானவளே)

20. ஓம் ப்ரபன்ன துக்க ஹாரண்யை நம;
(தோன்றும் துயரங்களை நீக்குபவளே)

21. ஓம் பவான்யை நம;
(உயிரை உண்டாக்குபவளே)

22. ஓம் தமோ நாசின்யை நம;
(அக்ஞானம் இல்லாது பண்ணுபவளே)

23. ஓம் ப்ரக்ருதி ரூபாயை நம;
(இயற்கை வடிவானவளே)

24. ஓம் த்ரிகுணாயை நம;
(முக்குண வடிவானவளே)

25. ஓம் நாத ரூபாயை நம;
(ஓசை வடிவானவளே)

26. ஓம் த்யான காம்யாயை நம;
(த்யானத்தால் அடையப்படுபவளே)

27. ஓம் தகரா காசரூபாயை நம;
(சித்தாகாச வெளிவடிவானவளே)

## திருமாலுக்கு

1. சாந்தாகாரம் புஜகசயனம் பத்மநாபம் ஸுரேசம்
விஸ்வாதாரம் ககன சத்ருஸம் மேகவர்ணம் சுபாங்கம்
லக்ஷ்மிகாந்தம் கமலநயனம் யோகிஹ்ருத்
தியானகம்யம்
வந்தே விஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைக
நாதம்

2. அச்யுதம் கேசவம் நாம நாராயணம்
கிருஷ்ண தாமோதரம் வாசுதேவம் ஹரிம்
ஸ்ரீதரம் மாதவம் கோபிகா வல்லபம்
ஜானகி நாயகம் ராமச்சந்திரம் பஜே!

3. விநா வேங்கடேசம் நநாதோ நநாத
ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி
ஹரே வேங்கடேசம் ப்ரஸித ப்ரஸித
ப்ரியம் வேங்கடேசம் ப்ரயச்க ப்ரயச்ச

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்
சேவ்வடி செவ்வித் திருக்காப்பு
அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும் சுடர்
ஆழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே.

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாசலில்
அடியாரும் வானவரும் அரம்பயரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே.

ஊரிலேன் காணியில்லை உறவு மற்றொருவருமில்லை
பாரில் நின்பாத மூலம் பற்றிலேன் பரம மூர்த்தி
காரொளி வண்ணனே என் கண்ணனே
கதறுகின்றேன்
ஆருளர் களைகண்; அம்மா அரங்கமா நகருளானே.

அருமறை முதல்வனை ஆழிமாயனைக
கருமுகில் வண்ணனைக் கமலக் கண்ணனைத்
திருமகள் தலைவனைத் தேவ தேவனை
இருபதமுளரிகள் இறைஞ்சி ஏத்துவாம்.

உயர்வற உயர்நலம் உடையவன் யவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் யவனவன,
அயர்வறும் அமரர்கள் அதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழு என் மனமே.

திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன் செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக் கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று.

### திருமால் அர்ச்சனைக்கு

1. ஓம் விஷ்ணுவே நம;
(எங்கும் வியாபித்து இருப்பவனே)

2. ஓம் வாசுதேவாய நம;
(எல்லா உள்ளங்களிலும் வீற்றிருப்பவனே

3. ஓம் த்ருவாய நம;
(அசையாது நிலைத்திருப்பவனே)

4. ஓம் அச்யுதாய நம;
(நெறி பிறளாதவன்)

5. ஓம் ஹ்ருஷிகேசாய நம;
(இந்திரியங்களுக்கு அதிபதியே)

6. ஓம் புருஷோத்த மாய நம;
(பெருமானாக நின்றவனே)

7. ஓம் லக்ஷ்மீபதயே நம;
(திருமகளின் தலைவனே)

8. ஓம் கோவிந்தாய நம;
(ஜீவர்களின் நிலையை அறிந்தவன்)

9. ஓம் சங்கு சக்ர தாரியே நம;
(வலம்புரி சங்கையும், சுதர்ஸன சக்கரத்தையு
முடையவன்)

10. ஓம் ஜகந்நாதாய நம;
(உலகுக்கெல்லாம் தலைவனே)

11. ஓம் பரமாத்மனே நம;
(பிரபஞ்சத்துக்கு அப்பால் உள்ளவனே)

12. ஓம் யோகேஸ்வராய நம;
(யோகத்திற்குத் தலைவனே)

13. ஓம் ஆதிதேவாய நம;
(முழு முதல் தெய்வமே)

14. ஓம் ஆதிமூலாய நம;
(அனைத்துக்கும் மூலகாரணன்)

15. ஓம் த்ரிவிக்ரமாய நம;
(மூன்றடியால் உலகளந்தவனே)

16. ஓம் ஜனார்த்த னாய நம;
(மக்களால் விரும்பி வணங்கப் படுபவன்)

17. ஓம் பத்ம நாபாய நம;
(தனது நாபியில் உலகை சிருஷ்டித்தவனே)

18. ஓம் கேசவாய நம;
(பிரம்மா, விஷ்ணு ருத்திரன் ஆகிய
மும்மூர்த்தியனே)

19. ஓம் ஸ்ரீ ஹரியே நம;
(பாவத்தைப் போக்குபவன்)

20. ஓம் தர்ம ஸம்ஸ்தாப காய நம;
(தர்மத்தை நிலைநாட்டுபவனே)

21. ஓம் துஷ்ட நிக்ரஹ காரணே நம;
(தீயவர்களை அழித்து ஒழிப்பவனே)

22. ஓம் சிஷ்ட ரக்ஷகாய நம;
(நல்லவர்களைக் காப்பவனே)

23. ஓம் க்ஷேத்ர பாலகாய நம;
(உடலைக் காப்பவனே)

24. ஓம் சர்வதோமுகாய நம;
(எங்கும் சான்னித்ய முடையவனே!)

25. ஓம் ஸத்ய தர்ம பராயணாய நம;
(சத்தியத்திற்கும், தர்மத்திற்கும் கண்ணா
யிருப்பவன்)

26. ஓம் மஹா யஜ்வனே நம;
(பெரிய வேள்வியின் வடிவானவனே)

27. ஓம் நாராயணாய நம;
(திருப் பாற்கடலில் பள்ளி கொண்டவனே)

ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நாராயணாய (ஓம்)
ஓம் நமோ நாராயணாய ஓம் நமோ நமோ
சர்வலோக சாட்சியாகி சகல வேத சார்மாகி
சகல யோக சித்தியாக நின்ற மூர்த்தியே.

# 19. உபயப் பயன்களும் அபிஷேகச் சிறப்புகளும்

தர்மம் தலை காக்கும் என்பது ஒரு தெய்வீகப் பழமொழி. தர்மத்தை யார் ஒருவர் தானாக விரும்பி மனமுவந்து செய்கின்றார்களோ அவர்கள் மீது இறைவனும் மகிழ்ந்து காக்கும் அருட் கருணை கொண்டுள்ளான். பூவுலகில் மக்களுக்குச் செய்வதற்கே மிகுந்த கருணை வைக்கின்றார் என்றால் ஆண்டவனுக்குச் செய்யும் அன்புக் காணிக்கையை அவர் ஏற்காமல் போவதில்லை.

ஆண்டவனுக்குச் செய்யும் அன்புக் காணிக்கை என்பது உபயம் செய்வது என்பதைக் குறிக்கும்.

எந்தெந்த வகையில் உபயங்களைப் பெரிதாகவோ, அல்லது சிறிதாகவோ செய்தாலும், நாம் விரும்பிச் செய்கின்ற அந்தந்த வகையில் எல்லாம் நமக்கு அருள் தந்து காப்பார் என்பது திண்ணம்.

கீழ்க்கண்ட உபயங்களை ஒவ்வொருவரும் தேவைப்பட்ட கோயில்களில் முடிந்தவரை செய்து ஆண்டவனுக்கு அர்ப்பணித்தால் அழியாப் பெருமை அடைவதோடு, ஆண்டவனின் அருள் பெற்று ஆனந்த வாழ்வு அடையலாம்.

ஆலயங்களில் உத்சவங்களுக்கான வாகனாதிகள் மற்றும் படைக் கருவிகள் ஆகியவைகள் செய்து உபயம் செய்தால் மிகுந்த பலன் கிடைக்கும் என்பதைக் கீழ்க்கண்டவாறு அறிந்து கொள்ளலாம்.

1. விநாயகருக்குப் பெருச்சாளி வாகனம் செய்து உபயம் செய்தால்—நாம் நினைக்கும் எந்தக் காரியங்களும் தடையில்லாமல் நடைபெறும்—செல்வமும் பெருகும்.

2. முருகனுக்கு மயில் வாகனம் செய்து வைத்தால் புகழ் உண்டாகும். மக்களிடையே வசீகரம் தோன்றும்.

3. சக்திக்கு—சிம்ம வாகனம் செய்து வைத்தால் அரசாங்க ஆதரவு, அதிகார விருத்தி உண்டாகும், மக்கள் அன்பும் பணிவும் கொண்டு நடப்பார்கள்.

4 சிவனுக்கு— யானை வாகனம் செய்து உபயம் கொடுத்தால்- எத்தனை துன்பங்கள் ஏற்பட்டாலும் அதிவிரைவில் தீர்ந்து விடும். கிராம தேவதைகளின் அருள் சித்திக்கும்.

5. முருகனுக்கும், சிவனுக்கும்- பூதவாகனம் செய்து வைத்தால் சோரபயம்- நிவர்த்தியாகும், தன் செல்வங்கள் பாதுகாக்கப்படும்.

6. உமாமகேஸ்வரருக்கு- ரிஷபவாகனம் செய்து உபயம் தந்தால்- போக சுகங்கள் உண்டாகி குடும்ப செல்வங்கள் பெருகி, எடுத்த காரியங்களும் வெற்றியாகும், தன்மையானவை உண்டாகும்.

7. முருகனுக்கு- ஆட்டுக்கிடா வாகனம் செய்து வைத்தால்- இஷ்டசித்தியுண்டாகும், சகல ரோகங்களும் நிவர்த்தியாகும்.

8. மகேஸ்வரருக்கு- சூரியப் பிரபை செய்து உபயம் கொடுத்தால்- உஷ்ணரோகங்கள் நிவர்த்தியாகும், தீர்க்காயுள் சுகம் உண்டாகும்.

9. சந்திரப் பிரபை— செய்து வைத்தால் சீதள சம்பந்தமான வியாதிகள் நீங்கும்- ஆரோக்கியம் உண்டாகி, மனச் சாந்தி, வம்சவிருத்தியுண்டாகும்.

10. விஷ்ணு, சிவன், சக்திகள்- ஆகியோருக்கு கற்பக விருக்ஷ வாகனம் செய்து வைத்தால், செல்வம் பெருகும். நாடிய பொருள்கள் கைகூடி, நினைத்த காரியங்கள் ஜெயமாகும்.

11. காமதேனு வாகனம் - பராசக்திக்கு, சரஸ்வதிக்கு லக்ஷ்மிக்கு செய்து உபயம் செய்தால், குறையாத செல்வம், பசுவிருத்தி, பால்வளம் இவை உண்டாகும்.

12. சிம்மாசனம்— வாகனம் செய்து வைத்தால் ராஜயோகம், அரசபதவி செல்வாக்குப் புகழ் உண்டாகும்.

13. சிவபெருமான் அம்பாள், முருகன், ரங்கநாதன் இவர்களுக்கு மரத்தால் திருத்தேர் செய்து வைத்தால் வாழ்வில் மேலான சிறப்புகள் அடைவார்கள் அத்தோடு தேவர்கள், கந்தர்வர்கள், ரிஷிகள் முதலானோர்களும் வந்து வாழ்த்தி எல்லாப் புகழையும் அடையச் செய் வார்கள். செல்வம் மிகுந்தவர்கள், வெள்ளித்தேர், தங்கத் தேர், இப்படிப்பட்டவை செய்து வைத்து உபயம் செய்தால் நிறைந்த பொருட்செல்வத்தோடு அருட் செல்வமும் கிடைக்கும்.

படைக்கலன்களான, வேல், திரிசூலம், கொடிக்கம்பம், மலை இடங்களாக இருந்தால், படிக்கட்டுகள் இளைப் பாறும் மண்டபங்கள் அல்லது நிழற்குடைகள், இவைகள் கட்டி உபயம் செய்தால... மக்களின் வாழ்த்தும் இறைவ னின் குளிர்ந்த அருளும் கிடைத்து ஆனந்த வாழ்வு அமையும். இதற்கும் மேலாக கோயில்கள் கட்டுதல், அல்லது கோபுரங்கள் அமைத்தல் மற்றும் உருவச் சிலை கள் செய்து வைத்தல் இவற்றாலும் மேன்மேலும் சிறப் படைந்து தெய்வ தரிசனமும், பேரின்பமும் கிடைக்கும் என்பது நமக்கு முன் இப்படிப்பட்டவைகளைச் செய்து வைத்துக் கண்ட அனுபவஸ்தர்கள், ஆன்மீக அன்பர்கள் ஆகியோரின் உண்மைச் சொற்கள்,

இந்த உபய காரியங்கள் செய்வதெல்லாம் அவரவர்கள் சக்திக்கு ஏற்றபடி எதை எதைச் செய்யலாம். எங்கெங்கே செய்யலாம். எந்த எந்த தெய்வங்களுக்குச் செய்யலாம் என்பதுவும் சமயசந்தர்ப்பங்களுக்கு ஏற்றபடியும் விருப்பமாக அமைவது.

வாழ்நாளில் ஏதாவதொன்றை, எப்போதாவது ஒரு முறை செய்தே ஆக வேண்டுமென்று நினைத்து செய்தல் அவர்களுக்கு உற்ற தெய்வ அருளே!

எதன் மூலமாக வேனும் தர்மத்தைச் செய்தால் உலகில் எல்லாம் காக்கப்படும். "தர்மம் செய்யாது இருப்பினும் அதர்மம் செய்யாதிரு" என்பதே நம் ஆன்றோர் வாக்கு.

அடுத்த மிக முக்கியமான அம்சமாக விளங்குவது அபிஷேக ஆராதனைகள் செய்வது தான். முன் அத்தியாயத்தில் அபிஷேக ஆராதனையின் மொத்தப் பலனைக் கண்டோம். இங்கே தனித் தனியாக ஒவ்வொன்றும் என்னென்ன பலன்கள் என்பதைப் பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

| | அபிஷேக வகை | பலன்கள் |
|---|---|---|
| 1. | தீர்த்தாபிஷேகம் | — பாவங்களை நீக்கும், சாந்தி உண்டாகும் |
| 2 | மஞ்சள் பொடி | — இராஜ வசியம் |
| 3. | பஞ்ச கவ்யம் | — ஆன்ம சுத்தியளிக்கும் |
| 4. | பால் அபிஷேகம் | — ஆயுள் ஆரோக்ய விருத்தி |
| 5. | தயிர் அபிஷேகம் | — பிரஜா விருத்தியளிக்கும் |
| 6. | நெய் அபிஷேகம் | — மோக்ஷம் அளிக்கும் |
| 7. | தேன் அபிஷேகம் | — குரல் வளம், இசை வன்மை |
| 8 | கரும்புச் சாறு | — நித்திய சுகம் அளிக்கும் |

9. நாட்டுச் சர்க்கரை — சத்ரு நாசம் செய்யும்
10. வெல்லம் — துக்க நிவர்த்தியாகும்
11. சாதம் — சகல பாக்கியம் தரும்.
12. தயிர் சாதம் — ஜ்வர நிவர்த்தியளிக்கும்
13. புளி சாதம் — வியாதி நிவர்த்தி தரும்.
14. தேங்கா சாதம் — லக்ஷ்மி கடாக்ஷம்
15. எலுமிச்ச சாதம் — ரோக நாசம் செய்யும்
16. பால் அன்னம் — ராஜயோகமளிக்கும்
17. மிளகு அன்னம் — வியாதி நிவர்த்தியளிக்கும்
18. கற்கண்டு சாதம் — மங்களம் உண்டாக்கும்
19. வடை — சரீரபலம், ஆரோக்யம்
20. பாயசம் — காரிய சித்தியளிக்கும்
21. பானகம் — நினைத்தது கை கூடும்
22. பலவித பக்ஷணங்கள் — மனக்கிலேச நிவர்த்தி
23. வாழைப் பழம் — பயிர் விருத்தி அளிக்கும்
24. பலாப் பழம் — லோக வசியம் செய்யும்
25. மாம்பழம் — சகல வெற்றியும் அளிக்கும்
26. மாதுளம் பழம் — பகைமை நீங்கும்
27. எலுமிச்சம் பழம் — மிருத்யு (எம பயம்) நாசம்
28. பன்னீர் அபிஷேகம் — சாலோக்கியம்
29. பச்சைக் கற்பூரம் — பாவ பயம் நீங்கும்
30. இளநீர் அபிஷேகம் — சத்புத்ர பேருண்டாகும் மிருத்யு நாசம்
31. கோரோசனை — தீர்க்காயுள் சுகமளிக்கும்
32. சந்தனாதி தைலாபிஷேகம் — ஆரோக்கிய சுகத்தை தரும்
33. பச்சரிசி மாவுப் பொடி — மும்மல நிவர்த்தியாகும்

34. சகஸ்ராபிஷேகத் தட்டால் அபிஷேகம் செய்தால் ஞான அறிவு தோன்றும். ஸ்னபன கலசம்—எல்லா சௌக்யத்தையும் கொடுக்கும்.

இவை தவிர இறை மூர்த்தங்களுக்கு ஏற்றபடி ஆடை ஆபரணங்கள் தந்து சேவித்தலும் சிறந்த ஆரோக்ய அபிவிருத்தியுண்டாகும்.

சிவபெருமானுக்கு மெல்லிய இழைகளால் ஆன பட்டு வஸ்திரங்கள், தூயவெண்ணிற ஆடைகள சாத்தியவர்கள் சிவஞான யோகத்தோடு, நீண்டநாள் வாழ்வர். பொது வாக தெய்வங்களுக்குச் சாத்தப்படும் ஆடைகள், அழுத்த மான, தடியான அமைப்பாக உள்ள ஆடைகள் கூடவே கூடாது. சக்தி தெய்வங்களுக்குச் சாத்தும் ஆடைகளில் கருப்பு நிறமானவை கூடாது. வெளிர் நிறங்கள், மஞ்சள் இளம்பச்சை, இளஞ்சிவப்பு, இளநீலம் ஆகியவை மெல்லிய தான விதத்தில் சாத்திச் சேவித்தால் என்றும் இன்பகர மானவையே தோன்றும்.

ஆபரணங்கள் உபயமாகத் தருபவர்கள், சுத்தமான பொன், வெள்ளியால் செய்தவைகள் குற்றமற்ற வைரக்கல் நகைகள் அளிக்கலாம். வெள்ளிக்குடை, வெள்ளித் தங்கக் கவசம் கிரீடம், வெள்ளிவேல் போன்ற வையும் செய்து உபயமாக அளிக்கலாம்

இப்படி எல்லா நன்மைகளையும் ஆலயம் சென்று இறைவனைத் தொழுது அடைவதே நம் வாழ்க்கையின் பயன் என்பதே முற்றிலும் உண்மை.

பிறப்பு முதல் இறப்பு வரை எத்தனை விதமான சாதனைகளை அறிவுத் திறத்தால், பிறமக்களின் உதவி யால் ஆக்கிப் படைத்தாலும் அத்தனைக்கும் உள்ளிருக்கும் மூலகாரணமாக நம் இறைவனது அருளையும் அருட்சக்தி யையும் கொண்டு நேரடியாகவோ மறைமுகமாகவோ நடைபெறுகிறது. நடைபெற்றுக் கொண்டேயிருக்கிறது.

அதைக் கண்கூடாகக் காண்பதற்கு, ஆலயம் தொழுவது சாலவும் நன்று!

எத்தனை பந்த பாசங்கள் உலகத்தாலும், அன்னை தந்தையாலும், சகோதரத்தாலும், உற்றார், உறவினர்களாலும் அன்பர்கள, நண்பர்களாலும், மூத்தோர், இளையோர்களாலும், தோன்றினாலும் அவை தோன்றியது எவ்விதமோ மறைவதும் அவ்விதமாக விரைவில் நிகழும். ஆனால் ஆண்டவனின் பற்று, பாசம் அழியாத நிலையளிக்கும். அதனைத் தேடிக் கொள்ள ஆலயம் தொழுவது சாலவும் நன்று!

பதினாறு செல்வங்கள் என்று சொல்வார்கள். அதற்கும் மேலான ஆயிரம் செல்வங்களை நாம் இங்கு தேடிக் கொண்டாலும் ஆண்டவனின் அருட் செல்வத்தைத் தவிர அட்டாமா சித்தியால் அடையும் அனைத்தும் மேலானது இல்லை. அருட் செல்வத்தை அடைந்து உய்வதற்கு நாம் என்றென்றும் ஆலயம் தொழுவது சாலவும் நன்றெனச் சொல்லி வாழ்க வையகம், வாழ்க இறைவனடியார்கள்.

மெய்யன்பர்கள் வீடு தொழலாம், தேச பக்தர்கள் நாடு தொழலாம். வீடும், நாடும் சிறந்து வாழ இறைவன் ஆலயம் என்றும் நன்றாக வாழ நாம் தொழுது போற்ற வேண்டும் ஆலயம்.

